ANGAYAR MALAR

சப்டம்பர் '94 ரூ. 7/-

# மங்கையர் மலர்



சந்திப்பு : மஞ்சுளா ரமேஷ்



# 'தியேட்டர் முன் போராட்டம் நடத்துங்கள்!'

**ஆர்.வி. உதயகுமாருடன்**

**ஓர் உரையாடல்**

திரைப்படங்களிலே மகாகேவலமாகப் பாடல்கள், காட்சிகள் வருவது பற்றி நிறைய நிறைய எழுதியாச்சு. இந்தியா வெங்குமே பெண்கள் அமைப்புகள் கண்டனம் தெரிவித்துக் கொண்டு இருக்கிறார்கள். சென்சார் போர்டும் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு இருக்கின்றன.

சரி, குறை சொல்வது மட்டுமே நம் வேலையில்லையே! பாராட்டப்படத்தக்க நிலையில் யாரேனும் செயலாற்றினால் அவர்களை நிச்சயம் பாராட்ட வேண்டும் இல்லையா? இளம் டைரக்டர் ஆர்.வி. உதயகுமாரை அந்த வகையில் நாம் கண்டிப்பாக வாழ்த்த வேண்டும்.

'ஒரு நாளும் உனை மறவாத பிரியாத மனம் வேண்டும்!'

'பொன்னுமணி, பொன்னுமணி' 'அருந்ததி பார்க்கும்



# "நீங்களும் எங்களோடு சேர்ந்து குரலை உயர்த்து வீர்களா?"

ஆவணி மாதம்' என நிறைய மென்மை யான பாடல்களை எழுதியிருக்கிறார். அவ ருடைய படங்களில் அவர்தான் பாடலாசி ரியர். அந்தக்கால மென்மையான காதல் பாடல்களைப் போல இவை கேட்கும் போது இனிமையாகிறது. இவரைக் கண்டிப் பாகப் பாராட்ட வேண்டும் இல்லையா?

அடுத்த படத்திற்கான டிஸ்கஷனில் மும்முரமாக ஈடுபட்டிருந்த ஆர்.வி. உதய குமாரைச் சந்தித்தேன். எந்தக் கேள்விக்கும் கோபம் காட்டாத முகம். ஆரம்பத்தில் இருந்து கடைசி வரை நிதானமான தெளி வான பேச்சு. அநாவசியமாக மற்ற வர்களைப் புண்படுத்த விரும்பாத உரையாடல். இப்படி உதயகுமார் நிறைய ஆச்சர்யங்களைக் கொடுத் தார்....

**"டைரக்டர் உதயகுமாராகத்தான் உங்களை நிறைய பேருக்குத் தெரியும். கவிஞர் உதயகுமாராக மாறியது எப்போது?"**

"இல்லை. நான் முதலிலே கவி ஞன்தான். மேட்டுப்பாளையத் திலும், கோபியிலும் நான் படித்த நாட்கள் அற்புதமானவை. பள்ளியி லேயும், கல்லூரியிலும் படிக்கும் போது கம்பராமாயணம் போன்ற பாடங்கள் வரும். அதிலே வரும் எதுகை மோனை என்னை ரொம்பக் கவரும். நானும் அப்படி நிறைய எழுத முயற்சி செய்திருக்கிறேன்.

தவிரவும் கோவை மாவட்டத் திலே மாணவர்களுக்கு நிறைய கவிதைப் போட்டி, நாடகப் போட் டின்னு நடக்கும். நானும் நிறைய பரிசு பெற்றிருக்கிறேன். மெடிக்கல் பண்ணணும்னு ஆசைப்பட்ட நான் குடும்பச் சூழ்நிலை காரணமாக பி.எஸ்ஸி பாடனி சேர்ந்தேன். அதுலே ஒன் ணும் கவரும்படியா எனக்கு இல்லை. சரி, நம்ம கவிதையையாவது வளர்க்கலாம்னுதான் நிறைய போட்டிகளில் கலந்துக்கிட்டேன்.

பரீட்சை முடிச்சுட்டு 'ஷாவாலஸ்' கம்பெ னியிலே பூச்சி மருந்து வினியோகிக்கும் ரெப் ரஸன்டேடிவ்வாக சேர்ந்தேன். அப்போது நிறைய கிராமங்களுக்குப் போய், எப்படி எங்கள் பூச்சி மருந்து சிறந்தது என்று சொல்லு வேன். அந்தச் சமயங்களிலே நான் பார்த்த, கேட்ட நிகழ்ச்சிகள் நிறைய. இந்தச் சமயத் திலேதான் ஃபிலிம் இன்ஸ்டிடியூட்ல மாண



* உதயகுமார் மனைவி சுஜாதாவுடன்...



## "சினிமா பெண்ணிற்கும் நிஜ பெண்ணிற்கும் சம்பந்தமில் லாமல்தான் இருக்கிறது!"

வர்களைச் சேர்க்க விளம்பரம் வந்தது. மற்ற எல்லா துறைக்கும் வயது வரம்பு போய்விட்ட தால டைரக்ஷனுக்கு அப்ளை பண்ணினேன்.

இப்படித்தான் சென்னைக்கு முதல்ல வந்தேன். திரைப்படக் கல்லூரிக்கு நான் வந்தபோது ஆபாவாணனின் 'ஊமை விழிகள்' வெளி வந்தது. அப்போதுதான் திரைப்படக் கல்லூரி மாணவர்களின் திறமையைப் புரிந்து கொண்டார்கள். நானும் பல நண்பர்களின் உதவியோடு டைரக்ஷனை ஆரம்பித்தேன். 'உரிமை கீதம்' படத்திலே சூப்பர்ஹிட்டாக ஆன,

'மெல்ல மெல்ல நடந்து வந்தது பாதம்' பாடல் நான் கல்லூரி நாட்களில் எழுதி னதுதான். அதற்கப்புறம் என்னுடைய படங் களுக்கு நானே பாட்டு எழுதினேன். ஏனென் றால் டைரக்டருக்கே முழுமையாக பாடல், அது சொல்ல வேண்டிய விஷயம் எல்லாம் தெரியும். பாடலாசிரியரிடம் சிச்சுவேஷன் சொல்லி வாங்குவதை விட, முழுமையாக உணர்ந்த என்னால் பாடலில் கதையைக் கொண்டு வந்து விட முடியும். இது எனக்கும்



கலடமாகவும் இருக்கிறது..."

**"நீங்கள் பாடலாசிரியராக வெற்றி பெற்றதை யாராவது பாராட்டியிருக்கிறார்களா?"**

"நிறைய பேர். நேற்று கூட ஒரு பெண் எழுதியிருந்தார், 'உங்க பாடல்களை யாரும் அழிக்க முடியாது. காலத்தை வென்று நிற்கக் கூடியவை'ன்னு. கல்கண்டில் ஒரு கேள்வி பதிலில் 'இதோ ஒரு குட்டி கண்ணதாசன்'னு குறிப்பிட்டிருந்தார்கள். அதே போல் ஒரு படத்தில் விரக்தியுடன் இளைஞன் ஒருவன் பாடுவது போல எழுதியிருந்தேன். 'எழுதி படிச்சு முடிச்சு கிழிச்சு, என்ன பயன்?' அப்படீங்கற மாதிரி. இசைஞானி இளையராஜா, 'ஏம்பா இப்படி நீயே 'நெகடிவ்'வா எழுதலாமா? வேற மாதிரி முயற்சி பண்ணேன்' அப்படீன்னாரு. அவர் சொன்னது சரின்னு தோணிச்சு. 'படிச்சு முடிச்சு சாதிக்க முடியாதது என்ன?' அப்படின்னு மாத்திக்கிட்டேன்..."

**"இந்த ஆபாச பாடல்களுக்கு நடுவிலே நீங்களும் ஒரு கவிஞர். நாங்கள்ளெல்லாம் இப்போ இதற்கு எதிரா குரல் கொடுத் துக்கிட்டு இருக்கோம். நீங்களும் எங்களோடு சேர்ந்து குரலை உயர்த்துவீர்களா?"**

உதயகுமார் சிரிக்கிறார். "நான் இந்தச் சினிமா உலகில் இருக்கிறேன். என்னை விட சீனியராக பல பெரியவர்கள் இருக்கிறார்கள். நான் எப்படி விமர்சனம் செய்ய முடியும். இது சம்பந்தமா எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.

திருப்பூரில ஒரு இலக்கிய கூட்டம். வலம்புரிஜான், ஒரு பேராசிரியர் என நிறைய பேர் பேசினார்கள். ஒவ்வொருத்தரும் மிகக் கடுமையாக இன்றைய சினிமா பாடல்களின் ஆபாசத்தைச் சொல்லி என்னைப் பார்த்துப் பார்த்துப் பேசினார்கள், நான்தான் இதற்குக் காரணம் என்பது போல. கடைசியாக நான் பேசும் போது சொன்னேன்,

'நீங்கள் குறிப்பிடும் எந்தப் பாடலையும் நான் எழுதவில்லை. செக்ஸ், வன்முறை இவற்றை அதிகமாக அசிங்கமாக நான் பயன்படுத்துவதில்லை. அதனால் என்னைக் குற்றம் சொல்லாதீர்கள். ஆனால் ஒன்று - அப்படி அசிங்கமாகப் பாடல்கள் வருமானால் அது பட்டி தொட்டியெல்லாம் பரவுகிறதே, எல்லோரும் முணுமுணுக்கிறார்களே ஏன்? நீங்கள் ஏன் எதிர்ப்பு தெரிவிக்கக் கூடாது? அப்படி ஒரு படமோ பாடலோ வருமானால் அந்தத் தியேட்டர் உள்ள இடத்து மக்களெல்லாம் சேர்ந்து போராட்டம் நடத்தலாமே? இந்தத் திரைப்படம் காண்பிக்கக் கூடாது என எதிர்ப்புத் தெரிவிக்கலாமே? அதே போல அப்படிப்பட்ட பாடலாசிரியர்களை நீங்கள் சந்தித்து உங்களுக்குத் தோன்றும் கண்டனையைக் கொடுங்கள். இப்படியெல்லாம் நீங்கள் செய்தால் ஏன் அப்படிப்பட்ட பாடல்கள் பிரபலமாகின்றன?'

இதை ஏதோ நான் அங்கு சமாளிப்பதற்காகச் சொல்லவில்லை. மக்களிடையே இதற்கு ஒரு கடும் எதிர்ப்பு எழ வேண்டும். கண்டனங்கள் வரவேண்டும். இப்படி ஒரு விழிப்புணர்வு ஏற்படுமானால் அதற்குப் பலன் இருக்கும்."

**"ஆக மொத்தம் நீங்களும் மற்றவர்களைப் போலத்தானே சொல்கிறீர்கள்? அதாவது மக்கள் விரும்புவதால்தான் நாங்கள் தருகிறோம் என்று."**

"இல்லை. மக்கள் விரும்பவில்லை. கிராமத்துப் பக்கம் சென்றால் வெறும் செக்ஸ் மற்றும் வன்முறை இருக்கின்ற படங்கள் ஓடாது. கிராமத்து ஜனங்கள் நல்ல படங்களைத்தான் எதிர்பார்ப்பார்கள். எல்லோருமே குடும்பமாகப் போய் பார்க்கத்தான்

விரும்புவார்கள். நீங்கள் சொல்லுகின்ற வித மான படங்கள் இரண்டு மூன்று வாரங்கள் 'அடலஸண்ட்' பிள்ளைகள், தனிக்கட்டை யாக வாழ்பவர்கள், தனியாகப் பார்க்க விரும்புபவர்கள் இவர்களால் ஓடும். அப்புறம் அடுத்த முறை அப்படத்தை திரையிடவே முடியாது."

**"அதே போல மற்றொரு வாதமும் சொல் கிறார்களே. காப்பியத்திலேயும், கண்ணதாசனும் எழுதாததையா நாங்கள் எழுதுகிறோம் என்று?"**

"பட்டினத்தார், அருணகிரிநாதர் பாடல் களை விட 'செக்ஸி'யான பாடல்கள் வேறு ஏதும் இல்லை என்றுதான் சொல்ல வேண் டும். ஆனால் அவர்கள் அதை எப்போது எழுதினார்கள்? 'நான் இப்படியெல்லாம் கெட்டு அலைந்தேன், இப்போது இந்த மாயை யிலிருந்து விலகி இறைவன் பாதமே சொர்க் கம் என உணர்ந்தேன்' என்று முடிப்பார்கள். பட்டினத்தார் அருணகிரிநாதரை யார் படிப் பார்கள்? அந்தப் பாடல்கள் வேண்டும் என விரும்புபவர்கள் போய் எடுத்துப் புரட்டினால் தான் கிடைக்கும். ஆனால் சினிமா பாடல்கள் அப்படி இல்லை. அது சாதாரணமானவர் களையும் போய்ச் சேருகிறது.

கண்ணதாசனும் செக்ஸியாக எழுதித் தான் இருக்கிறார். 'ஜவ்வாது மேடையிட்டு, சர்க்கரையில் பந்தலிட்டு' என்ற பாட்டு மிக மிக செக்ஸியான பாட்டு. இது இப்படிப்பட்ட பாட்டு என்று யாராவது சொன்னால்தான் தெரியும். யோசித்துத்தான் புரிந்து கொள்ள முடியும். ஆனால் கட்டெறும்பு சேலைக் குள்ளே புகுந்த பாட்டைப் பாருங்கள். இதில் வார்த்தைகளில் செக்ஸ் இல்லை. ஆனால் அது கொடுக்கின்ற கற்பனை மிகவும் ஆபாச மானது. விடலை வயதில் இருக்கும் பையன் கள் ஆபாச உணர்வுகளை அடைகிறார்கள். கண்ணதாசன் சொன்னாலும் அதை கவித்து வத்தோடு சொல்லி விட்டார். ஆனால் இவை நேரடியாக கொச்சையாக இருக்கும் போது தான் அருவறுப்பு உணர்வைத் தருகிறது.

உதாரணத்திற்கு ஒரு கணவன் மனைவி இருவரும் தூங்கப் போகும் நேரம். அவர்களுக் குள் ஏற்படப் போவதை கண்பார்வைகளால் சைகைகளால்தான் உணர்த்துவார்கள். எந்தக் கணவனுமே நேராகப் போய் மனைவியிடம் பச்சையாகப் பேசுவதில்லை. அப்படிப் பேசு வதுதான் ஆபாசம், அசிங்கம். இந்த இரண் டையும்தான் நாம் ஒப்பிட வேண்டியதாக இருக்கிறது."

**"அதே போல உங்களுடைய மற்றொரு கருத் திலும் எனக்கு உடன்பாடு இல்லை. பொன்னுமணி திரைப்படத்திலே ஒரு பெண் கற்பழிக்கப்**



தக்காளி மற்றும் சூப் சாப்பிடும் பொழுது அதில் போட பிரெட் துண்டுகள் இல்லையென்றால் கவலை வேண்டாம். ஜவ்வரிசி வடாம் இருந்தால் பொரித்துச் சிறு சிறு துண்டுகளாக்கி சூப்பில் போட்டுச் சாப்பிடலாம்.

- பாலா

**படுகிறாள். கற்பழித்தவனிடமே போய் அவனைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி கதாநாயகன் கேட்கிறான். ஒரு திருடன் ஒரு பொருளைத் திருடி விட்டான் என்பதற்காக, அவனைப் பிடித்து, 'ஆனது ஆச்சு. அந்தப் பொருளை எடுத்துவிட்டாய். நீயே வைத்துக் கொள்' என்று கொடுப்பீர்களா?"**

தலையைத் தூக்கிக் கொஞ்சநேரம் யோசித்துக் கொண்டிருந்தார் உதயகுமார். "நீங்கள் சொல்வதும் சரியாகத்தான் இருக்கிறது. ஆனால் இவள் கெட்டுப் போய்விட்டாள் என்று தெரிந்த பிறகு இவளை யார் திருமணம் செய்து கொள்ளுவார்கள்?"

**"அவள் கல்யாணம் பண்ணிகிட்டுதான் வாழணுமா?"**

"வேண்டியதில்லை. இதை வேறு விதமாகக் கூட முடித்திருக்கலாம். அவளுக்குத் திருமணம் ஏற்பாடு செய்து, அந்தப் பெண் பைத்தியம் தெளிந்து, 'நான் உன்னைக் கல்யாணம் பண்ணிக்க மாட்டேன். என் மாமாவே என் வாழ்க்கைக்குச் சிறந்த துணை' என்று அவனோடு நடப்பது போல முடித்திருக்கலாம். அது நல்லாக்கூட இருந்திருக்கும். அப்போ கதை டிஸ்கஷனில் நீங்க இல்லையே!" என்று சிரித்தார். எதையோ யோசித்துக் கொண்டிருந்தவர், கொஞ்ச நேரம் கழித்து,

"எங்கள் கிராமத்தில் நடந்த உண்மைக் கதை இது. ஒரு பெண் பண்ணையாரின் வீட்டில் வேலை பார்த்தாள். அழகா இருப்பா. அந்த முதலாளி பையன் வாழைத் தோப்பில் அவளை பலமுறை அனுபவித்தான். நிறைய வாக்குறுதிகள், சத்தியம், நைச்சியமான பேச்சு இப்படி... அப்புறம் ஒரு நாள் முதலாளியின் சம அந்தஸ்துக்கு முதலாளியம்மாவின் அண்ணன் மகளையே நிச்சயம் செய்து விட்டார்கள். பத்திரிகை வந்ததும் அந்தப் பெண் நேராக அவர்களின் ஊருக்கு அரிவாளோடு போனாள். 'உங்கள் பெண் நல்லவள்தான். ஆனால் என்னை ஏமாற்றிய அவன் உங்கள் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டினால் உயிரோடு இருக்கமாட்டான்' என்று அழைப்பிதழை வைத்து அதன் மேல் அரிவாளையும் வைத்தாள். உண்மை தெரிந்ததும் பெண்ணின் தந்தை அத்தனை அழைப்பிதழ்களையும் வாபஸ் வாங்கிக் கொண்டார்.

பஞ்சாயத்தில் பையன் மன்னிப்பு கேட்டு அவளைத் திருமணம் செய்து கொள்வதாகச் சொன்னான். அவள் மறுத்து விட்டாள். நீ இப்படி இன்னும் நிறைய பேரை கெடுக்கக் கூடாதுன்னுதான் உன் கல்யாணத்தை நிறுத்தினேன். உன்னைக் கல்யாணம் செய்துகிட்டா புருஷனா உன்னை மதிக்க முடியாது என்றாள்.

அந்தப் பெண் தனியாக இப்பவும் இருக்கிறாள். அவளை எல்லோரும் ஒரு மாதிரிதான் பார்க்கிறார்கள். அந்தப் பையனுக்கு மூன்று வருடங்கள் கழித்துக் கல்யாணம் ஆகிவிட்டது..."

**என்னை 'இப்போது என்ன சொல்கிறீர்கள்?' என்பது போலப் பார்த்தார். இது தான் இன்றைய பெண்களின் நிலை. "பெண்களுக்கு இழைக்கப்படும் பல அநீதிகள் மெல்ல மெல்ல மாறி வருவது போல, இப்படி அநி யாயத்தை எதிர்த்துப் போராடும் பெண்களையும் இந்தச் சமூகம் ஏற்கும் காலம் வர வேண்டும்" என்றுதான் என்னால் சொல்ல முடிந்தது.**

**"மற்றொன்று. இன்றைக்கு நீங்கள் திரைப் படங்களில் காண்பிக்கும் பெண்களைப் போல**

ஜவ்வரிசி வடாம் செய்யும் பொழுது அதில் சிறிது எள், சீரகம், பெருங்காயப்பொடி, பொட்டுக் கடலை சேர்த்துச் செய்தால், பொரித்துச் சாப்பிடும் பொழுது தட்டை போல் சுவையுடனும், மணமுடனும் இருக்கும்!

பாலா



அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூரியகாந்தி எண்ணெய் • அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூரியகாந்தி எண்ணெய்

# ஊட்டச்சத்து மிக்க உணவே நல்ல உடல் நலத்தின் ஆதாரம்





ஒரு சத்துணவு வல்லுநராக இருப்பதால் உடல் மெலிதாகவும் சீராகவும் இருப்பதன் முக்கியத்துவத்தைப் பற்றி எனக்கு தெரியும். அப்படி உடலை சீராக வைப்பது சுலபமான விஷயமில்லை என்றும் எனக்கு தெரியும்.

இந்த வடிவத்தைப் பெற சிலவற்றை நீங்கள் விட்டுக் கொடுத்தே ஆக வேண்டும். உங்களுக்குப் பிடித்தமான சாக்லேட்டுகள், ஐஸ்க்ரீம், கொழுப்புச் சத்துமிக்க உணவு வகைகள் இன்னும் பற்பல...



இனி நேரடியாக விஷயத்திற்கு வருவோம். உணவுக் கட்டுப்பாடு என்பது கடினமான விஷயம். ஆனால் நீங்கள் எல்லாம் சாப்பிடலாம் என்று சொன்னால் ஏராளமாய் சந்தோஷம். ஆமாம்! நீங்கள் நினைத்த எது வேண்டுமானாலும் சாப்பிடலாம் அத்துடன் சிக் என்ற உடல் வாகுடன் விளங்கலாம். (அதற்கு சிறுசிறு உடற் பயிற்சிகளான அலுவலகத்திற்கு சைக்கிளில் செல்லுதல், நடைப் பயிற்சி செய்தல்... போதுமானது).

ஆனால் இது நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள் என்பதைப் பொறுத்தது. மேலும், எதனால் உங்கள் உணவு செய்யப்பட்டுள்ளது என்பதெல்லாம் பார்க்க வேண்டும். உதாரணமாக சொல்லப் போனால் என்ன சமையல் எண்ணெய் நீங்கள் உபயோகிக்கிறீர்கள் என்பதை எடுத்துக் கொள்கிறேன். எண்ணெய் என்று சொன்னேன் அல்லவா? நல்லது அதற்கு ஒன்றும் மிகுதியாய் யோசனை செய்யத் தேவையில்லை. கொழுப்புச் சத்துமிக்க எண்ணெய் உபயோகப்படுத்துவதைத் தவிர்த்தல் உன்னதமானது. இப்படி எல்லா நலன்களையும் கருத்தில் கொண்டு பார்க்கையில் உடலுக்குப் பாதுகாப்பான நம்பகமான எண்ணெய் சூரியகாந்தி எண்ணெய் ஒன்றுதான்.

**“அனுராக்” ஓர் அன்பளிப்பு**

“அனுராக்” நான் உபயோகப்படுத்தும் சூரியகாந்தி எண்ணெய். இது கொலஸ்ட்ராலை எதிர்க்கக் கூடிய வல்லமை வாய்ந்தது. எனவே உங்கள் இருதயத்திற்கு இது மிகவும் நல்லது. மேலும் இதில் கொழுப்பின் அளவு மிகக் குறைவு; எனவே இது உடலுக்கு மிகவும் பாதுகாப்பானது. மேலும் “அனுராக்” வைட்டமின் E-ஆல் செறிப்பாக்கப்பட்டது.

அதிநவீன முறையில் சுத்திகரிக்கப்படுவதால் “அனுராக்” மிகவும் தூய்மையாகவும்



தெளிவாகவும் கிடைக்கிறது. மேலும் இது உங்கள் உடல் நலத்தைப் பேணுவதோடு உங்கள் உணவையும் ருசிப்படுத்துகிறது.

இத்தனை நலன்களுடன் மற்றொரு விஷயம் என்னவென்றால் “அனுராக்” மலிவான விலையில் கிடைக்கிறது. ஏனெனில் அனுராக்-கின் “பாக்கிங்” செலவுகள் குறைவு.

இப்போது உங்களுக்குத் தெரிந்திருக்கும். “ஊட்டச்சத்து மிக்க உணவே, நல்ல உடல் நலத்தின் ஆதாரம்” என்று. உங்கள் நினைப்பு எனக்கு புரிகிறது. “அனுராக்” உங்கள் வீட்டுக்கு அருகில் உள்ள மளிகைக் கடையிலும் கிடைக்கும்.






எஸ் & எஸ் இண்டஸ்ட்ரீஸ் அண்ட் எண்டர்பிரைசஸ் லிட்-ன் தரமான தயாரிப்பு,
189, அண்ணாசாலை,
சென்னை 600 006.

வைட்டமின் 'E' உடன்கூடியது

அனுராக் அதி சுத்திகரிக்கப்பட்ட சூரியகாந்தி எண்ணெய் • அனுராக் அதி

ஆகஸ்ட் '94 மங்கையர் மலர் இதழில் ஒரு சகோதரி கத்தியைத் தீட்டுவதைப் பற்றி (க்ரைண்டர் உதவியுடன்) குறிப்பிட்டிருந்தார். அதைவிட மிகச் சுலபமான எளிய வழி இதோ : கூர்மை மழுங்கிய கத்தியால் வெங்காயத்தை நறுக்குங்கள். பின் கத்தியைச் சுத்தமான துணியால் துடைக்கவும். உங்கள் அழகிய முகத்தைக் கூராகப் பிரகாசிக்கும் கத்தியில் காண்பீர்கள்!

– சுலோசனா நாகராஜன்



யாரும் இல்லை. ஒன்று மிகக் கவர்ச்சியாகக் காட்டுகிறீர்கள். படித்த பெண்ணாக இருந்தால் 'அடங்காப்பிடாரி, அல்ட்ரா மாடர்ன்' என அமைக் கிறீர்கள். ஆனால் உண்மையில் இன்றைய பெண் கள் எவ்வளவோ சாதனைகளைச் செய்து வரு கிறார்கள். எத்தனை துறைகளில் பெண்கள் வெற்றிக் கொடி நாட்டுகிறார்கள். அவர்களின் வயது ஆண்களை விட 'மெச்சூர்டாக', 'பாலன்ஸ் டாக' விளங்குகிறார்கள். பக்குவப்பட்ட மனது இருக்கிறது. நீங்கள் ஏன் இப்படிப்பட்ட பெண் களை, அவர்களின் போராட்டங்களைக் காட்டக் கூடாது? நிஜ வாழ்க்கைப் பெண்களைக் கொஞ்சம் 'ஃபோகஸ்' பண்ணுங்களேன்...''

''நீங்கள் சொல்வது சரி. சினிமா பெண் ணிற்கும், நிஜப் பெண்ணிற்கும் சம்பந்தமில்லா மல்தான் இருக்கிறது. இதைப் பற்றி நானும் உணர்கிறேன். என்னுடைய அடுத்த பட முயற்சி கூட இப்படிப்பட்டதுதான். ஆனால் ஒரு டைரக்டர் என்ற முறையில் பல விஷ யங்களை நான் கவனிக்க வேண்டும். 'ஹெவி சப்ஜெக்ட்' எடுக்கும் போது புது முகங்களைப் போட்டால் அவர்களிடமிருந்து நாம் நினைத்த எஃபக்ட்டைப் பெற முடியாது. பழகினவர்கள் என்றால் தங்களுடைய இமேஜைப் பற்றி நினைக்கிறார்கள். கோடிக் கணக்கில் முதலீடு செய்யும் தயாரிப்பாளர் களின் கவலையும் உள்ளது. பிறகு விநியோ கஸ்தர்கள். இப்படி எத்தனையோ விஷயங் களின் நடுவேதான் நாங்கள் இயங்க வேண் டியதாக இருக்கிறது.

ஆனாலும் நீங்கள் சொன்ன இந்தக் கருத்தை நான் முயற்சி செய்கிறேன். ஏனென் றால் இத்தனை பேரும் சேர்ந்து தயாரிக்கும் ஒரு படத்தைப் பார்ப்பவன் சினிமா ரசிகன். அதிலும் 'பி' 'ஸி' சென்டர்களில் படம் பார்ப்பவர்கள் சினிமாவில் நடப்பது நிஜம் என நம்புபவர்கள். சினிமா என்பது ஒரு சக்தி வாய்ந்த சாதனம். அதனால்தான் திரைப் படத் துறையைச் சார்ந்தவர்கள் ஆட்சி யையும் பிடிக்க முடிகிறது. எனவே அப்படிப் பட்ட சக்தி வாய்ந்த சாதனத்தில் நல்ல கருத் துக்களைச் சொல்வது, சொல்ல முயற்சிப்பது சிறந்தது.

நீங்கள் சொன்னது போல பொன்னுமணி யில் கற்பழித்தவனிடமே போய் கல்யாணம் செய்து கொள்ளச் சொல்லும் போது, 'ஓஹோ இப்படித்தான் செய்யணும் போல இருக்கு' என்ற எண்ணம் தோன்றலாம். சரி, அப்படி யானால் வேறு எது சரி எனவும் நாம் யோசிக்க வேண்டும், இல்லை - ஏதாவது ஒரு நடைமுறைக்கு ஒத்து வரக்கூடிய முடிவை நாம் பார்க்க வேண்டும். 'கற்பு' என்ற சொல் அதன் நிலை எல்லாம் காலம் காலமாக மாறி வருகிறது உண்மைதான். ஆனால் அடிப்படை கலாசாரம், ஒழுக்கம் அப்படியே இன்றும் சத்தியமாக நிற்கிறது இல்லையா? எனவே எல்லாவற்றையும் மனதில் வைத்தே நாம் மக்களுக்கு, 'பொழுது போக்குச் சாதனம் இது' என்ற ஒன்றையும் மறக்காமல் வெற்றி கரமாகச் சொல்ல வேண்டும்''

**இரண்டு மணி நேரத்திற்கும் மேல் உதய குமார் பேசிக் கொண்டிருந்தார். தவறை தவறு என ஒத்துக் கொள்வதில் இவருக்குத் தயக்க மில்லை. அவரே சொன்னது போல திரையுல கத்தால் எதையும் சாதிக்க முடியும். இன்று இந்த மீடியாவால் நம் நாடு கெட்டுக் குட்டிச் சுவ ராகிப் போய்க் கொண்டு இருக்கிறது. இவரைப் போன்ற இளைஞர்கள் இந்த அவல நிலையைச் சரி செய்வார்களா?**

# மங்கையர் மலர்

## அக்டோபர் இதழ்....

**160 + 64 பக்கங்கள்**

**நவராத்திரிச் சிறப்பிதழ்!**

**இரட்டைச் சிறப்பிதழாக மலருகிறது!**



## நவம்பர் இதழ்....

**தீபாவளிச் சிறப்பிதழ்!!**



படங்கள் : ஓம். சுப்பிரமணியம்

இரண்டு இதழ்களும் வண்ணப்படங்களுடனும், சிறப்பான கட்டுரைகளுடனும் அதிக பக்கங்களுடனும் வெளிவருகின்றன. உங்கள் இல்லங்களில் நவராத்திரியையும், தீபாவளியையும் மங்கையர் மலரோடு கொண்டாடுங்கள்.

இவ்விரண்டு இதழ்கள் மட்டும் தனிப் பிரதியின் விலை ரூ. 8/-. டிசம்பர் '94 இதழிலிருந்து வழக்கம்போல் தனிப் பிரதியின் விலை ரூ. 7/-.

---

பள்ளி, கல்லூரி சீஸன் இது. ஒரு காலத்தில் டாக்டராகவும், இன்ஜினியராகவும், பேராசிரியர் ஆகவும் என ஒரு சிறிய வட்டத்திற்குள்தான் மாணவ மாணவிகள் வளைய வந்தார்கள். ஆனால் இப்போது ஏராளமான படிப்புத் துறைகள், வாய்ப்புக்கள் வளர்ந்துள்ளன. முக்கியமாக தொழில் கல்வி இன்று மிகமிகத் தேவையான ஒன்று. இப்படிப்பட்ட கல்வியைப் போதிக்கும் கல்லூரிகளே இன்று நாட்டிற்கு அவசியம் தேவை.

அந்த வகையில் 'சேலம் சுக்ரால் அகாடமி ஃபார் விமன்' என்ற பெயரில் அண்மையில் கல்லூரியைத் திறந்திருக்கிறார்கள். 'விருதாம்பாள் ஃபவுண்டேஷன் சாரிடபிள் ட்ரஸ்ட்' இதனை நடத்துகிறது. இதன் கரஸ்பான்டென்ட் திருமதி. குப்புரத்தினம் பிரபாகரன் பெரும் தொழிலதிபர் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருக்குத் தொழில் துறை எத்தனை அவசியம் என்பதும் தெரியும். அதனால்தான் ஹோம் மேனேஜ்மெண்ட், ஸ்போக்கன் இங்லீஷ் போன்ற மிக அவசியமான துறைகளுடன் இக்கல்லூரியை ஆரம்பித்து இருக்கிறார்.

திருமதி. இராஜம்மாள் தேவதாஸ் கல்லூரியைத் திறந்து வைக்க, மஞ்சுளா ரமேஷ் குத்துவிளக்கு ஏற்றி வைக்க, சேலம் சாரதா மகளிர் கல்லூரி முதல்வர் லக்ஷ்மி வாழ்த்துரை வழங்கினார்.



வாசகிகளே! சென்ற நவராத்திரி சமயத்தில் திரிபுவனம் சென்று 'திரிபுவனம் பட்டு கூட்டுறவு சங்கம் லிட். Z. 322' அவர்களின் பட்டுப் புடைவைகளைப் பற்றி எழுதியது உங்களுக்கு நினைவிருக்கும். அழுத்தமான படிமான ஜரிகையும், சாஃப்ட் ஃபினிஷிங்கும் கொடுத்து அவர்கள் அசத்துவதைக் குறிப்பிட்டிருந்தோம்.

இந்த வருடம் அவர்கள் 'நவ'-ராத்திரியையொட்டி ஒன்பது பேருக்கு, விஜயதசமிக்கு ஒருவருக்கு என்ற கணக்கில் பத்துப் பட்டுப் புடைவைகளை மங்கையர் மலர் வாசகிகளுக்குத் தர முன்வந்துள்ளனர்.

# மங்கையர் மலர்

# &

# திரிபுவனம் பட்டு

# கூட்டுறவு சங்கம் லிட் Z. 322

## இருவரும் இணைந்து நடத்தும் பட்டுப் புடைவை பரிசளிப்பு வைபவமாக நடைபெறும்.

●● ஒவ்வொரு புடைவையும் ரூ. 3000/- மதிப்புள்ளதாக, மொத்தம் ரூ. 30,000/- பெறுமானமுள்ள பட்டுப் புடைவைகள் பரிசாக வழங்கப்படும்.

●● இப்போட்டியில் கலந்து கொள்பவர்கள் கொலு வைப்பவர்களாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை. யாரும் கலந்து கொள்ளலாம்.

●● ஆனால் நவராத்திரியை ஒட்டி பரிசளிக்கப்படுவதால் கொலு வைப்பவர்களாகவே இருந்தால், அவர்களுடைய கொலு பற்றிய செய்தியும் இடம் பெறும்.

# நவராத்திரிக்கு பட்டுப்புடவைகள் பரிசு!

●● ஏனெனில்... நவராத்திரியின் பத்து நாட்களுக்குள்தான் இந்தப் பரிசுகளை வழங்கப் போகிறோம். அதிலும் தேர்ந்தெடுத்த சில இடங்களுக்கு மங்கையர் மலர் ஆசிரியரும், திரிபுவனம் பட்டுக் கூட்டுறவு சங்க நிர்வாகிகளும் நேரில் வழங்க வருவார்கள்! அவர்களை நீங்கள் நவராத்திரிக் கொலுவோடு வரவேற்றால் நன்றாகத்தானே இருக்கும்!!

●● சரி, இதில் எப்படிக் கலந்து கொள்வது?

இந்த அறிவிப்பின் கடைசியில் ஒரு கூப்பன் கொடுக்கப்பட்டுள்ளது. அதில் உங்கள் பெயர், முகவரியை எழுதி அனுப்புங்கள், அவ்வளவுதான்.

**மங்கையர் மலர் அலுவலகத்துக்குக் கூப்பன்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி : 10.9.'94**

●● வந்து சேர்ந்த அனைத்துக் கூப்பன்களையும் சென்னை தி.நகர் சரோஜினி தெருவிலுள்ள திரிபுவனம் பட்டு கூட்டுறவு சங்கத்தின் கிளை ஷோ-ரூமில் குலுக்கி பத்துப் பெயரைத் தேர்ந்தெடுக்கப் போகிறோம்.

●● பரிசு பெற்றவர்களின் பெயர்கள் மங்கையர் மலரின் நவராத்திரிச் சிறப்பிதழில் வெளியிடப்படும். அக்டோபரில் நவராத்திரி நடைபெறும் நாட்களில் பரிசுகள் வழங்கப்படும்.

●● இப்போட்டி சம்பந்தமாக வேறு எந்தவிதமான கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

●● ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

---

# மங்கையர் மலர்
# &
# திரிபுவனம் பட்டு
# கூட்டுறவு சங்கம் லிட் Z. 322

## இணைந்து வழங்கும் பட்டுப் புடைவைப் பரிசளிப்புத் திட்டம்

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

இந்த அறிவிப்பில் உள்ள நிபந்தனைகளுக்கு உட்பட்டு இப்போட்டியில் கலந்து கொள்வதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

கையொப்பம்

**க**ல்லுப் போல திரேகம் அவளுக்கு. வெளியில் போய் உத்தியோகம் பார்த்துச் சம்பாதிச்சாத்தானா? வீட்டிலேயே எத்தனை கைத்தொழில் இல்லே! பஞ்சுப் போல மெதுக்கு மெதுக்குன்னு இருக்கிற ரெக்ஸின் ஒரு கருன்னா எருமை மாட்டுத் தோலாட்டமா ஒரு கருன் ரெக்ஸின் வாங்கிக் கட்டி எடுத்துண்டு – அது இருக்கும் ரெண்டாள் படுக்கிற பாயைவிட அகலமா – ஒசரமா ரெக்ஸின் கடைக்குச் சித்தெ தள்ளி ஒரு பட்டன் கடை. அதிலே விதவிதமா ஜிப்பு, பொத்தான், 'டி'ரிங்கு. அந்தக் கடைகள்லயெல்லாம் அநேகமா ஆம்பிளைகள்தான் வாங்கறதுக்கு வருவா. கடைக்காரனுக்கே அவ முதல் முதல் வாங்க வந்து விவரம் கேட்டப்போ ஆச்சரியம்தான். ஆனா யாரைப் பத்தியும் பொருட் படுத்தறதில்லே. தனக்காகணும்கிற காரியத்திலே மட்டும்தான் கருத்து.

நயம் ரெக்ஸின்லே சதுரமா, நீண்ட சதுரமா துண்டு துண்டா வெட்டினதுகளை மாயமா நிமிஷத்துலே ஜிப்பை இணைச்சு அழகழகா அவ பர்ஸும் கண்ணாடிக் கூடும் தைக்கிறதை நாளெல்லாம் பார்த்துக்கிட்டே இருக்கலாம். முரட்டு ரெக்ஸின் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்குப் பையாகவும், பெரியவா மார்க்கெட்டுக்கும் பலசரக்குக் கடைக்கும் கொண்டு போற அகலப் பாளம் குடுத்த பையாகவும் தயாராயிடும். வாரத்துக்கொருதரம் கோவில் கடைகள்லயும், ஆப்டிகல்ஸ்லயும் தைச்சதை மொத்தமா கொடுத்துட்டுக் காசு வாங்கிண்டு வருவா. அப்படியே மீனாட்சியம்மன் தரிசனமும் வர்ற வழியிலே கறிகாய் சாமானும். இதோட வீட்டுக் காரியம் பூராவும் பார்க்கிறதுக்கும் அவ சோம்பல் பட்டதேயில்லே. இதுவும் கடமையாத்தான் தோணித்து அவளுக்கு. அதோட இதிலே வர்ற பணம்தானே குடும்பத்தோட பற்றாக்குறை பட்ஜெட்டை நிரவித்து?

அவ புருஷனோ குழந்தைகளோ இதையெல்லாம் கண்டுக்கறதில்லே. ஏன்னா எல்லாருமாச் சாப்பிட்டு, சாப்பாட்டை எடுத்துண்டு அவாவா ஸ்தலங்களா பள்ளிக்கூடமும் ஆபீஸுமாப் போனப்புறம் தானே உபரியான சம்பாத்தியத்துக்கான இந்த வேலைகளைச் செய்யறா மங்களம்!

இதனாலே புருஷன் சாமிநாதனுக்குக்



-அன்னம்மா பகவதி

கடன் தொல்லைன்னா இன்னதுன்னு தெரியாது. குழந்தைகளுக்கு அவாளோட தேவை கிடைக்கலேங்கிற குறை தெரியாது. மங்களத்தோட குடும்ப நிர்வாகம் மகத்துவமானது தானே? ஆனா இந்த மகத்துவத்துக்கெல்லாம் மூல காரணம் அவளோட கல்லுப் போல திரேகம்தான்ங்கறது அவளுக்கே புலப்படல. அந்தத் திரேகத்தோட மகிமையை யாரும் எண்ணிப் பார்க்கல...!

"போதுமே மூணு. இதோட ஆபரேஷன் பண்ணிக்கறேனே?" புருஷன்கிட்டே மங்களம் கேட்டப்போ, அவனுக்கு ஏனோ எரிச்சல்.

"அந்தக் காலத்திலயெல்லாம் ஆபரேஷனா பண்ணிண்டா? ஒண்ணும் வேண்டாம். ஆபரேஷன் பண்ணிக்கிறது, அப்புறம் வெயிட் தூக்க முடியாதுங்கிறது, அங்க வலிங்கறது, இங்க வலிங்கறதுன்னு வேலைக்காரி வச்சுக்கறது, இதெல்லாம் கொஞ்சங் கொஞ்சமா குடும்பத்துக்குக் கேடு. பேசாம லேடி டாக்டர்கிட்டே போய் இருநூறோ முந்நூறோ குடுத்துக் கலைச்சுட்டு வந்துடு."

காசு சம்பாதிக்கறதுக்கு ஏற்றுக் கொள்ளப்பட்ட அவளோட அபிப்பிராயம் சாமிநாதனோட சுயநலம் கருதி இது விஷயம் ஏற்றுக் கொள்ளப்படாமல் உடனடி மறுப்பாயிட்டுது.

புருஷனை மீறித் தன் அபிப்பிராயத்தை இதிலே நிறைவேற்ற முடியுமா எந்தப் பெண்ணாலயாவது? இதெல்லாம் ஆண்களோட உரிமை மட்டும்தான் போலத்தானே நடை முறையிருக்கு? பெண்ணுரிமைச் சட்டம் இதிலே வீட்டுக்குள்ளே வந்து தலைதூக்கி நிக்க முடியுமா? மங்களம் மாதிரி எத்தனை பெண்களோட உரிமைகள் பொசுங்கிப் பொசுங்கி ஒண்ணுமத்துப் போயி ருக்கோ!



மங்களம் லேடி டாக்டர்கிட்டே போய்ட்டு வந்தா. ஒரு வாரம் எழுந்திருக்க முடியாம தலைதூக்க முடியாம படுக்கை. சாமிநாதனும் குழந்தைகளுமா வெந்தும் வேகாமலுமா பொங்கி இறக்கி, ஹோட்டல்ல டிபன் வாங்கி வீடு அல்லோல கல்லோலப்பட்டு மங்களம் முடிஞ்சும் முடியாமலுமா இருக்கும்போதே எழுந்திருந்துட்டா.

திறம்பட நிர்வாகம் ஓடிண்டிருக்கிற வீடு. தங்களைப் பொறுத்த வரை எந்தப் பிரச்னையுமே எட்டிப் பார்க்காம வச்சுண்டிருந்த மங்களம் படுக்கவும் சாமிநாதனும் குழந்தைகள் விஜி, குமாரும் திண்டாடிப் போய்ட்டா. மொத்தத்திலே சிவனே திங்க போச்சும்பாளே அப்படியாச்சு.

"அவாளுக்கு ஒரு கஷ்டமும் தெரியாம சுகஜீவிகளாகவே ஆக்கி வச்சிருக்கே மங்களம். இது உனக்குத்தான் சிரமம்."

பக்கத்து வீட்டு நீலாவதி மாமி சொல்கையில் கூட மங்களம் எதை

மலையாள நண்பி ஒருவரிடமிருந்து கற்ற மாங்காய் சம்பந்தி. துருவிய ஒரு கப் தேங்கா யோடு, தீயில் சுட்டு எடுத்த இரண்டு வற்றல்களும், ஐந்தாறு சீரகமும், ஒரு சிறு துண்டு மாங்காயும் தேவையான உப்பும் வைத்துத் துவையலாக அரைத்துத் தயிர் சாதத்திற்கு தொட்டுக் கொள்ள அருமையாகத்தான் இருந்தது.

– ஏஞ்சல்பாப்டிஸ்ட்



யும் உணரவில்லை. ஏன்னா அவ உடம்பிலே நல்ல பலம் இருந்தது.

ஒருதரம் லேடி டாக்டர்கிட்டே போய்ட்டு வந்தோட நிறுத்தி யிருந்தா அந்த பலம் க்ஷீணமாகியி ருக்காதோ என்னவோ?

சாமிநாதன் தன் சுயநலத்தையும் தேவையையும் மட்டுமே பொருட் படுத்தினதாலே மங்களத்தோட தேக வலிமையைப் பத்தி யோசிக்கவேயில்லை. மங்களம், வருஷத்துக்கொருதரம், இரண்டு வருஷத்துக்கொருதரம்னு பல தரம் லேடி டாக்டர்கிட்டே இருநூறு, முந்நூறு கொடுத் துட்டு வரும்படியாச்சு.

காலையில எழுந்து பரக்கப் பரக்க வீட்டுக் காரியங்களும் தொழிலும் போல இதுவும் தன்னோட கடமை போல அவளுக்கு பழகிப் போச்சு. ஆனா சாமிநாதன் மாதிரி தான் நினைச்சதையே சாதிக்கிற மூர்க்க குணம் உள்ளவனுக்கு மனைவியானா மங்களம் என்ன, யாராயிருந்தாலும் இப்படித்தானே ஆக வேண்டியிருக்கு? இதுக்கு மேல குடும் பத்தை விஸ்தாரம்பண்ணவும் முடியாது. அது, இருக்கிற குழந்தைகளுக்கும் கணவனுக்கும் சுமையே என்று மங்களம் வேறு வழியின்றி இதே வழியிலேயே நாட்களைக் கடத்தினாள்.

ஆனா, இது அவளோட கல்லுப் போல திரேகத்துக்குப் புரியல. இப்போவெல்லாம் அடிக்கடி மக்கர் பண்ணவும் சண்டித்தனம் பண்ணவுமா மங்களத்துக்கு நித்தம் இடைஞ் சல் பண்ண ஆரம்பிச்சிருக்கு.

காலையில எழுந்திருக்கும்போதே விண் விண்ணுன்னு தலைவலி. கைகாலெல்லாம் துணி மாதிரி துவள்றது. மங்களம் பிர யாசையோடு படுக்கையை விட்டு எழுந்து அடுக்களைக்குள் காரியம் பார்க்கையிலே சாமிநாதனோட அவசரத்துக்கும் விஜியோட காலேஜ் அவசரத்துக்கும் ஈடுகுடுக்க முடி யலே. எப்படியோ பரந்து பரந்து எல்லோரை யும் அனுப்பிவிட்டு, 'ஆண்டவனே முரு கா'ன்னு தன்னையறியாமல் கடவுள்கிட்டே தேகநலக்கேட்டை முறையிட்டுண்டே படுக்கையிலே விழுந்தாள் மங்களம். முன்ன மாதிரி அடுக்களைக் காரியம் முடிஞ்சதும் தொடர்ச்சியா மிஷின்ல உட்கார்றதெல்லாம் முடியல.

இப்போ மங்களத்துக்கு தன் உடம்பு க்ஷீணமாயிட்டு வர்றது புரியத்தான் செய்யறது. ஆனா மத்தவங்களுக்குப் புரியலையே!

"விஜி! இவ்வளவு பெரிய பொண்ணா யிட்டே. இன்னமும் சின்னக் கொழந் தையாட்டமா ஆறரைக்கு மேல எழுந்திருந்து 'காலேஜுக்கு லேட்டாச்சு, லேட்டாச்சு'ன்னு பறக்கறயே. இனிமே நாளையிலேர்ந்து சீக் கிரமா எழுந்திருந்து எனக்குக் கொஞ்சம் கூடமாட ஒத்தாசை பண்ணு. எனக்கும் முன்னப் போல முடியலே."

மங்களம் உண்மையைத்தான் சொன்னா ளென்றாலும், விஜிக்கு அது புரிகிறதா யில்லை. 'அம்மாவுக்கு நாங்க இந்த வயசில கொஞ்சம் சௌக்கியமாயிருக்கிறது பிடிக்கல அப்படின்னுதான் தோணறது.'

"ஏம்மா. பின்னாலதான் குடும்பம் வேலை, வெட்டின்னு இருக்கவே இருக்கே, இந்த வீட்டிலே இருக்கிற வரைக்கும் கொஞ்சம் ஃப்ரீயா சந்தோஷமா இருந்துட்டுப் போறேன்னா விடேன்."

அப்படின்னு தன் நலத்தைப் பத்தி மட் டுமே யோசிச்சா விஜி.

குமார் இப்போ வெளியூர்லே படிக் கிறான். அவன் லீவுக்கு வர்ற சனி ஞாயிறில ஹாஸ்டல் சாப்பாட்டுக்கு வட்டியும் முத லுமா ஸ்பெஷலா மூணு நேரமும் அடையும்

# உங்கள் கூந்தலை இளமையாக வைத்திருங்கள்.

AVT
DEEPIKA
COCONUT OIL

இதோ அறிமுகம்! ஏ.வி.டி.யின் செழுமையான, புதிய தீபிகா தேங்காய் எண்ணெய். இதன் செழுமை உங்கள் கூந்தலுக்கு அளிக்கிறது, அதிக பளபளப்பு, மற்றும் உற்சாகமான, இளமையான தோற்றம்.



ஏனெனில் தீபிகா, மிகச் சிறந்த தேங்காய்களிலிருந்து, இயற்கை தந்த வளம் குன்றாமல் சிறந்த முறையில் தயாரிக்கப்படுகிறது. ஏ.வி.டி. யின் தரம் - இன்னும் சொல்ல வேண்டுமா என்ன?

AVT
DEEPIKA
COCONUT OIL

செழுமையான தேங்காய் எண்ணெயின் சக்தியைக் கண்டறியுங்கள்.

100 மி.லி. 200 மி.லி மற்றும் 500 மி.லி அளவுகளில் கிடைக்கும்.

RUBICON/AVT/6002

போளியுமா செய்து தரச் சொல்றான். மங்களத்துக்கே வெளியூர்லே ஹாஸ்டல்ல சாப்பிட்டு நாக்கு செத்துப் போன குழந்தைக்கு நல்லதா நாலு விதம் செய்து போட ஆசைதான். ஆனால் கல்லுப் போல திரேகம் இப்போ கழண்டு பீஸ் பீஸாப் போறேங்கிறதே?

மங்களம் மூச்சை இழுத்துப் பிடிச்சுண்டு ஆண்டவனே ஆண்டவனேன்னு அரற்றிக்கிட்டேதான் காரியம் பார்க்கிறா. ஆனா அவ சுகவாசிகளா ஆக்கிவிட்ட அவளோட குடும்பத்தாருக்குப் புரிஞ்சுக்க மனசே வரல்ல.

'முடியலயே', 'முடியலையே'ங்கிற அவளோட மெல்லிய ஓலம் கொஞ்சங் கொஞ்சமா டெஸிமல் கூட ஆரம்பிச்சுது. வருத்தம் தெரியாம வளர்ந்த குடும்பத்துக்கு அது எரிச்சலா இருந்தது.

"என்னம்மா சனி, ஞாயிறுல நான் வர்றப்போ ஏதோ வாய்க்கு ருசியா சாப்பிடலாம்னு பார்த்தால் எப்பப் பார்த்தாலும் முடியல, முடியல, அங்க வலிக்கறது, இங்க வலிக்கறதுன்னு பாட்டுப் பாடிண்டே இருக்கே! வீட்டுக்கு வர்றோம்ங்கிற சந்தோஷமே போயிடுது. இனிமே ஹாஸ்டலே தேவலாம்னு இருந்துட வேண்டியதுதான்."

குமார் கையிலிருந்த புத்தகத்தை எரிச்சலோடு மேஜை மீது வீசிப் போட்டு விட்டுக் கடுகடுத்த குரலில் சொல்லவும் திடுக்கிடுகிறது மங்களத்துக்கு.

"ஏண்டா, நீ ஏன் தப்பா அர்த்தம் பண்ணிக்கிறே? நான் என்ன வேணும்னா முடியலைங்கறேன்?"

"சரி போ! இனிமே சனி, ஞாயிறும், ஏன், எல்லா லீவு நாட்களிலும் வெளியூர்லயே இருந்துடறேன். வீட்டுக்கே வரல்ல."

சொல்லிவிட்டுக் குமார் வேகமாய் வெளியே போய் விட்டான். மங்களத்துக்கு மனத்தில் விழுந்த இடி தாங்க மாட்டாமல் குபுக்கென்று கண்களில் நீர் வந்தது. சாமிநாதனும் சமயம் பார்த்துச் சாடினார்.

"ஆமா, எப்பப் பார்த்தாலும் முடியல முடியலைன்னா வீட்ல எல்லாருக்குமே ஏண்டா வீட்ல இருக்கோம்னுதான் இருக்கு. எப்பப் பார்த்தாலும் உனக்கு இது ஒரு பாட்டாப் போச்சு. யாருக்குத்தான் பிடிக்கும் உன்னை, இப்படி முடியல பாட்டுப் பாடினயானா? எனக்குமே எரிச்சலாத்தான் இருக்கு."

மொத்தத்தில் எல்லோருமே வார்த்தையில் நெருப்பை வைத்து மங்களத்தின் மேல் பொழிந்தார்கள்.

கல்லுப் போல திரேகம் பெற்றிருந்த மங்களம் க்ஷீணமாகிப் போனதே இந்தக் குடும்பத்துக்காகத்தானே? அதிகம் பெற்றால் அல்லல் மயம் என்று தன் புருஷனும் பிள்ளைகளும் சௌக்கியமாயிருக்கத்தானே தன்னை க்ஷீணித்துக் கொண்டாள்? அதைப் புரியாத குடும்பம் அவள் மேல் வார்த்தையால் அம்பெய்துகிறதே?

இப்போது உடல் பலஹீனத்தைவிட மன பலஹீனம் அதிகமாகிவிட்டது மங்களத்துக்கு. வீட்டில் எல்லோருமே அவளை வெறுப்பதாகச் சொல்வதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

'சரி! இனிமேல் எனக்கு உடம்பு முடியலேங்கிறதைச் சொல்லப்படாது. அது ஒருத்தருக்கும் பிடிக்கலே' என்று தனக்குள்ளாகவே தீர்மானம் பண்ணிக்கிட்டா. தன்னோட கஷ்டம் தன்னோடேயே போகட்டும்னு மங்களம் வலியைப் பத்தி மூச்சே விடறதில்லே இப்போ.

இப்போ வீட்ல மற்ற எல்லோருக்கும் சந்தோஷம்தான்.

"அம்மா என்னோட காலேஜ்ல படிக்கிற

## கொலு பொம்மைகள் பாதுகாப்பு



நவராத்திரி கொலுவிற்காக பொம்மைகளை பீரோ அல்லது பெட்டியிலிருந்து வெளியே எடுத்ததும், வேப்ப எண்ணையில் தோய்த்த பஞ்சினால் பொம்மைகள் மீது மிருதுவாக பாலிஷ் செய்தது போல் வேப்ப எண்ணையைத் தடவவும்.

இதனால் பொம்மைகள் பளபளப்பாகவும், பெயிண்டுகள் உதிராமலும், உறுதியாகவும் இருக்கும். மேலும் வேப்ப எண்ணை மணத்தினால், எலிகள் கொலுப் படியிலிருந்து பொம்மைகளை உருட்டிச் சேதம் விளைவிக்காது. கொலு முடிந்து பத்திரப் படுத்தி வைத்தாலும் கரையான், அந்துப் பூச்சிகள் அரிப்பிலிருந்து வேப்ப எண்ணை, பொம்மைகளைப் பாதுகாத்து நீண்ட நாள் புதுப் பொலிவுடன் வைத்திருக்கும்.

கை வழுக்கும், என்ற கவலைவேண்டாம். மண்பொம்மைகள் வேப்ப எண்ணையை உறிஞ்சிவிடும்.

அறைக்குள் நுழைந்தவுடன் வேப்ப எண்ணெய் நாத்தம் அடிக்காதா என முணுமுணுக்கிறீர்களா? நிறைய ஊதுபத்திகளை ஏற்றி வைத்து விடுங்கள்.

—என். ஷா.

பலாப்பழ சீசன் அல்லவா இப்போது. பலாப்பழம் நறுக்கி விட்டு பால் ஒட்டி பிசுபிசுப்பாய் இருக்கும் கத்தியை ஸ்டவ் அனலில் இருபக்கமும் சிறிதுநேரம் காட்டி பின் ஒரு துணியால் துடைத்தால் பால் பிசுக்கு நீங்கி, கத்தி சுத்தமாக இருக்கும்.

- மாலாராமபத்ரன்.



ஹாஸ்டல் ஃபிரண்ட்ஸ் நாலு பேர் இந்த விஜயதசமி லீவுக்கு நம்ம வீட்டுக்கு வர்றாங் கம்மா. அவங்களும் என்னைப் போலத்தான் ஹாஸ்டல் சாப்பாடே பிடிக்கலைன்னு வீட்டுச் சாப்பாட்டுக்காக வர்றாங்க. கார்த் தால சப்பாத்தி குருமா, மத்தியானம் பிஸி பேளாஹூளி, ராத்திரி பொங்கல்னு வித விதமா சமைச்சுடும்மா. இல்லேன்னா ஃபிரெண்ட்ஸ்கிட்டே என் மானம் போயிடும் சொல்லிட்டேன்."

குமார் ஆணையிடும் குரலில் சொல்லி விட்டுப் போனான்.

மங்களம் மறுப்புச் சொல்ல வாயில்லாமல் மனதுக்குள் விழித்தாள்.

சனிக்கிழமை காலை ஜேஜே என்று விடிந்தது. குமார் முதல் நாள் இரவே வந்து விட்ட தன் சிநேகிதர்களோடு மாடியில் கும் மாளமிட்டுக் கொண்டிருந்தான். மாடித் தாழ்வாரத்திலிருந்து கீழே நோக்கிக் குரல் கொடுத்தான்.

"அம்மா, எல்லாரும் முழிச்சாச்சு. காப்பி ரெடியா?"

"ரெடியா இருக்கு. வந்து எடுத்துண்டு போ குமார்."

மங்களம் கீழிருந்து பலக்கச் சப்தமிட்டுச் சொல்ல முடியாமல் சொன்னாள். அது குமார் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவன் கீழிறங்கி வருகிற வழியாயுமில்லை.

உருளைக் கிழங்கு வெந்து தண்ணீர் சுண்டிக் கொண்டிருக்கிறது அடுப்பில். சப் பாத்திக்கு மாவு பிசைந்து கொண்டிருக்கிறாள் மங்களம். எழுந்து அடுப்பை அணைத்து விட்டுக் காப்பியை மாடிக்கு எடுத்துப் போக முயல்கிறாள்.

நெஞ்சிலும் முதுகிலும் சுரீர், சுரீர் என்று வலி தாங்க முடியாமல் குத்துகிறது. "என் னப்பனே முருகா!" கையை ஊன்றிச் சமாளித் தபடி எழுகிறாள். வலியும் கூடவே எழுகிறது. அவளை அழுத்துகிறது. பல்லைக் கடித்து வலியை இறக்க முற்படுகிறாள். ம்ஹூம், தாங்க முடியவில்லை. 'ஐயோ, அப்பா, அம்மா' என்று கத்த வேண்டும் போல் தொனியுடனான வலி உந்துகிறது. 'வேண் டாம் வலிக்கிறதுன்னு சொன்னால் யாருக் கும் என்னைப் பிடிக்கிறதில்லே. சமாளிச்சுப் பார்க்கலாம்' கண்களை இறுக மூடுகிறாள். மூச்சு நெஞ்சுக்குள் கட்டை மாதிரி அடைக் கிறது. போராட்டம். மங்களம் தனக்குள் தன் திரேகத்துக்கும் மனதுக்கும் இடையில் போராடுகிறாள். சாமிநாதனும் விஜியும் பாத் ரூமிற்கும் கொல்லைப்புறத்திற்கும் என்று போய்வந்து கொண்டுதான் இருக்கிறார்கள். அடுக்களையை எட்டிப் பார்க்க அவர்களுக் கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

"காப்பி கேட்டு எவ்வளவு நேரம்மா ஆச்சு?"

தரையை உதைத்தபடி கோபத்தோடு மாடிப்படி இறங்கி வருகிற குமார் அடுக் களைக்குள் நுழைந்தான். மூலையில் கண்கள் நிலைகுத்தி விரிந்திருக்க, அதன் வழி போன பிராணன் தெரியாமல் சாய்ந்து கிடக்கும் மங்களத்தைப் பார்த்துவிட்டு 'அப்பா! அப்பா!' என்று கூவுகிறான்.

சாமிநாதன் வந்து, அவர் போய் அழைத்து டாக்டர் வந்து பார்க்கையில்,

"உயிர் போய் அரை மணி நேரமாச்சே! இருதயத்திலே வலி தாங்க முடியாம பெரிசாக் குரலெடுத்து வலி வலின்னு துடிச்சு சத்தம் போட்டிருக்கணுமே இவங்க? அதெப்படி இவங்க இறந்து போனதே தெரியாதுங் கறீங்க?" ஆச்சரியமாய்க் கேட்டார் டாக்டர்.

மங்களத்தின் வலியடக்கிய அவள் குடும்பத்தினருக்கு இனிமேல் தான் வலி என்பது புரிய ஆரம்பிக்கும் இல்லையா?



# குழந்தைகளைச் சமாளிக்கலாம் வாருங்கள்

'**ம**ம், இந்த டெவிலை பாரேன்' பாத்ரூமிலிருந்து குரல் கொடுக்கும் எட்டு வயதுப் பெண்.

பாத்ரூம் கதவுக்கு வெளியில் பயங்கரமாய் ஊளையிட்டுக் கொண்டு நிற்கும் பத்து வயது மகன்.

'போடா அந்தண்டை' பையனின் முதுகில் போட்டு, 'என்னடி ஆச்சு?' பெண்ணை எரிச்சலாய்க் கேட்டு - பெற்றோர் டென்ஷனாகிற நிலை கிட்டத்தட்ட எல்லா வீடுகளிலுந்தான் உண்டு.

சில நேரங்களில் குழந்தைகள் நம்மை சினத்தின் உச்சத்திற்கே கொண்டு போய் விடுகிறார்கள். அவர்களின் சோம்பேறித்தனம், தவறுகள், குறும்புகள், விவேகமில்லாத காரியங்கள் என்று நம்மை வெறுப்புறச் செய்பவை அனேகம். நாமும் கொஞ்சம்கூட யோசிக்காமல் இரைந்து, அவர்களை அடித்து உதைத்து ரொம்பத்தான் நிதானம் இழந்து விடுகிறோம்.

குழந்தைகளை ஓர் ஒழுங்கு முறைக்குக் கொண்டு வருவது அவசியம். சரி, நம்முடைய வயசுக்கேற்ற மரியாதையை இழக்காமல், நிம்மதிக்கும் பங்கமில்லாமல் அவர்களை நேர்ப்படுத்துவது எப்படிச் சாத்தியம்? கேட்பீர்கள்.

" 'இப்படி நட'; 'அப்படி நடக்கக் கூடாது' என்று அதட்டி உருட்டி பிள்ளைகளுக்குக் கற்பிப்பதைவிட, சில குறிப்பிட்ட டெக்னிக்குகளைக் கையாண்டால் பிரச்னை எளிதாகி விடும்" என்கிறார் ராபர்ட் எப்ஸ்டின் (அமெரிக்க போஸ்டன் யுனிவர்ஸிட்டி மனோவியல் பேராசிரியர்).

## சூழ்நிலையைச் சுமுகமாக்குங்கள் :

"**ஷூ**வை காலோட சோபாவில் உட்காராதே..." "உன் தலை எண்ணெய்ப் பிசுக்கு அப்படியே ஒட்டிக்கிட்டு கறைபடுது, கடன்காரா!" என்று இட்டாதீர்கள். அதற்குப் பதில், ஹாலின் மூலையில் ஷூவைக்



கழற்றிவிடப் பழக்கப்படுத்துங்கள். குழந்தைகள் பெரியவர்களாகும்வரை விலை உயர்ந்த உறைக்குப் பதிலாக மலிவானதை சோபாவிற்குப் போட்டுவிடுங்கள்.

இப்படிச் சின்னச் சின்ன மாற்றங்கள் மூலமாகவே நிலைமையைச் சுமுகமாக்கிக் கொள்ள முடியும். ஏன் வீணாக இரைச்சலிட வேண்டும். எண்ணிப் பாருங்கள்.

## பயிற்சி மூலம் தீர்வு காணுங்கள் :

“இதோ பார் முரளி, நீதான் டீச்சராம், நான்தான் ஸ்டூடண்ட்டாம்” என்று உங்கள் பையனை ஓர் ஒத்திகைக்குத் தயார் பண்ணுங்கள். பையன் டீச்சர் காரக்டரை டக்கராகச் செய்துவிடுவான். உங்களுக்குத்தான் ஸ்டூடண்ட் ரோல் அத்தனை சுலபமாக அமைவதில்லை. இப்படிப் பயிற்சி அளித்தே 'இன்னது செய்ய வேண்டும், இன்னதைச் செய்யக் கூடாது' என்று அழகாகப் போதித்துவிட முடியும்.

## மூச்சு விட்டாலே போதும் :

குழந்தைகள் சண்டையிட்டுக் கொள்ளும்போது யார் மீது குற்றம் என்று நீங்கள் எளிதாகத் தீர்மானித்துவிட முடியாது. எல்லோருமே மற்றவர்கள் மீதுதான் பழி சுமத்திக்





கொண்டு இருப்பார்கள்.

'ஓ.கே. வாங்க. இப்படி என் பக்கத்தில் வந்து நில்லுங்க' என்று பிள்ளைகளை அழைத்துக் கொள்ளுங்கள்.

'என்னை மாதிரியே சீரா மூச்சை இழுங்க. நிதானமா வெளியில் விடுங்க' என்று செய்து காட்டுங்கள். அவர்களும் அப்படியே செய்வார்கள். அடுத்து, ஆழ்ந்து சுவாசிக்கும் முறையைத் தொடருங்கள். மார்பில் ஒரு கை வயிற்றுத் தசையில் ஒரு கை வைத்துச் சுவாசிக்கச் செய்யுங்கள். மார்பில் வைத்த கை அப்படியே இருக்கும், வயிற்றில் வைத்த கை மட்டும் உள்ளும், வெளியும் அசையும். இப்பயிற்சியை எல்லா வயதுக் குழந்தைகளுமே மேற் கொள்ளலாம்.

'டயாப்ரமாடிக் ப்ரீதிங்' அவர்களை அமைதிப்படுத்தும், நம்மையுந்தான். ஆம், துரிதமான 'calming effect' கிடைப்பதாக மருத்துவ ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

## 'பொறுப்பை'க் கொடுங்கள் :

நம்முடைய இலக்குகளை அடைவதற்காக நாம் சுய நிர்வாகத் திறமைகளை வளர்த்துக் கொள்கிறோம் இல்லையா? அதன் மூலம் தொழிலில் உற்பத்தித் திறனை அதிகரிக்க, நல்ல

கட்டமைப்பைத் தோற்றுவிக்க முடிகிறது தானே? அதே பயிற்சியை நம் குழந்தைகளுக்கும் நாம் கொடுக்க முடியும்.

அழுக்குத் துணிகளை மூலைக்கு மூலை எறிந்துவிடும் மனப்போக்கு சாதாரணமாக குழந்தைகளிடம் காணப்படுகிற ஒன்றுதான். தினம் இத்தனை மணிக்கு உறங்குவது, எழுவது போன்ற விஷயங்களைப் பற்றி அவர்களிடம் எத்தனை முறை கத்தித் தீர்த்து இருப்பீர்கள்?

அவர்கள் தவிர்க்க வேண்டிய அல்லது கடைப்பிடிக்க வேண்டிய விஷயங்களை அவர்களிடமே விட்டுவிடுங்கள். எல்லாவற்றையும் ஒரு குறிப்பேட்டில் எழுதிக் கொண்டு அதன்படி நடக்குமாறு கற்பியுங்கள். தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக் கொள்ளும் மாற்றங்களில், வளர்ச்சியில் குழந்தைகள் பெருமிதமுறுவார்கள். பொறுப்பை உணர்வார்கள்.

## பழைய முறையில்...

தப்பு செய்யும் குழந்தைகளைக் கடுஞ் சொல்லால் வதைக்காதீர்கள். தவறுகளைத் திருத்த, தண்டிக்க ஒரு ஜெண்டிலான வழிமுறை இருக்கிறது. ஒரு ரூமின் மூலையில் அன்ஈஸியான குட்டி நாற்காலி போட்டு, 'உட்கார், இதைவிட்டு நகரக் கூடாது' என்று சொல்லி விடுங்கள். நேரம் ஆக ஆகக் குழந்தைகள் இருப்பு கொள்ளாமல் தவிக்கும். துறுதுறு குழந்தைகளுக்கு இது பழைய யுக்திதான். ஆனால்... சரியான தண்டனை (குறிப்பாக அந்த அறையில் எந்த விளையாட்டுச் சாமானும் இருக்கக் கூடாது).

## ஊக்க ஊதியம் அளியுங்கள் :

வீட்டில் உங்கள் ஒருவர் கையாலேயே எல்லா வேலைகளும் முடிந்து விடுவதில்லை. ஒன்றை ஷாப்பிங் போகச் சொல்லுங்கள். இன்னொரு சமயம் தோட்ட வேலை செய்யட்டும். மற்றொரு குழந்தை டைனிங் டேபிளில் பரிமாற உதவட்டும். 'சிங்க்'கில் பாத்திரம் துலக்கட்டும்; அவர்களுக்கு அவ்வப்போது 'டிப்ஸ்' அளித்துவிடுங்கள். ரூபாய் கொடுக்கும் போது மட்டும், 'நீ இல்லா விட்டால் இந்தக் காரியம் முடிந்திருக்காது. இந்தா, இது உன்னோட உழைப்புக்கு வெகு மதியாக்கும்' என்று சொல்லிக் கொடுங்கள். அவர்கள் உழைப்பின் உயர்வையும், பணத்தின் மதிப்பையும் உணர்ந்து கொள்வார்கள். எதிர்காலத்தில் குடும்பப் பொறுப்போடு நடக்க இப்பயிற்சி உதவும்.

## முன் மாதிரியாய் இருங்கள் :

உங்கள் பழக்க வழக்கங்களைத்தான் குழந்தைகளும் இமிடேட் செய்கிறார்கள். உங்கள் காரியங்களைப் பார்த்தே கற்றுக் கொள்கிறார்கள். சிறு தவறுகளுக்குக் கூட மன்னிப்புக் கேட்டல், குறித்த நேரத்தில் காரியம் செய்தல் போன்ற நல்ல பழக்க வழக்கங்கள் அப்படித்தான் பிஞ்சு மனங்களில் படிகின்றன.

குழந்தையை எப்படியெல்லாம் வளர்க்க வேண்டும் என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் கணத்தில் கோபாவேசமாகி அனைத்தையும் மறந்து போவீர்கள்.

நல்ல பெற்றோர்தான் பிள்ளைணி.

எனவே, உங்களுடைய கோபத்தை முதலில் மூட்டை கட்டி எறிந்துவிடுங்கள்.

- சி. எஸ். தேவநாதன்

---

### மெல்லு! பல் உறுதியாகும்



சூயிங்கம் போன்ற, ஆனால் இனிப்பில்லாத 'கம்' போன்ற பொருளை மெல்லுவதால் உமிழ்நீர் சுரப்பு அதிகமாகி, பற்களுக்கு இடையே உள்ள கிருமிகளை வெளிக் கொணர்ந்துவிடுகிறது. சூயிங்கம் மட்டும் அல்ல; ஏதாவது ஒரு மரத்தின் குச்சியை உணவு உண்டபின், பதினைந்து நிமிடங்கள் மெல்லுவதாலும் இதேவித பல் சிகிச்சை கிடைக்கிறது. கொஞ்சம் யோசியுங்கள். ஆல், வேல், வேம்பு இவற்றின் குச்சியை, பழைய காலத்தில் நன்கு கடித்துவிட்டுப் பின் பல் துலக்கப் பயன்படுத்தியது இதனால் தானோ என்னவோ?

- கிருஷ்ணவேணி ரங்கநாதன்

## மீண்டும் வந்துவிட்டது... உங்களுடைய செல்ல மகளுக்கு.



# ராஜ் லக்ஷ்மி

## யூனிட் ப்ளான்

*அவளுடைய வளமான எதிர்காலத்திற்கு*

இத்திட்டம்
ஜூலை 1, 1994
முதல்
அமலில் உள்ளது

### சிறப்பம்சங்கள்:

- காலவரையறையற்ற ப்ளான்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ. 1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ. 21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- ஒவ்வொரு காலவரையிலும் அறிவிக்கப்படும் போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

எல்லா மியூச்சுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவைகளாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் ஆட்சிக்கேற்ப பொறுத்து திட்டங்களின் NAV ஏறியும் இறங்கியும் செய்யும். ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே மற்றும் திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வளர்ச்சியையோ அல்லது வருமானத்தையோ எவ்விதத்திலும் சுட்டிக்காட்டுவது ஆகாது. தயவுசெய்து முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101

கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060

UTI-59/94 IMB

**வா**ழ்க்கையில் ஒவ்வொரு கட்டத்தில் ஒவ்வொருவருக்கும் சில அனுபவங்கள் ஏற்படுவதுண்டு. அந்தச் சொந்த அனுபவங்கள் அப்போதைக்குக் கசப்பானவையாக இருக்கலாம். அல்லது அதிக முக்கியத்துவம் இல்லாதவையாக இருக்கலாம். ஆனால் பின்னால் அந்த அனுபவங்களே நல்ல பாடங்களாக அமைய வாய்ப்பு இருக்கிறது. எனக்கு அப்படிக் கிடைத்த சில அனுபவங்களை, பாடங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ள எண்ணுகிறேன்.

மதுரையில் எங்கள் கல்யாணம் நடந்து சில நாட்களே ஆகியிருந்த சமயம். பென்னெட் தன் ஆசை மனைவிக்குப் பச்சைக் கல் நகை செட் பண்ணிக் கொள்ளச் சொல்லி பச்சைக் கொடி காட்டி விட்டார். அதற்கான பட்ஜெட் என்றும் சொல்லிக் கையில் பணம் கொடுத்து அனுப்பினார். நானும் என் அம்மாவைக் கூட்டிக் கொண்டு பல நகைக் கடைகளை முற்றுகையிட்டேன்.

கடைசியில் ஒரு செட் மனத்துக்கு மிகவும் பிடித்துவிட்டது. ஆனால் பென்னெட் சொன்ன பட்ஜெட்டுக்கு மேல் முந்நூறு ரூபாய் ஆகும் என்றார் கடைக்காரர். நான் சற்றும் யோசிக்கவில்லை. அம்மாவிடம் அந்த முந்நூறை வாங்கிக் கொண்டு 'வீட்டுக்குப் போன



# "என்னை ஏமாற்றி விட்டாய்!"

வுடன் கொடுத்து விடுகிறேன்' என்றேன். நிச்சயம் என் கணவர் ஒன்றும் சொல்ல மாட்டார் என்றும் எனக்குத் தெரியும்.

வீட்டிற்குப் போனவுடன் மிக மிக சந்தோஷமாக நகைப் பெட்டியைத் திறந்து காண்பித்த போது மிக நன்றாக இருப்பதாகச் சொன்னார். நானும் மறக்காமல், 'விலை மட்டும் நீங்கள் சொன்னதைவிட முந்நூறு அதிகமாகிவிட்டது. அதை அம்மாவிடமிருந்து வாங்கிக் கொண்டேன். அதைக் கொடுத்து விடுங்கள்' என்றேன். பென்னெட் மறு வார்த்தை சொல்லாமல் அந்தத் தொகையை அம்மாவிடம் கொடுத்து விட்டார்.

நாங்கள் அப்புறம் தனியாகச் சந்தித்த போது, "சீதா, உன்னிடம் எனக்கு நிறைய ஏமாற்றமாக இருக்கிறது" என்றார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. நான் தப்பு எதுவும் செய்யவில்லையே!

"நீ என்னிடம் பட்ஜெட் இவ்வளவு என்று சொல்லிப் பணம் கொடுத்து அனுப்பியிருந்து அதற்குமேல் ஒரு ரூபாய் ஆனால் கூட நான் உன்னிடம் வந்து கேட்டுவிட்டு நீ சம்மதித்தால்தான் அதை வாங்கியிருப்பேன். அதையேதான் உன்னிடமும் எதிர்பார்த்தேன். நீ

அப்படிச் செய்யாதது எனக்கு வியப்பாகவும் ஏமாற்றமாகவும் இருக்கிறது" என்றார். இதை அவர் கோபமாகச் சொல்லவில்லை. ஆனால் அவர் குரலில் இருந்த வருத்தம்?

அதோடு அவர் என் அம்மா எதிரிலேயே இதையெல்லாம் சொல்லியிருக்கலாமே! அப்படிச் செய்யாமல் நாங்கள் தனியாகப் பேச சந்தர்ப்பம் கிடைக்கும்வரை காத்திருந்ததும் எனக்கு அவரிடம் மதிப்பை அதிகமாக்கிவிட்டது. நான் செய்ததற்கு அப்போதே அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன்.

அதன்பின் எந்த விஷயமானாலும் இருவரும் கலந்து ஆலோசித்துத்தான் முடிவு எடுப்போம். அந்த முடிவுக்குப் பிறகு வேறு செய்ய வேண்டியிருந்தால் நிச்சயம் மற்றவரிடம் அதைப் பற்றிக் கேட்காமல் செயல்படுவதில்லை. இது கல்யாணம் ஆன உடனே கிடைத்த அனுபவம்!



**ப**ன்னிரண்டு வருடங்களுக்கு முன்னால் முதல் முறையாக என் வீணைக் கச்சேரி சென்னை டிசம்பர் விழாவில் நடைபெற்றது. அன்றிரவு அப்பாவின் (சங்கீத கலாநிதி டாக்டர் எஸ். இராமநாதன்) நெருங்கிய நண்பர் ஒருவர் - சங்கீதம் தெரிந்தவர் எங்கள் வீட்டுக்கு வந்தார்.

"இன்று உங்கள் பெண் வாசித்த வீணை இசையை விட உசத்தியானதை என் வாழ்நாளில் கேட்டதில்லை. நீங்கள் என்ன அபிப்பிராயப்படுகிறீர்கள்?" என்றார். எனக்கு ஏகப்பட்ட பெருமையாக இருந்ததுடன் அப்பா என்ன பதில் சொல்லப் போகிறாரோ என்றும் ஆவலுடன் காத்திருந்தேன். ஆனால் அப்பா தனக்கே உரிய ஒரு புன்சிரிப்பை உதிர்த்து விட்டுப் பேசாமலிருந்து விட்டார். எனக்கு ஏமாற்றமாகப் போய்விட்டது.

மறுநாள் காலை நான் வீட்டருகே பஸ் ஸ்டாப் ஒன்றில் நின்றிருந்த போது பெரியவர் ஒருவர் என் அருகே வந்தார். "நீதானே நேற்று அந்த சபாவில் வீணை வாசித்தது?" என்றார். நான் 'ஆமாம்' என்றேன். "நீ எல்லாம் எப்படி மேடை ஏறத் துணிந்தாய்? நானும் ஒரு வீணை வித்துவான். என் வாசிப்பு..." என்று தன் வாசிப்பைப் பற்றி மிகவும் புகழ்ச்சியாகவும் என்னை மிகவும் திட்டியும் பேசினார். எனக்கு அழுகையே வந்துவிட்டது.

வீட்டிற்குப் போன பின் அப்பாவிடம் நடந்ததைச் சொன்னேன். அப்போதும் அவர்



அதே புன்சிரிப்பை உதிர்த்தார். "பார்த்தாயா? நேற்று ஒருவர் உன் வாசிப்பை வானளாவப் புகழ்ந்தார். அதையே இன்று இன்னொருவர் இகழ்கிறார். இந்த இரண்டையுமே சமமாகப் பாவிக்கக் கற்றுக் கொள். விமரிசனங்களைக் கண்டு அதிகமாகச் சந்தோஷமும் படக் கூடாது. மனத்தையும் தளரவிடக் கூடாது. ஏனென்றால் விமரிசனம் ஒரு தனி மனிதரின் அபிப்பிராயம். இதை உனக்கு ஒரு பாடமாக வைத்துக் கொள்" என்றார்.

அதற்குப் பிறகு என் எழுத்து, இசை இரண்டிற்கும் கிடைக்கிற விமரிசனங்களை நான் ஏற்கும் விதமே மாறிவிட்டது.

என் கணவருடைய பாட்டி வேலரி இருந்த இடம் அமெரிக்காவில் நார்த் கரோலினா (North Carolina). அது நாங்கள் அப்போது வசித்த கனெக்டிகட் (Connecticut) மாநி லத்திலிருந்து சுமார் அறுநூறு மைல் தள்ளியிருந்தது. பென்னெட்டுக்குக் கடிதம் எழுதக் கைவராது. அதனால் கட்டாயமாக அடிக்கடி தொலைபேசியில் கூப்பிட்டு வேலரியுடன் பேசிவிடுவார். நடக்கும் விஷ யத்தையெல்லாம் ஃபோனிலேயே சொல்லி விடுவதால் கடிதம் எழுத வேண்டும் என்ற அவசியமும் இருக்கவில்லை.

ஆனால் நாங்கள் வேலரியை நேரில் பார்க்கப் போனபோது பென்னெட்டிடம் இனி தனக்குக் கடிதமே எழுதும்படி கேட்டுக் கொண்டார். அவர் அதற்குச் சொன்ன காரணம் என்னை நிறைய யோசிக்க வைத் தது.

"நீ சுலபமாக இருக்கிறது என்று மாதம் இரண்டு தடவை போனில் பேசி விடுகிறாய். பேச்சு முடிந்தவுடன் நாம் பாட்டுக்கு வேறு வேலை பார்க்கப் போய்விடுகிறோம். எனக்கோ வயசாகிக் கொண்டு வருகிறது. நாம் என்ன பேசினோம் என்று நினைத்துப் பார்ப்பேன். சில சமயங்களில் சரியாக ஞாபகத்திற்கே வராது. நீ கடிதம் எழுதினால் நான் அதை அடிக்கடி எடுத்துப் படிப்பேன். உன் கையெழுத்தைப் பார்க்கும்போது உன்னைப் பார்ப்பது போலவே இருக்கும். வயசான காலத்தில் தனியாக வாழும் எனக்கு இந்தக் கடிதங்கள்தான் டானிக் மாதிரி" என்றார்.

பென்னெட்டும் நானும் அவருக்கு எழுத ஆரம்பித்தோம். அது மட்டுமல்ல. அதற்குப் பிறகுதான் நானும் பல நண்பர்களுக்கும் கடிதங்களை எழுத ஆரம்பித்தேன். கதை அல்லது பாட்டு பிடித்து யாரையாவது பாராட்ட விரும்பினால் அவர்களை நேரில் பார்க்கும் போது சொல்லிக் கொள்ளலாம் என்றோ, தொலைபேசியில் கூப்பிட்டுச் சொல்லலாம் என்றோ இருப்பதில்லை. நான்கே வரிகளானாலும் பாராட்டை எழுத்தில் தெரிவிக்க ஆரம்பித்தேன்.

அந்த நண்பர்களையோ, இசைக் கலைஞர்களையோ, எழுத்தாளரையோ நேரில் சந்திக்கும்போதுதான் நம் கடிதம் அவர்களுக்கு எவ்வளவு பிடிக்கிறது என்று புரிகிறது. பாராட்டுக் கடிதங்களைப் பொதுவாக யாரும் தூக்கிப் போடுவதில்லை. அதுவே வாய் வார்த்தையாகச் சொல்வது நாளடைவில் மறந்து போக வாய்ப்பு இருக்கிறது.

இந்தக் கடிதம் எழுதுகிற வழக்கம் எனக்குப் பழைய நண்பர்களை நிலைக்க வைத்திருக்கிறது. இன்னும் பல புதிய நல்ல நண்பர்களையும் ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது!

- கீதா பென்னெட்



## தயாரிப்பாளருக்கு யோசனை

பிளாஸ்டிக் தண்ணீர் வடிகட்டி தயாரிப் பாளருக்கு ஒருயோசனை:- தண்ணீர் வடிகட்டி பெரிய அளவில் தயாரிப்பதுபோல் ஒன்று அல்லது 1½ அடி உயரத்திற்கு தயாரித்து விற்பனை செய்தால் அதைப் பெண்கள் வாழைப்பழம் போன்றவை களையும் பழங்களால் தயாரித்த சாலட், காய்களால் தயாரித்த சாலட்களை ஈ, கொசுக்கள் அதன்மேல் உட்காராமல் மூடி வைக்க சௌகரியமாக இருக்கும். இந்த வலைமூடியை கட்டாயம் பெண்கள் விரும்பி வாங்குவார்கள்.

–லலிதாசுப்ரமண்யம்

பல தேசப்
பெருமைகளை
முகத்திலே பிரதிபலிக்கும்
பேரெழில் பெண்மணி

குடிகூராவின் மூன்று இன்டர்நேஷனல் ப்யூட்டி டால்க்குகள். உலகிற் சிறந்த நறுமணங்கள் நிரம்பியவை. பட்டுப்போன்று மென்மை யானவை. உங்கள் முகத்திற்குப் பேரெழில் சேர்ப்பவை. பல தேசங் களின் பெருமைகளின் சிறப்பை உங்கள் முகத்தில் பிரதிபலிக்கச் செய்பவை.




Cuticura
International
BEAUTY TALCS

Chaitra Leo Burnett B.MP 10/91. TAM

சந்துரு கத்திக் கொண்டிருந்தான்.

"முதலில் அந்தச் சனியனை ஒழிச்சுக் கட்டு..."

சமையல் அறையில் வேலையாக இருந்த பாமா அங்கிருந்தபடியே கத்தினாள்.

"என் தம்பி ஊரிலே இருந்து வந்தாலும் வருவேன்னு எழுதி இருக்கான். அதுக்காக அவனை சனியன் கினியன்னு திட்டணுமா?"

"உன் தம்பி பெருமையை யார் கேட்டா? உன்னோட செல்லத்தைத்தான் சொல்றேன்."

"என்னோட செல்லம் நீங்கதான்!"

"வழியுது!... ரோட்டிலே போற கழிசடை நாய் ஒண்ணை, வீட்டுக்குக் காவலா இருக்கும்னு சோறு போட்டு வளக்கறே பாரு. அந்தச் சனியனைத்தான் சொல்றேன். தொலைச்சு தலைமுழுகு..."

"பாவங்க அது. அது பாட்டுக்கும் மிச்சம் மீதியை எல்லாம் தின்னுட்டு வாசல்லே படுத்துக் கிடந்து காவல் காக்குது..."

"மண்ணாங்கட்டி... மிச்சம் மீதியாவது? அது தின்னமிச்சம்தான் எனக்கு. வரவர காப்பி ஒரே கறுப்பா இருக்கேன்னு பார்த்தா, பாதிப் பாலை அந்தச் சனியனுக்கு விட்டுத் தொலைக்கறேங்கிறது அப்புறம்தான் தெரிஞ்சது..."

"பாதிக்குப் பாதி தண்ணி ஊத்தித்தான் விடறேன்."

"எனக்குக் கொடுக்கற காப்பியைச் சொல்றியா?"

"உங்களுக்கு எப்பவும் கிண்டல்தான்... பாவம் அது நல்ல ஜாதி நாய்ங்க..."

"ஆமாம் நாய் ஜாதிதான்!"

"வீட்டுக்குக் காவலுங்க..."

"மண்ணாங்கட்டி... அது திருடனைப் பார்த்து குலைக்கறதா தெரியல்லை. மீட்டர் ரீடிங் எடுக்க வந்தவனைப் பார்த்து அன்னிக்குக் குலைச்சது. வந்தவன் ரீடிங் கார்டையும் தூக்கிட்டு, துண்டைக் காணோம் துணியைக் காணோம்னு ஓடிட்டான். மறுபடியும் நான்தான் நாயா அலைஞ்சு, நரியா ஊளையிட்டு எலக்ட்ரிசிட்டி ஆபீஸ் போய் கார்டை வாங்கிட்டு வந்தேன்."

"இருங்க... இருங்க நம்ம தெருவுலே ரேஷன் கார்டு செக்கிங்குன்னு போலி ஆட்கள் சில பேர் ஏதோ பேப்பரைக் காட்டி, வீடு வீடா ரேஷன் கார்ட் புதுக பண்றோம்னு சொல்லி, ஐம்பதும் நூறுமா வாங்கிட்டுப் போகல்லை? நீங்க கூட அன்னிக்குச் சொன்னீங்களே... நல்ல

# நாய் படாத பாடு



## விமலாரமணி

வேளை நம்ம வீட்டிலே நாய் இருக்கிறதாலே அவங்க இங்கே வரல்லைன்னு சொல்லலை?"

"நாய் இல்லேன்னா என்ன? நீ இல்லையா? குரைக்காதே... சீ... சீ.. முறைக்காதே... அவ்வளவு கலபத்துலே ஏமார்ற பெண் நீ இல்லைன்னு சொன்னேன். போஸ்ட்மேன் பாதி நாளைக்கு லெட்டரை வாசல்லேயே வீசிட்டுப் போயிடறான். நான்தான் சாக்கு வைச்சுட்டு பேப்பர் பொறுக்கறவன் மாதிரி பொறுக்கிட்டு வர வேண்டி இருக்கு. நான் பேப்பர் படிக்கறேனோ இல்லையோ.. இந்தச் சனியன் தினம் தினம் பேப்பரைப் படிச்சுக் கிழிக்குது..."

சந்துரு சொல்வதும் உண்மைதான். 'தடதட'வென்று பேப்பர் பையன் சைக்கிளில் வந்து, இவர்கள் வீட்டுக் காம்பவுண்ட் சுவரைப் பார்த்து குறி வைத்து பேப்பரை வீச... ஆகாயத்தில் பறந்து வரும் அந்தப் பேப்பரைப் பார்த்து ஏதோ ப்ளையிங்சாஸர் பறந்து வருகிறது என்று நினைத்து இவர்கள் அருமை நாய் டைகர் அதை 'காட்ச்' பிடித்துக் கவ்வி, குதற...

சந்துருவுக்கும், பேப்பர் பையனுக்கும் தினம் தினம் சண்டை! சில நாட்கள் பேப்பர்காரன் வந்த கோபத்தில் இவர்கள் வீட்டு வாசலில் இருக்கும் கருவேப்பிலை மரத்தின் மீது பேப்பரை விசிறி அடித்து... பேப்பர் 'ஜிவ்'வென்று கிளையில் சிக்க... இவர் பாதி நாட்கள் கருவேப்பிலை பறிக்கிறாரோ இல்லையோ... பேப்பர் பறிப்பார் அப்புறம் படிப்பார்!

"நம்ம வீட்டுக்கு நாயும் வேண்டாம்... பூனையும் வேண்டாம். இதை ஒழிச்சுக் கட்டு... நீ இதை அனுப்ப ஏற்பாடு பண்ணலேன்னா நான் கார்ப்பரேஷனுக்கு சொல்லி நாய் வண்டியிலே பிடிச்சு போட்டுட ஏற்பாடு பண்ணிடுவேன்."

"வேண்டாம்... வேண்டாம் பாவங்க... நாய் வண்டியிலே நம்ம டைகரை அனுப்ப வேண்டாம். ஆமா... ஊசி போட்டுக் கொல்லுவாங்களா? கல்லால அடிச்சே கொன்னுடுவாங்களா?"

"ஆமாம்... உன்னோட டைகர் பெரிய காதல் இளவரசன் மஜ்னு... கல்லாலே அடிச்சுக் கொல்லுவாங்க. சும்மா இரு... இன்னும் ஒரு வாரத்திலே ஒண்ணு அது ஒழியணும். இல்லே..."

"இல்லே?"

சந்துரு பாமாவைப் பார்த்தான்.

அது ஒழியணும் இல்லை, நான் ஒழியணும் என்று சொன்னால், பாமா பார்க்கிற பார்வையைப் பார்த்தால், இரண்டாவதே தேவலை என்று சொல்லி விடுவாளோ என்று பயந்து வாக்கியத்தை முடித்தான்... - "அது ஒழியணும்... இல்லே, நானே ஒழிச்சுடுவேன்..."



முகத்தைக் கழுவியதுமே ஒரு சில நிமிடங்களில் எண்ணெய்ப் பசையின் பளபளப்பு மறுபடி காணப் படுமே... அந்தக் கவலை இனி மேல் இல்லை.

பாண்ட்ஸ் இன்ஸ்டிட்யூட் உங்களுக்காகவே உருவாக்கியுள்ளது — புதிய பாண்ட்ஸ் ஆயில்-பாலன்ஸ் ஃபார்முலா.

முற்றிலும் எண்ணெயே இல்லாதது.

எண்ணெய்ப் பசையான சருமத்தில் ஸ்பாஞ்சு போல் செயல்படும் கிரீம்

புதிய பாண்ட்ஸ் ஆயில்-பாலன்ஸ் ஃபார்முலா — பகல் நேரத்திற்கான மிக மென்மையான கிரீம். இது மிக எளிதாகவும் சீராகவும் பரவும்.

சருமத்தில் பட்டவுடனேயே, அதன் மேற்பரப்பில் உள்ள அதிகப்படியான எண்ணெயை இது உறிஞ்சிக் கொள்கிறது.

**“எவ்வளவு சந்தோஷமாக இருக்கிறது தெரியுமா? எண்ணெய்ப் பசையான சருமம் இனிமேல் எனக்கு இருக்காது!”**

இந்த விசேஷ கிரீம் 100% முற்றிலும் எண்ணெயே இல்லாததால், இதன்மீது தூசு மற்றும் அழுக்குக்கறை ஆகியவை எளிதில் படியாது.

இதன் பயன் — ஒரு சில விநாடிகளில் புத்துணர்ச்சி மற்றும் பொலிவுடன் கூடிய, பளபளப்பான தோற்றம் கொண்ட, மிகத் தெளிவான சருமம்.





மேற்பரப்பில் உள்ள அதிகப்படி எண்ணெயை இதன் விசேஷ ஃபார்முலா அமைப்பு உறிஞ்சிக்கொள்கிறது.



சருமத்தைப் ஃப்ரெஷ்ஷாகவும், பொலிவுடன் கூடிய தோற்றத்துடனும் வைத்திருக்கிறது!

சருமப் பாதுகாப்புக்கு உலகளாவிய ஆதாரமாகத் திகழும் பாண்ட்ஸ் இன்ஸ்டிட்யூட், பெண்களின் சருமப் பாதுகாப்புக்கான தேவைகளை நன்கு உணர்ந்து அவர்களுக்கு ஏற்ற விசேஷத் தயாரிப்புகளை உருவாக்குவதில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டுள்ளது.






பாண்ட்ஸ் ஆயில்-பாலன்ஸ் ஃபார்முலா மூலம் சிறந்த பலன்களைப் பெற உகந்த வழி இதோ:

- முகத்தைக் கழுவியதும் சருமத்தை மெதுவாகத் துடைத்து, அது உலர்ந்ததும் ஒரே சீராக, மேற்புறம் நோக்கி, சுற்றிச் சுற்றிப் பாண்ட்ஸ் ஆயில்-பாலன்ஸ் ஃபார்முலா தடவுங்கள். மூக்கு மற்றும் நெற்றிப் பகுதியில் (T-Zone) விசேஷ கவனம் தேவை. இந்த இடங்கள்தான் அதிக எண்ணெய்ப் பசையுடன் காணப்படும்.
- அவ்வப்பொழுது தேவைப் படும்போதெல்லாம் அடிக்கடி பயன்படுத்துங்கள்.

பாண்ட்ஸ் போல் வேறு எவரும் உங்கள் சருமத்தைப் பராமரிப்பதில்லை

POND'S INSTITUTE

O&M 8256 TM R



அக்கம் பக்கம் உள்ளவர்கள், 2 ஆழாக்கு அரிசிக்காக, கிரைண்டரில் போட முடிய வில்லை, கழுவ நேரம் ஆகும் என்று மிக்ஸி யில் அரைக்கின்றனர். இதனால், மிக்ஸியும் சீக்கிரம் தேய்வதுடன், உளுந்தும் அதிகம் இழுக்கும். ஆகையால், நாலு பேரும் சேர்ந்து, ஒரே அளவில், அரிசி, உளுந்து போட்டு அரைத்துக் கரைத்து, நாலு சம பாகங்களாகப் பிரித்துக் கொள்ளலாம். நால்வரும் முறை போட்டு, அவரவர் கிரைண்டரில் அரைக்கலாம். முயன்று பாருங்களேன்.

- எஸ். விஜயலட்சுமி.

நாட்கள் நகர்ந்தன.

அன்று -

பாமாவின் பக்கத்து வீட்டுக்காரி பரிமளா பெருமையுடன் இவள் வீடு தேடி வந்தாள். கையில் ஒரு பேர்ல்பெட் ஜார்.

"என்ன பரிமளா? ஏது இந்த ஜார்? ஏதா வது பட்டுப் புடவை வாங்கினியா? அதுக்கு இணைப்பா இதைக் கொடுத்தாங்களா?" பாமா கேட்டாள்.

ஆயிரம் ரூபாய் பட்டுப் புடவை வாங்கி னால் ஒரு ரூபாய் கர்சீப் இனாம் என்றால் பரிமளா முதலில் அதை வாங்கி விடுவாள்! 'கன்சஷனில்' பொருட்களை வாங்குவதில் மன்னி. சிறப்புத் தள்ளுபடி என்று எங்காவது 'போர்ட்' இருந்தால் போதும். உடனே அந்தக் கடைக்குள் நுழைந்து விடுவாள் பரிமளா. புடவைக் கடையோ, பாத்திரக் கடையோ, குக்கர் கடையோ எதுவாக இருந்தாலும் சிறப்புத் தள்ளுபடியில் சில பொருட்களை வாங்கித் தள்ளிக் கொண்டு வர வேண்டும். பிறகு அது சரியில்லை என்று இவள் பக்கம் 'ஸ்பெஷல் தள்ளுபடி'யில் தள்ளுபடி செய் வாள். அந்தப் பரிமளாதான் - இவளுக்குப் பேரே 'தள்ளுபடி பரிமளா'தான்! - இன்று ஒரு 'ஜாருடன்' சந்திக்க வந்திருந்தாள்.

பரிமளா முகத்தில் ஒரு 'பரிமளம்' இருந்தது.

"புதுசா கம்பெனி ஒண்ணு சிட்பண்ட்ஸ் ஆரம்பிச்சிருக்காங்க. சில வீடுகளுக்கு வந்து அவங்களே தங்களோட கம்பெனியோட ஸ்டிக்கரை ஒட்டுடிட்டுப் போவாங்களாம். எந்த வீடுன்னு குறிப்பா ஏதும் கிடையாது. அப்படி ஸ்டிக்கர் ஒட்டின வீட்டுக்கு, மறுநாள் அந்தக் கம்பெனியோட ஆட்கள் வந்து இப்படி எதிர்பாராத பரிசு ஒண்ணு தந்துட்டுப் போவாங்களாம். நீ அந்தக் கம்பெனியிலே சிட்டு எடுக்கணும்னு அவசியம் கூட இல்லை. இது ஒரு ஸ்பெஷல் பரிசு! நேத்திக்கு அவங்க உங்க வீட்டுக்குத் தான் இந்த ஸ்டிக்கரை ஒட்ட வந்தாங்க. நீ வெளியிலே போயிருந் தியா? உன்னோட டைகர் வந்தவங்களை உள்ளே விடாம ஒரே குலையாய் குலைச்சது. அவங்க பயந்து போய் எங்க வீட்டிலே இந்த ஸ்டிக்கரை ஒட்டிட்டுப் போயிட்டாங்க. உன்னாலதான் எனக்கு இந்தப் பரிசு கிடைச் சது. அதான் உனக்கும் காட்டிட்டுப் போக லாம்னு வந்தேன்..."

பாமாவுக்குப் பற்றிக் கொண்டு வந்தது. அழகான 'ஜார்'. ஒரு கிலோ ஒரேயடியாக சந்துரு வாங்க மாட்டான். இருக்கட்டுமே, சர்க்கரை போட்டு வைக்கலாம். அத்தனை அழகான ஜார். இப்படி அதிர்ஷ்டம் கை நழுவிப் போய் விட்டதே. எல்லாம் இந்தச் சனியன் டைகரால் வந்தவினை!

டைகரை அனுப்பி விட வேண்டியது தான்! அன்றே பாமா தீர்மானித்தாள். எப்படி அனுப்புவது?

இவர்கள் வீட்டுக்குத் தோட்ட வேலை செய்ய ஒருவன் வருவான். பாண்டி என்று பெயர். பாண்டியை அழைத்தாள்.

"பாண்டி, இந்த நாயைக் கொண்டு போய் எங்கேயாவது தூர தள்ளி விட்டுட்டு வந்துடு. பத்து ரூபாய் தரேன்..." என்றாள்.

பாண்டி பத்து ரூபாயை வாங்கிக் கொண்டு ஒரு கயிற்றில் நாயைக் கட்டிக் கொண்டு கூட்டிப் போனான். போவதற்கு முன் டைகருக்கு ஏக உபசாரம். பிற்பகல் காப்பிக்கு வைத்திருந்த பாலை எல்லாம் கிண்ணத்தில் ஊற்றி அதைக் குடிக்க வைத் தாள். பன், பிஸ்கெட் என்று ஏக பிரிவு உப சாரம்.

பாண்டி போய் இரண்டு மணி நேரமாகி இருக்கும்.

வாசலில் ஏதோ சப்தம்...

டைகர் குரல் மாதிரி இருக்கிறதே! பாமா

வாசலுக்கு வந்தாள்.

டைகரேதான்! வாலை ஆட்டு ஆட்டு என்று ஆட்டியபடி நின்றது. பாண்டி டைகரை கொண்டு விட்டானா? இல்லை.. டைகர் பாண்டியைக் கொண்டு போய் விட்டு விட்டு வந்திருக்கிறதா?

மறுநாள் காலை பாண்டி வந்தான்.

"அஞ்சு மைலுக்கு அப்பாலே கொண்டு போய் விட்டுட்டு வந்துட்டேன். கால் வலிச் சுது. அதான் ராத்திரி வீட்டிலே தங்கிட்டு காலையிலே சமாசாரம் சொல்ல வந்தேன்'' என்றான்.

வாசலில் 'சிட்' மூலையில் சமர்த்தாய் படுத்து உறங்கிக் கொண்டிருந்த டைகரை, பாண்டிக்கு பாமா காட்டிய போது பிரமித் துப் போனான்.

"வளர்ந்த நாய்.. லேசுலே போகாதும்மா. மோப்பம் பிடிச்சு திரும்பி வந்துடும். பேசாம கார்லே கூட்டிட்டுப் போய் மருதமலை பக்கம் விட்டுட்டு வந்துடுங்க. பத்துப் பதி னைஞ்சு மைல் தொலைவு..."

அதுவும் சரிதான். சந்துருவிடம் சொன் னாள்.

"உன்னோட அழகு நாய்க்குக் கார் சவாரி வேறயா? சனியன் சீட்டிலே உட்காருமே... வந்தவுடனே சீட்டை எல்லாம் 'டெட்டால்' போட்டுத் துடைக்கணும். பின்சீட்டிலே சனி யனை உட்கார்த்தி வை. பின்னால இருந்து என்னை நக்கி இக்கி வைக்கப் போறது. நல்லா கட்டி வை..." பத்துக்கட்டளை மாதிரி ஏகப்பட்ட கட்டளைகள்!

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. சந்துருவுக்கு லீவு. தயாராகக் காரை வாசலில் எடுத்து நிறுத்தி வைத்திருந்தான் சந்துரு. டைகர் தனக்குத்தான் வழியனுப்பு விழா என்பது புரியாமல் அதுவும் கூடக்கூட ஓடி வந்து, காரின் நாலு சக்கரத்திலும் கால் தூக்கி 'புண்ணியாவஜனம்' பண்ணி வைத்தது தன் பங்கிற்கு!

"பாவம்... அதைப் பார்த்தா பாவமா இருக்குங்க..."

"பாவமாவது புண்ணியமாவது... சீக்கிரம் கயித்தைக் கொண்டா... சனியனைக் கட்டு..."

கணவனும், மனைவியும் கையில் கயிறுடன் ஓடி வருவதைப் பார்த்து டைகர் பயந்து ஓட... இருவரும் அதைத் துரத்த... ஒரு வழியாக மூச்சு வாங்கியபடி அதைப் பிடித்து பாமா கட்ட... சந்துரு... அதைப் பிடித்துக் கொள்ள...

"சனியன்... சனியன்... கையெல்லாம் நக்கறது..."

"எவ்வளவு நன்றி பாருங்க... நன்றி மறப் பது..."

"திருக்குறள் பாடம் அப்புறம் நடத்து.. ஏய்... பேசிகிட்டே என் கையையும் சேர்த்துக் கட்டாதே... அப்புறம் எவன் கார் ஓட்டறது?'' சந்துரு கத்தினான்.

ஒருவழியாக அமளி எல்லாம் முடிந்து டைகரைக் காரில் ஏற்றிய போது -

வாசலில் ஆட்டோ ஒன்று வர அதிலிருந்து பாமாவின் தம்பி சேகர் இறங்கிக் கொண் டிருந்தான்.

"நான் போட்ட லெட்டர் கிடைச்சதா அக்கா?" - என்றபடி பெட்டி படுக்கையுடன் உள்ளே வந்தான்.

"அடேடே நாயா?"

"அடேடே நாய் இல்லை. நாய்தான்!"

''வளக்கறீங்களா? சொல்லவே இல் லையே..''

"இதுக்கு என்ன பேரா போடுவாங்க?"

"நல்ல ஜாதி நாய்... ஆமா என்ன பேர்?" பாமா மென்று விழுங்கினாள்.

சே... நாயின் மீது இத்தனை பாசமும், பரிவும் வைத்திருக்கும் தம்பி எதிரில் அற்பத் தனமாகப் பேசக் கூடாது.

"ஆமாம்... நாய்... பெட்டாக்! பேர் டைகர். வீட்டிலே இருக்க மாட்டேங்குது... அதான் காருலே 'வாக்' கூட்டிட்டுப் போகலாம்னு நாங்க ரெண்டு பேரும் கிளம்பினோம்."

"இப்படித்தான் அக்கா... இந்த மாதிரி 'பெட்'களை வளக்கறது பெரிசு இல்லை. அதுகளோட மனசை புரிஞ்சுகிட்டு அதை வளக்கணும்... குட்..."

சந்துரு கோபமாய் உள்ளே திரும்பி வந் தான். சனியன் கையை நக்கியதுதான் மிச்சம்.

என் அத்தை செய்யும் தயிர் வடையின் ருசியே ருசிதான்.
எப்படி இத்தனை ருசி உங்கள் தயிர் வடைக்கு மட்டும்?
என்று கேட்டேன். ''தயிர் வடைக்கு உளுத்தம் பருப்பு ஊறவைக்கும் போது கூடவே ஐந்தாறு முந்திரிப் பருப்பையும் ஊறவைத்து அரைத்துச் செய்தால், மெதுவாகவும் ருசியாகவும் இருக்கும். அது மட்டுமல்ல, வடைக்குள்ளே கூடுகூடாகவும் இருக்கும்'' என்றார்.

தாராவீலா








— டி.எ. தேவி

லைப்பாய் சோப் போட்டுக் கழுவ வேண்டும்.

இன்று வீட்டுச் சாப்பாடா? இல்லை ஹோட்டலா? தெரியவில்லை.

அக்காவும், தம்பியும் பேச ஆரம்பித்தால் இப்போதைக்கு ஓயமாட்டார்களே!

மருதமலை முருகா!

**“எ**ன்னங்க... நான் தீர்மானம் பண்ணிட்டேன்...” - என்றாள் பாமா.

“என்னன்னு? என்னைக் கொண்டு போய் மருதமலைகிட்டே விட்டுடலாம்னா?”

“சும்மா இருங்க... நம்ம வீட்டு வேலைக்காரியோட மகன் ராஜுவை வரச் சொல்லியிருக்கேன். அவன்கிட்டே நம்ம டைகரை கார்ப்பரேஷன்லே கொண்டு விட்டுடச் சொல்லியிருக்கேன். கண் எதிரிலே டைகரைப் பிடிச்சுட்டுப் போறதைப் பார்த்தா கஷ்டமா இருக்கும். அதனால கண் காணாம என்னவோ பண்ணிட்டுப் போகட்டும்...”

இவள் பேசப் பேச...

ராஜு வந்து விட்டான்.

குரைக்கும் டைகரை அடக்கி, கண்ணீர் வழிய அதற்கு விடைகொடுத்து அனுப்பினாள் பாமா.

“கொல்லும் போது ரொம்பக் கஷ்டப்படுத்தாமக் கொல்லச் சொல்லு... எங்க எலக்ட்ரிக் ஷாக்கிலேதானே கொல்லுவாங்க? இல்லை தூக்கிலே போடுவாங்களா?”

கேள்வி கேட்டு இவள் சந்துருவைக் கொலை செய்தாள்.

“சரி... சரி... அழாதே... அது ஆயுஸு... அவ்வளவுதான். வா சாதம் போடு...”

“இல்லீங்க... மனசே சரியில்லை. இன்னிக்கு நான் பட்டினி... டைனிங்டேபிள்லே உங்களுக்கு எல்லாம் எடுத்து வைச்சிருக்கேன். நீங்க சாப்பிடுங்க...”

ராஜு ஆட்டோ பிடித்து டைகருடன் போவதை கண்ணீர் வழிய பார்த்துக் கொண்டிருந்தாள் பாமா.

ஒரு மணி நேரத்தில் ராஜு திரும்பி வந்தான்.

நாயை கார்ப்பரேஷனில் விட்டு விட்டதாகச் சொன்னான்.

அதற்கு மேல் அவன் பேசுவதைக் கேட்க இவளால் தாங்க முடியவில்லை.

அழுதபடி உள்ளே ஓடி விட்டாள்! வளர்த்த பாசம்... நாய்ப் பாசம்... சீ... தாய்ப் பாசம்!

ஒரு மணி நேரம் கழித்து...

வாசலில் ஆட்டோ சப்தம்...

அத்துடன் டைகரின் குரல்!

டைகர்... டைகரா?

கண்ணீரைத் துடைத்தபடி வாசலுக்கு ஓடோடி வந்தாள் பாமா.

ஆட்டோவிலிருந்து இவள் தம்பி சேகர் இறங்கிக் கொண்டிருந்தான்.

அவனுடன் டைகர்!

“நல்லவேளை... நான் கார்ப்பரேஷன் ஆபீஸுக்கு ஏதோ வேலையாய்ப் போனேன். பார்த்தா... அங்கே இதைக் கட்டிப் போட்டிருக்காங்க. நான் கொஞ்சம் லேட்டா போயிருந்தா இதைக் கொன்னிருப்பாங்க. நீ எத்தனை ஆசையா வளர்த்த நாய் இது! நான் கெஞ்சிக் கூத்தாடி எப்படி எப்படியோ இதை ‘மீட்டு’க் கொண்டு வந்திருக்கேன். அக்கா, இனிமே இது கழுத்திலே ஒரு ‘வார்’ கட்டி அதுலே ‘லைசன்ஸ்’ மாட்டி விட்டுடு... அப்பத்தான் யாரும் பிடிச்சுட்டுப் போக மாட்டாங்க...”

சேகர் பேசப் பேச...

மரணத்தின் வாயிலிருந்து தப்பி வந்த டைகர் வாலை ஆட்டியபடி இவளை முகர்ந்து, முகர்ந்து சுற்றிச் சுற்றி வர...

பாதி சாப்பாட்டில் உள்ளே இருந்து எழுந்து வந்த சந்துரு எரிச்சலுடன் பாமாவைப் பார்க்க...

பாமா மகிழ்ச்சியும், வேதனையும் கலந்த கலவையுடன் சந்துருவைப் பார்க்க...

ஏக காலத்தில் இருவரும் ‘குபீரென்று’ சிரித்தனர்!

உங்கள் மனதைக் கவர்ந்த

“மென்மை...மென்மை... ராகா... ராகா...”

இப்பொழுது ஒரு புதிய வடிவத்தில்

# ராகா ரீபில் பேக்




சேமியுங்கள்

ரூ.4/-




**ராகா - சீயக்காய்**

உங்கள் எண்ணெய் குளியலை எளிமையாக்கி, கேசத்திற்கு இயற்கையான ஊட்டமளித்து மேலும் மென்மையாக்குகிறது.

**ராகா - செம்பருத்தி**

உங்கள் உடலுக்குக் குளிர்ச்சி தந்து, கேசத்திற்குக் கருமை தந்து கூந்தல் வளர்ச்சிக்கும் உதவுகிறது.



ராகா ஹெர்பல் பவுடர், சீயக்காய், செம்பருத்தி மற்றும் பல அரிய மூலிகைகளின் நற்குணங்களைக் கொண்ட ராகா இப்பொழுது வித்தியாசமான ஒரு ரீபில் பேக்கில் கிடைக்கிறது.



**Raaga**

Herbal powder

* ரீபில் பேக் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் மற்றும் கர்நாடகாவில் மட்டும் கிடைக்கிறது. ரீபில்பேக்கின் விலை கன்டெய்னரை விட ரூ.4/- குறைவு.

PROFAD:NCPL-TAM:945:94

# இளமை இடைவெளி இருக்கிறதா?

"'ஜெனரேஷன் கேப்' என்பதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?" என்று ஒரு வாலிபன், ஒரு ஸ்வாமிஜியிடம் கேட்டானாம். "அப்படி ஒன்று இருப்பதாக ஏன் கற்பனை செய்து கொள்ள வேண்டும்?" என்று அவர் திருப்பிக் கேட்டாராம்.

அதற்கு இளைஞன், "இந்த கம்ப்யூட்டர் யுகத்தில் மூக்கைப் பிடித்துக் கொண்டு காயத்ரி பண்ணுடா என்கிறார் என் தாத்தா. அந்த உபயோகமற்ற வேலைக் கெல்லாம் யாருக்கு நேரம் இருக் கிறது? டி.வி. பார்த்தால் மனஸூம், புத்தியும் கெட்டுப் போவதுதான் பலன் என்கிறார் தாத்தா. யார் கேட்பது இவர் சொல்வதை?" என்றானாம்.

"காயத்ரி உபயோகமற்றது என்று எப்படிச் சொல்கிறாயப்பா? உனக்கு அதைப் பற்றித் தெரியுமா?" என்று கேட்டாராம் ஸ்வாமிஜி கூடவே, "கம்ப்யூட்டர் மட்டும் குப்பை இல்லையா?" என்றும் கேட் டிருக்கிறார். "கம்ப்யூட்டர் பற்றி நான் நிறைய படித்திருக்கிறேன். அதனால் தெரியும்" என்றானாம் அவன். "அப்படியானால் காயத்ரி பற்றி தாத்தாவிடம் போய் திறந்த மனதுடன் கேட்டுத் தெரிந்து கொள். அப்பொழுது உபயோக மற்றது என்று சொல்ல மாட்டாய். அப்படியே டி.வி. பற்றியும் அவருக்கு எடுத்துச் சொன்னால், அதிலும் பயனுள்ள விஷயங்களும் இருப்பதை ஒத்துக் கொள்வார் பார்" என்று ஸ்வாமிஜி அன்புடன் கூறவும், அந்த இளைஞனும் பயனடைந்ததாகக் கேள்வி.

நடப்பு இதுதான். இளம் தலைமுறையினருக்கு மனத்தில் பதியும்படியாக எடுத்துச் சொல்ல, பெரியவர்களுக்குப் பொறுமையும் விஷய ஞானமும் தேவை. பொருள்களை, காரணங்களை விளக்கிச் சொன்னால், கேட்கத் தயார்தான் இக்காலத்துக் குழந்தைகளும்.

குதிகாலை அலம்பாவிட்டால் சனி பிடித்துக் கொள்ளும் என்பதை நாம் நம்பினோம். குதிகாலில் குளிர்ச்சி ஏற்பட்டால், மூளையில் சூடு தணிகிறது என்று மேல் நாட்டினர் கண்டுபிடித்திருக் கிறார்கள். நெற்றிப் பொட்டில் குட்டிக் கொண்டால் ஞாபகசக்தி விருத்தி அடைகிறது என்பதும் விஞ்ஞானபூர்வமான உண்மை. அதே போல் அன்றாட வாழ்க்கை யில் காலை முதல் இரவு வரை செய்யும் ஒவ்வொரு செயலையும், விஞ்ஞானம், மெய்ஞ்ஞானம் இரண்டுடனும் இணைத்தே பெரியோர் அமைத்திருக்கின்றனர்.



பிளாஸ்டிக் குடம் வீணாகிப் போனால் தூக்கி எறியாமல் அதை பாதிக்கு மேல் வெட்டி தூக்கி எறிந்து விட்டு குப்பைக் கூடையாக பயன்படுத்தலாம்.

- எம். சாந்தி செல்வம்



நெற்றிக்கு இட்டுக் கொள்வதன் மகிமை சொல்லி மாளாதது.

இயற்கையாகக் கிடைக்கும் சீயக்காய், சாம்பல் இவற்றை உபயோகப்படுத்தி வந்த போது, இப்படி கையெல்லாம் சொரசொரப்பாகவும், முகத்தில் இளமையில்லாமலும் இருந்ததா? தினமொன்றாக முளைக்கும் சோப்புகளும், கிளீனிங் பௌடர்களும்தானே இப்படி ஆக்குகிறது?

க்ஷேத்ராடனம் போயிருந்த போது - ஒரு ஊரில் தேர்த் திருவிழா - செருப்பில்லாமல் நடக்க வேண்டி வந்தது. நல்ல கோடை வெய்யில். தார் ரோடிலும், மணல் ரோடிலும் கால் பொரிந்து போன போது, நடுநடுவில் சாணம் தெளித்த வீட்டு வாசல்களில் கால் வைத்த போது எவ்வளவு குளுமையாக, இதமாக இருந்தது தெரியுமா? போபால் கேஸ் விபத்தின் போது தவறாமல் அக்னி ஹோத்ரம் செய்து வந்த ஒரு குடும்பத்தினர் மட்டும் பாதிக்கப்படாமல் இருந்தது எதனால்? இப்படி எத்தனை அத்தாட்சிகள் வேண்டும், பழமையின் பெருமைக்கு?

குழந்தைகளைக் குற்றம் சொல்லு முன், நாம் ஒழுங்காக இருக்கிறோமா, நம் கலாசாரப்படி நடக்கிறோமா என்பதை முதலில் பரிசோதனை செய்து கொள்வோம். பிறகு, குழந்தைகளை, முரட்டுத்தனமாகத் திருப்பப் பார்க்காமல், கொஞ்சம் அவர்கள் போக்குப்படியும் விட்டு, நம் புராதனப் பழக்க வழக்கங்களின் பெருமையை, அவ்வப்போது புரியும்படி சொன்னால், ஏன் கேட்காமல் போவார்களாம்?

மேல்நாட்டு சங்கீதமும் நன்றாகத்தானிருக்கிறது. சில சமயம் கேட்க முடியாமல் சிரமமாக இருக்கிறது. சத்தத்தை வேண்டுமானால் கொஞ்சம் குறைத்து வைக்கிறாயா என்று கேட்கலாம். சங்கீதமென்றால் மனஸுக்கு அமைதியைத் தர வேண்டும். நரம்பைச் சுண்டி இழுக்கிறாப்போல இருக்கிறதில்லே, என்றெல்லாம் கொஞ்சம் சிடுசிடுக்காமல், சிரித்துக் கொண்டே சொன்னால், பலனில்லாமல் போகாது. பையன் கொஞ்சம் வழிக்கு வருவான். காலை வேளைகளில் பக்தி ஸங்கீதம் - அம்மா, அப்பாவுக்குப் பிடித்ததாக வைக்கலாமே என்று ஆரம்பிப்பான். (அவனுக்கும் பிடித்துத்தான் இருக்கும்!) சாயங்காலம் என் பாட்டு வைக்கட்டுமாம்மா என்று கேட்பதும் கூட முன்னேற்றம்தானே? தானே நல்லவற்றில் ருசி வந்தால், மற்றது மங்கி விடும்.

எச்சில் சுகாதாரத்துக்கு எதிரி என்பது இப்போது எல்லோருக்குமே தெரிந்துதானிருக்கிறது. புகை பிடிப்பது அவர்களோடு மட்டுமில்லாமல் மற்றவர்களையும் பாதிக்கிறதென்று படித்தவர்களுக்குக் கூட தெரியவில்லையே என்று மாணவர்களே சொல்ல ஆரம்பித்திருக்கிறார்கள். பிசினஸுக்காக - பார்ட்டிக்காக என்று போலி கௌரவத்தை, பெருமையாக நினைப்பார்கள், கெட்ட விஷயங்களில் போக மாட்டேனென்று திடமாக இருப்பதை, ஏன் பெருமையாக நினைக்கக் கூடாது?

காலம் மாறிக் கொண்டு வருகிறது. ஒரு பக்கம் நிறைய அக்கிரமங்கள் பெருகிக் கொண்டு வந்தாலும், நல்லவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வமும், விழிப்புணர்வும், இளம்தலைமுறையினரிடம் நிறையவே காணப்படுகிறது.

— லட்சுமி தேவநாதன்

பம்பாயில் கல்யாணம் ஆன எல்லா ஆண்களும் "மாமா"தான். ஐம்பது வயது மாமி கூட இருபத்தைந்து வயதான மணமான இளைஞனை மாமா என்று சகஜமாக அழைப்பதைப் பார்க்கலாம். மாமா என்றால் ஏதோ ஒரு பெண்ணிற்குப் புருஷன்.

சரி. விஷயத்துக்கு வருவோம்.

எங்க வீட்டு மாமாவுக்கு உடம்பு சரியில்லை. சாதாரண ஜுரம். மூன்று நாட்களாக ஆபீஸ் போகவில்லை. தெரியவந்த அக்கம் பக்கத்தினர், அடுத்த பில்டிங் மாமிகள் மாமாக்கள் வந்து விசாரித்தனர். "மாமாவுக்கு என்ன உடம்பு?"

"ஒன்றுமில்லை. தலைவலி ஜலதோஷம், ஜுரம்."

"டாக்டர் கிட்ட காமிச்சேளா?"

"ஓ. மருந்து தந்தார்."

"எதுக்கும் ஸ்பெஷலிஸ்ட் கிட்ட காமியுங்கோ. பணத்துக்குப் பார்த்து அப்புறம் பெரிசா ஏதானா ஆயிடும்."

இவர் பக்கத்து பில்டிங் மாமா. இவர் ஒரு 'ஸ்பெஷலிஸ்ட்' ஸ்பெஷலிஸ்ட்.. கை நகச் சுற்றுக்குக் கூட பெரிய ஸர்ஜனிடம் போனால்தன் அவருக்கு நிம்மதி. இரண்டு பிள்ளைகள். இருவரும் துபாயில். இவர் முப்பத்தெட்டு வருஷ ஸர்வீஸில் சேர்த்ததே பல லட்சம் தேறும். மாதாமாதம் பென்ஷன், தவிர பிள்ளைகள் அனுப்பும் பணம். ஸ்பெஷலிஸ்ட் கிட்ட போய் கரைத்தால்தான் உண்டு. இப்படி செலவழிக்காத மற்றவர்கள் எல்லோரும் 'கஞ்சன்' என்பது

# மாமாவுக்கு என்ன உடம்பு?

— பானுகுமார்



அவர் முடிவு. 'பத்து ரூபா டாக்டர்' என்று [illegible] அவருக்கு [illegible] பல வருடம் பழக்கப்பட்ட பத்து ரூபாய் டாக்டர் நம்மைப் பற்றி, நம் உடம்பைப் பற்றி நன்றாகத் தெரிந்து வைத்திருப்பார், அவர் வைத்தியமும் பலிக்கும் என்று.

இரண்டாவது மாடியில் இருக்கும் காமாட்சி மாமி வந்தாள். "எதுக்கும் டெஸ்ட் எல்லாம் எடுத்துப் பார்த்துடு. என் மருமானுக்கு இப்படித்தான் சாதாரண ஜுரம்னு ஆரம்பிச்சு டைபாய்டுலே கொண்டு விட்டுடுத்து. ஜாஸ்தியாகி பத்து நாள் ஆஸ்பத்திரிலே போட்டு, பொழைப்பானான்னு ஆச்சு. பொழைச்சது புனர் ஜன்மம்."

"இல்லே மாமி. டைபாய்ட் மாதிரி இல்லே."

"அசடு மாதிரி பேசாதே. ஒண்ணுக்கு இரண்டு தடவை டாக்டர்கிட்ட அடிச்சு கேளு."

டாக்டரே தைரியமாகச் சாதாரண ஜுரம் என்கையில் டைபாய்ட்தான் என்று எப்படி அடித்துச் சொல்வது?

டைபாய்ட் பயமுறுத்தல். அப்புறம் நிமோனியா, இல்லை எங்கெங்கு காணினும் சக்தியடா என்று வியாபித்திருக்கும் 'வைரஸ் ஃபீவர்'. அரைகுறையாக பேர் தெரிந்து வைத்துக் கொண்டு, வீட்டில் சும்மா உட்காராமல் என்னை ஏன் பயமுறுத்துகிறார்கள். நிமோனியா சரியாகக் கவனிக்காமல் டபிள் நிமோனியாவாகி எப்படி உயிருக்கு ஆபத்து என்று பத்து தடவை சொன்னால் எந்தப் பேதை மனமும் பயப்படத்தானே செய்யும்?

இது ஒரு வகை என்றால் இன்னொன்று கை வைத்தியம். "இப்பல்லாம் டாக்டர்களை நம்ப முடியல்லே. நாட்டில் கை வைத்தியம் பண்ணாத்தான் உண்டு. அந்தக் காலத்திலே

செய்யாததா?"

"நீர் கோத்துண்டு தலை கனம்னா குங்குமப் பத்து போடு. தொண்டை புண்ணா இருந்தா, அதிமதுரம் வாங்கி வாயிலே அடக் கிண்டு அந்த நீரை முழுங்கினா போதும். கபம் கட்டிண்டு இருந்தா கற்பூரவல்லி இலையை லேசா தணல்லே வாட்டி விக்ஸ் தடவி நெஞ்சுலே போட்டா இளகிடும். வயறு மப்பாக இருந்தா சீராக் கஷாயம், சுக்கு தட்டிப் போட்டு மூணு வேளை குடு போதும். இல்லே பித்த சுரமாவும் இருக்கலாம்... அதுக்கு...."

ஏதாவது ஒரு கை மருந்து என்றால் புரிந்து கொண்டு செய்யலாம். தெரிந்த அத்தனை மருந்தையும் ஒரே மூச்சில் சொன் னால் என்ன செய்வது?"

ஒரு சிலர் மாமாவைப் பார்க்க படுக்கை அறை வரைக்கும் உள்ளே நுழைந்து படுக்கை மேலேயே உட்கார்ந்து— அவர்களுடன் வரும் வாண்டு மாமாக்கள் செருப்புக் காலுடன் உள்ளே நுழைவதை நான் தடுப்பதற்குள் மின்னல் வேகத்தில் உள்ளே சென்றுவிடுவார் கள். அவர்கள் சென்றபின் படுக்கை விரிப்பு மாற்றி ரூமைப் பெருக்கித் துடைக்கணுமே என்ற ஆதங்கம் எனக்கு. சுற்றுப்புறம் சுத்தமாக இருக்க வேண்டும் எனக்கு. இவர்கள் என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு, டீ, காப்பி குடித்துவிட்டுப் போய் விடுவார்கள். அரைமணி அதிகப்படி வேலை எனக்கு தானே.

தொல்லையில் மோசமானது அன்புத் தொல்லைதான். "மாமி உங்களுக்கு நிறைய வேலை. நீங்க கடைகண்ணிக்குப் போக வேண்டாம். பையைக் குடுங்கோ. எங்க சீனாவை விட்டு காய்கறி வாங்கிண்டு வரச் சொல்றேன்."

அந்த ரெண்டுங்கெட்டான் என் பணத்தில்தான் காய்கறி வாங்கக் கற்றுக் கொள்ள வேண்டுமா? அவன் சொத்தையும் சொள்ளையும், கொசுறுக்குப் புழுவுமாக வாங்கி வரும் வதங்கல் காய்கறிகளை ஆராய்ந்து பிராய்ந்து அலசி முடிப்பதற்குள் என் பாடு சாமி அறியும்.

"மாமி ரமணி இங்கேயே இருக்கட்டும். உங்களுக்குக் கூப்பிட்ட குரலுக்கு ஆளாச்சு. டே ரமணி மாமிக்கு ஏதானா வேணும்னா ஓடி வந்து ஒரு நடை என்னைக் கூப்பிடு. மாமி உனக்கு விசிஆர்ல டாம் அண்ட் ஜெர்ரி போடுவா. சமத்தா உட்கார்ந்து பாரு. மாமி, டி.வி. எதிர்ல உக்காந்தா அங்க இங்க நகர மாட்டான்" என்றவாறு பத்து வயது ரெட்டைவாலை என் தலையில் கட்டுவார். அது விசிஆரைக் குடையும். ஸோபாவில் ஏறிக் குதிக்கும் காட்சியைக் கண்டு என்

We accept Fixed Deposits at the rate of 24% with incentives.

## எளிய தவணையில் சொந்த வீடு!

**நீங்களும் சொந்த வீடு வாங்கலாம் காசி பில்டர்ஸ் நிறுவனம் ஒரு பொன்னான திட்டம் வழங்குகிறது**

**காசி குருப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 14-வது குலுக்கல் 30.10.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.**

இத் திட்டத்தில் புதிதாக வழங்கப்பட்ட GIFT CARD குலுக்கல் மூலம் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

### சுபமங்களா திட்டம் :

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

### வீடு கிடைக்கும் இடங்கள் :

சென்னை கே. கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, இல் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

### FIXED DEPOSITS :

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

**காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்**

மற்றும்

**காசி பில்டர்ஸ்**

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.
FAX : 044-4821897

ப்ளெட் பிரஷர் அதிகமாயிடும். இரண்டு மணி நேரம் தாக்குப் பிடித்தேன். அதற்குள் இரண்டு பாக்கெட் பிஸ்கட் தின்னு, மூன்று டம்ளர் தண்ணி குடிச்சு, நாலு தடவை பாத்ரூம் போய் விட்டு வந்துட்டான்.

"ரமணி போய் படின்னு" அனுப்பி விட்டேன்.

இவ்வாறு பகல் முழுக்க ஓய்வு இல்லாமல் உழைத்துவிட்டு பதினொரு மணிக்கு அக்கடா வென்று படுத்தால்... வாசல் மணி டிங்டாங். பக்கத்து வீட்டு மாமா.

"ராத்திரி ஏதானா ஆச்சன்னா என்னைக் கூப்பிட தயங்க வேண்டாம். போன் பண்ணா ஆம்புலன்ஸ் உடனே வரும். கூச்சப்படாதீங்க. நெய்பர்ஸ் சமயத்துக்கு உதவலேன்னா... நாங் கல்லாம் எதுக்கு இருக்கோம்.

இதமாக இருந்தாலும் அதற்குப் பின் என் தூக்கம் பறந்துவிடும். ராத்திரி நான் தூங்கும்போது ஏதாவது ஆகிவிடுமோ என்ற பயம் பிடித்துக் கொண்டு விடும்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமை. கூட்டம் வராது. டிவியில் முழுகிவிடுவார்கள். இன்று ஸ்பெஷல் கெஸ்ட் க்ரெஎண்ட் ஃப்ளோர் அலமு மாமி.

"மாமாவைப் பார்க்கணும்னு ரெண்டு நாளா துடியாத் துடிக்கறேன். எனக்கு எங்கே நேரம் இருக்கு. சரி இன்னிக்கு ஞாயிற்றுக் கிழமை. மாட்டுப் பொண் ஆத்திலே இருக்கா. அதான் வந்தேன். அதுவும் காலைலேர்ந்து ஒரே வேலை. இப்பதான் ஒழிந்தது. வார நாள்னா வரவே முடியாது மூச்சு விடக் கூட முடியாது. நாட்டுப் பெண் எட்டு மணிக்கே டிபன் தின்னுட்டு அலங்காரம் பண்ணிண்டு அலுங்காம குலுங்காம ஆபீஸுக்குப் போயி டறா. நான்தான் எல்லாம் செய்ய வேண்டி யிருக்கு. சமையல் ஒரு பக்கம். அவ பெத்த இரண்டு வானரத்தையும் கிளப்பி ஸ்கூலுக்கு அனுப்பி, உங்க மாமாக்கு சாதம் போட்டு, இடையிலே குப்பைக்காரி, வாட்ச்மேன், போஸ்ட்மேன் என்று பத்து தடவை வாசலுக் கும் உள்ளுக்கும் ஓடி... இந்த கூத்திலே பத்து நிமிஷத்துக்கு ஒருக்கா போன் அலறும். அதையும் நான்தான் எடுக்கணும். எங்காத்து கிழத்துக்குக் காது கேக்காதே. இதெல்லாம் ஓய்ஞ்சு சோத்தைத் தின்னா ஆன்னு வரது. வயசாச்சில்லையா? முன்னே மாதிரி ஓடி ஆடி செய்யற வயசா எனக்கு. அது யாருக்கும் தெரியலையே..."

இவ்வாறு என் கணவரைப் பார்க்க வந்தவள் தன் மனக் குறையைச் சொல்லி அழுது மூக்கைச் சிந்திப் போட்டு காப்பி டிபன் சாப்பிட்டுப் போனாள். வியாதிக் காரன் தூக்கமும் என் ஓய்வும் பறிபோயின.

மறுநாள் திங்கட்கிழமை. காலையில் எழுந்த இவரைக் கேட்டேன். "இப்ப எப்படி இருக்கு?"

"கொஞ்சம் பெட்டர். எதுக்கும் நான் ஆபீஸ் போயிடறேன். எனக்கும் ரெஸ்ட் உனக்கும் ரெஸ்ட்..." என்று பிடிவாதமாகக் கிளம்பிவிட்டார்.

---

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

*பொருள் : ஜவ்வரிசி* *கடைசி தேதி : 15.9.'94*

என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# OWN YOUR FLAT AT MADRAS

**AKSHAYA**
16, 3rd Main Road,
Nanganallur,
Madras - 600 061

**AASHIRWAD**
No.1, 1st Lane,
2nd Main Road, Trustpuram,
Kodambakkam,
Madras - 600 024

**AISHWARYA**
Plot 1 & 2, 7th Main Road,
Dhandeeswarar Nagar,
Velacheri,
Madras - 600 042

**ADITYA**
15/4, Jayammal St., Extn.,
Aminjikarai,
Madras - 600 029




**ASSOCIATED BUILDERS**

2nd Floor, 26, Ranganathan Street, T.Nagar, Madras - 600 017. INDIA
Ph : Off : 4340224 / 4340210. Res : 2345244. Telefax : (044) 2344333


உங்கள் பட்ஜெட்டுக்கு ஏற்ற வகையில் டீலக்ஸ் ஃபிளாட்டுகளும் பங்களாக்களும் சென்னை நகரின் பல்வேறு கௌரவமான பகுதிகளில் கிடைக்கும்.


கட்டடப் பணியின் முன்னேற்றத்தையொட்டி, வட்டியில்லாத தவணை முறையில் கட்டணம் செலுத்தலாம், அல்லது மொத்த கட்டணமும் செலுத்தி பத்து சதவிகிதம் தள்ளுபடி பெறலாம்.


முன்னணி நிதி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி செய்து தரப்படும்.


நவீன வசதிகளுடன் கூடிய கட்டடங்கள் ரசனையுடன் அழகாக வடிவமைக்கப்படுகின்றன.


தரமான கட்டமைப்பு; நிர்ணயித்த காலக் கெடுவுக்குள் முடிக்கப்படும்.

**பொருள்: உணவே மருந்து**

## முதல் பரிசு ரூ.300/-

# இம்மாத இல்லத் தாரகை

**சா**தாரணமாகப் பெண்களுக்குப் பிரசவ வலி ஆரம்பிக்கும் போதே, முதுகுக்குக்கீழ் இடுப்புப் பகுதியில் தான் வேதனை ஏற்படும். அந்த இடுப்பு, முதுகு எலும்புகளுக்கு நல்ல வலிமையைக் கொடுப்பது உளுந்து, கருப்புக்கட்டி (பனைவெல்லம்) மற்றும் நல்லெண்ணெய். எனவே, இந்த மூன்று உணவுப் பொருள்களையும் எவ்வளவுக்கெவ்வளவு பெண்களுக்கு அந்த வயதில் கொடுக்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு அவர்களுக்குப் பிற் காலத்தில் நன்மை செய்தவர்களாவோம் என்று என் பாட்டி சொல்லுவார்கள்.



• நீரா



• கமலவேணி



• லோகாம்பாள்



• ஜெயலக்ஷ்மி



• சித்ரா

### உளுந்து சாதம்:

**தேவையான பொருட்கள்.**

உளுந்து - ½ ஆழாக்கு
புழுங்கலரிசி - 2 ஆழாக்கு
தேங்காய் (சிறியது) - 1 மூடி
உப்பு - தேவையான அளவு.

**செய்முறை:**

அரிசியையும் உளுந்தையும் ஒன்றாகத் தண்ணீர் விட்டு குக்கர் பாத்திரத்தில் விட்டு இரண்டு மடங்கு தண்ணீர் விடவும். தேங்காயைத் துருவி அதில் போட்டு, தேவையான அளவு உப்பும் சேர்த்து குக்கரில் வேக விடவும். குக்கர் சாதத்தில் தேங்காய்த் துருவல் மேலாக வந்து நிற்குமாதலால், குக்கரைத் திறந்ததும் சாதத்தை ஒருமுறை கிளறிக் கொள்ளவும்.

### எள்ளுத் துவையல்:-

**தேவையான பொருட்கள்:**

எள்ளு - 100 கிராம்
மி.வற்றல் - 10 கிராம்
புளி - நெல்லிக்காயளவு
உப்பு - தேவைக்கேற்ப
உளுத்தம் பருப்பு - 1 தேக்கரண்டி
பெருங்காயப் பொடி - 1 சிட்டிகை.

இதற்குத் தொட்டுக் கொள்ள எள்ளுத் துவையல்தான் ஏற்றது. எள்ளை எண்ணெய் விடாமல் வாணலியில் வாசனை வரும் வரை வறுத்துக் கொள்ளவும். மிளகாய் வற்றல், பெருங்காயம், உளுத்தம்பருப்பு இவைகளை 1ஸ்பூன் நல்லெண்ணெய் எண்ணெய் விட்டு வறுத்துக் கொள்ளவும். பின் புளி உப்புச் சேர்த்து மிக்ஸியில் துவையலாக அரைத்துக் கொள்ளவும்.

சூடான உளுந்து சாதத்தில் 2 ஸ்பூன் நல்லெண்ணெய் விட்டு எள்ளுத் துவையலை போட்டுப் பிசைந்து அப்பளம் சேர்த்துச் சாப்பிட ருசியாகவும் இருக்கும், நல்ல சத்தான உணவும்கூட. வயதுக்கு வந்த பெண் மட்டுமல்ல, இந்த உணவுகளை மற்ற அனைவரும் எண்ணெய் ஸ்நானம் செய்த அன்று சாப்பிட்டு ஒரு தூக்கம் போட்டு எழுந்தால் உடம்பு கலகலவென்றிருக்கும்.



## நுங்கோ நுங்கு!

**வெயில் மிக அதிகமாக உள்ள இந்த நாட்களில் கண்ணுக்கும், உடலுக்கும் குளிர்ச்சிக்கும் நுங்குகள் அதிகம் வாங்குவோம். அதற்கான யோசனைகள் சில :**

- ஃப்ரிட்ஜ் இருப்பவர்கள் நுங்கை வாங்கிக் கழுவி ஃப்ரீசரில் ஓர் அரை மணி நேரம் வைத்திருந்து பின் உரித் தால் நுங்கு விரைவாக உரிக்க வரும்.
- உரித்த நுங்கைச் சிறுசிறு துண்டு களாக்கி ஒரு கப் பாலில் மூன்று ஸ்பூன் சர்க்கரை, 4 நுங்குகளின் துண்டு கள் போட்டு அப்படியேவோ, ஃப்ரிட் ஜில் அரை மணி நேரம் வைத்திருந்தோ பருகினால் உஷ்ணம் மிகவும் கட்டுப் படும்.
- நுங்குகளின் துண்டுகள், ஒரு கப் பால், 8 ஸ்பூன் சர்க்கரை சேர்த்து மிக்ஸியில் அடித்து ஃப்ரீசரில் அரை மணி நேரம் வைத்திருந்து சாப்பிட தேவாமிர்தம் போங்கள்.
- நுங்கின் உரித்த தோல்களைக் கசக்கி அந்தக் கையினால் முகம் முழு வதும் தடவி அரை மணி நேரம் வைத் திருந்து, பயத்தம் மாவு, அல்லது சீயக் காய்ப்பொடி போட்டு முகம் கழுவிவர (தொடர்ந்து ஒரு வாரம்) பருக்கள், பருக்களால் வந்த வடுக்கள் மாயமாகும். இது அனுபவத்தில் கண்ட உண்மை.

- விஜயா பாலகிருஷ்ணன்

### 2. உளுந்து களி.

**தேவையான பொருட்கள் :**

பச்சரி - ½ கி.

உளுந்து - ¼ கி

ந. எண்ணெய் - ¼ கி

கருப்புக் கட்டி - ¾ கி (சென்னையில் காதிகிராப்ட்களில் கிடைக்கிறது) இனிப்பு அதிகம் தேவைப்படுபவர்கள் 1 கிலோ சேர்த்துக் கொள்ளவும்.

**செய்முறை:**

பச்சரிசியையும் உளுந்தையும் லேசாகச் சூடாகும் வரை வெறும் வாணலியில் வறுத் துக் கொள்ளவும். இரண்டையும் கலந்து மெஷினில் அரைத்துக் கொள்ளவும் (நைஸ் மாவாக). கடாயில் தண்ணீர் விட்டு (மாவின் அளவில் பாதி) கருப்புக் கட்டியை (பனை வெல்லம்) சிறுசிறு துண்டுகளாக்கி வாணலியில் போட்டு அடுப்பில் சிறு தீயில் வைக்கவும். கருப்புக் கட்டி நன்கு கரைந்தவுடன், சல் லடையில் ஊற்றி கல்மண் இருந்தால் அகற்றி விடவும். மறுபடியும் கடாயில் கருப்புக் கட்டி கரைந்த தண்ணீரை விட்டு நன்கு கொதி வர விடவும். (பாகுபதம் இதற்குத் தேவை யில்லை) பின் அரைத்த மாவை மெதுவாக வாணலியில் கொட்டி (இப்போது கிளறிவிட வேண்டாம்) மாவின் நடுவில் கீரை அல்லது தயிர் மத்தில் காம்பைச் செருகி வைக்கவும். மாவுத் துண்டு துண்டாகக் கட்டியாகாமல் இது தடுக்கும். அடிப்பிடிக்காமல் இருக்க 4 ஸ்பூன் நஎண்ணெய் விட்டு தீயைக் கொஞ் சம் குறைக்கவும். இந்த நிலையிலேயே சுமார் 20 நிமிடங்கள் விட்டு வைத்துப் பின் வாணலியை அடுப்பிலிருந்து இறக்கி, கீரை மத்தின் காம்பினால் மாவையும் வெல்லப் பாகையும் சேர்த்து மெதுவாகக் கிளறவும். கிளறும்போதே மீதமுள்ள நல்லெண்ணெய் முழுவதையும் சிறிது சிறிதாகச் சேர்த்துக் கொள்ளவும். களி இப்போது இளங் கருப்பு நிறத்தில் அல்வா பதத்திலும் இருக்கும். (நன் றாக வெந்த பதத்திற்குக் கையில் ஒட்டாமல் இருக்கும்)

### 3. உளுந்து வடை: (எல்லோருக்கும் தெரிந்ததே)

தேவையான அளவு உளுந்தை நீரில் 2 மணி நேரம் ஊறவைத்து நீரில்லாமல் நன்கு அரைத்தெடுத்து. அத்துடன் உப்பு, நறுக்கிய கறிவேப்பிலை, பொடித்த மிளகு சேர்த்து. வாழையிலையில் தண்ணீர் தடவி, வடை யைத் தட்டி விரலால் வடை நடுவில் ஒரு துவாரம் போட்டு (எண்ணெய் அதிகம் குடிக்காது). எண்ணெயில் சிவக்கப் போட்டு எடுக்க வேண்டியதுதான்.

### 4) உளுந்து கஞ்சி.

தேவையானவை:-

உளுந்து - 100 கிராம்
புழுங்கலரிசி - 100 கிராம்
வெல்லம் - 200 கிராம்
தேங்காய்த்துருவல் 1 கப்
ருசிக்குத் தேவையென்றால் ஏலக்காய் - 2
முந்திரிப்பருப்பு- 5
நெய் - 1 ஸ்பூன்

செய்முறை:

உளுந்து மற்றும் அரிசியையும் வாணலியில் எண்ணெய் விடாமல் சிறிது வறுத்து, மிக்ஸியில் ஒன்றிரண்டாக உடைத்துக் கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் 3 டம்ளர் நீர் விட்டு கொதி வந்ததும் அரிசியையும் உளுந்தையும் போட்டு நன்கு வேக விடவும். நீர் போத வில்லையானால் சேர்த்துக் கொள்ளலாம். வெந்த பிறகு வெல்லம் சேர்த்து மேலும் கிளறவும். தீயைச் சிறுக வைத்துக் கொள்ளவும். ஏலக்காயைத் தட்டிப் போடவும். ஒரு ஸ்பூன் நெய்யில் முந்திரியை சிவக்க வறுத்து சேர்க்கவும். பாயசம் பதத்தில் இறக்கவும்.

– மு.லோகாம்பாள்
சென்னை-101

## இரண்டாம் பரிசு
## ரூ. 200/-
## ஹெர்பல் ஷேக்

தேவையான பொருட்கள்:

தனியா - 50 கிராம்.
சுக்கு - 10 கிராம்.
ஏலக்காய் - 6
கிராம்பு - 6
கண்டந்திப்பிலி - 10 கிராம்
மிளகு - 10 கிராம்
சீரகம் - 10 கிராம்
கறிவேப்பில்லை - (உலர்ந்தது) 1 கைப் பிடியளவு.

செய்முறை:

மேலே குறிப்பிட்ட எல்லா சாமான்களையும் (ஏலக்காய், கிராம்பு தவிர) தனித் தனியாக நன்கு வாசனை வரும்வரை வறுத்துக் கொள்ளவும். வெறும் வாணலியில் வறுக்கவும். எண்ணெய் சேர்க்க வேண்டாம். பிறகு எல்லாவற்றையும் தனித்தனியாக, நைசாக பொடித்துக் கொண்டு ஒன்றாகக் கலந்து காற்றுபுகாத டப்பாவில் போட்டு மூடி வைத்துக் கொள்ளவும். இந்தக் கலவைத் தூளை 4 ஸ்பூன் அளவு எடுத்துக் காபி ஃபில்டரில் போடவும். சுமார் ஒன்றரை டம்ளர் தண்ணீரைத் தளதளவென கொதிக்க வைத்து ஃபில்டரில் ஊற்றவும். 10 நிமிடங்களில் ஹெர்பல் டிகாக்ஷன் கிடைத்து விடும். இந்த டிகாக்ஷனோடு 2 டம்ளர் பால் கலந்து, சக்கரை அல்லது பனங்கல்கண்டை சேர்த்துப் பருகவும்.

இந்த ஹெர்பல் ஷேக்கை வாரத்திற்கு இருமுறை பருகுவதால் (காப்பி அல்லது டீக்குப் பதிலாக) உடல் அசதி, வாயுத் தொல்லை, சீதளம், அஜீரணம் முதலியவை அகலுவதோடு வாரம் முழுவதும் காபி, டீ அருந்தியதன் விளைவுகள் மாயமாய் மறைந்து விடும்.

–கீதா ரகுராமன், சென்னை-24

## மூன்றாம் பரிசு
## ரூ.100/.
## நெல்லிக்காய் ரசம்

தேவையான பொருட்கள்:

பெரிய நெல்லிக்காய் - 1கிலோ
(குண்டு நெல்லிக்காய்)
பனைவெல்லம் (கருப்பெட்டி)- ¾கிலோ
ஏலக்காய் - 10 கிராம்
ஓமம் - 10 கிராம்

---



என் தோழியின் திருமணத்தில் அவளுக்கு வந்த பரிசுப் பொருளில் ஒரு சிறு பாக்ஸ். மிகுந்த அலங்காரங்களுடன் தயாரிக்கப்பட்டிருந்தது. அதை முதலில் பிரித்தாள் என் தோழி. அதனுள் 12 சிறிய லேடீஸ் கர்ச்சிப், 12 ஜென்ட்ஸ் கர்சிப் வைக்கப்பட்டிருந்தன. அதன் ஓரத்தில் மணமக்களின் பெயரும், அடியில் பரிசு அளித்தவரின் பெயரும் எம்பிராய்டரி நூலால் வரையப்பட்டிருந்தது. இதுவும் புதுமை கலந்த கவர்ச்சிகரமான பயனுள்ள பரிசு தானே.

– பாலசரஸ்வதிஇராஜேந்திரன்.

திப்பிலி - 10 கிராம்
பட்டை - 10 கிராம்
லவங்கம் - 10 கிராம் ( வாசனை பிடிக்காதவர்கள் சேர்க்க வேண்டாம்)

செய்முறை:

நெல்லிக்காயை நன்றாகக் கழுவி துணியில் துடைத்து வைக்கவும். மீதமுள்ளவற்றை நன்றாக இடித்துத் தூள் செய்து கலக்கவும். பரணியை (சைனா களிமண்ஜாடி) நன்றாகத் துடைத்து அதில் நெல்லிக்காய் ஒருவரி இட்டு அதன்மேல் ஒருவரி பனைவெல்லம் இடவும். இப்படியாக மாறிமாறி நெல்லிக்காய் பனை வெல்லம் வருவதுபோல சரிசெய்ய வேண் டும். இதை நாற்பது நாட்களுக்கு வைக்க வேண்டும். ஐந்து நாட்களுக்கு ஒருமுறை கிளறிவிட வேண்டும். நாற்பது நாட்கள் கழித்து நெல்லிக்காய் ஜூஸ் முழுவதும் வெல்லத்தில் இறங்கி நெல்லிக்காய் சக்கை யாக மிதக்கும். நன்றாக வடிகட்டி சக்கையை எடுத்துவிட்டு ரசத்தை பாட்டிலில் ஊற்றி நன்றாக அடைத்து வைக்கவும். (1 ¼ லிட்டர் ஜூஸ் கிடைக்கும்), நாம் ஒருதுளி தண்ணீர் கூட சேர்க்க வில்லை என்பது குறிப்பிடத் தக்கது. இது ஒரு வருடம் இருந்தாலும் கெடாது.

குறிப்பு: ஜாடி இல்லாதவர்கள் எவர் சில்வர் மூடி உள்ள பாத்திரத்தில் தயாரிக்க லாம். மண் சட்டியில் செய்தால் பாதி ஜூஸ் மண்சட்டி உறிஞ்சிவிடும்.

- இது முழுவதும் வைட்டமின் C ஆதலால் குழந்தைகளுக்குக் காலையில் ஒரு ஸ்பூன் நெரசம் கொடுத்தால் சளி, ஆஸ்துமா தொந்தரவு வராது.
- விருந்தினர் வரும்போது ஒரு கிளாஸ் (200ml )தண்ணீரில் ஒரு ஸ்பூன் நெ.ரசம் சேர்த்தால் நல்ல சுவையான நெல்லிக் காய் ஸ்குவாஷ் ரெடி.
- இட்லி, தோசைக்குத் தொட்டுக் கொள்ள கொடுத்தால் இட்லி பறந்துவிடும். (நெல்லிக்காய் சாஸ்)
- புளி, தக்காளி, மிளகு ரசம் வைக்கும் போது ஒரு ஸ்பூன் நெ.ரசம் சேர்த்தால் நெல்லிக்காய் ரசம் ரெடி.
- சாப்பாடு வடித்துக் கொஞ்சம் நல் லெண்ணை ஊற்றிக் கிளறி அதில் ஒரு ஸ்பூன் நெ.ரசம், உப்பு சேர்த்துக் கிளறி குழந் தைகளுக்கு மதிய உணவாகவும், பிக்னிக் போகும் போதும் கொடுக்கலாம். (புளியோதரை போல கெடாது)
- கெட்டியாகப் புளிகரைத்துக் (100கிராம்) கொதிக்க வைத்து அதில் இஞ்சி, பூண்டு, பச்சைமிளகாய் சிறியதாக வெட்டி வறுத்துச் சேர்த்து, உப்பு இட்டு, நெ.ரசம் மூன்று ஸ்பூன் சேர்த்தால் நெல்லிக்காய் ஊறுகாய் ரெடி. இதை விருந்தினர் வந்தால் ஐந்து நிமிடத்தில் தயாரித்துக் கொடுக்கலாம்.

– எஸ்.சித்ரா, கேரளா-9

## ஒருவரி விசாரிப்பும்..பெருவாரியான பூரிப்பும்.

உங்கள் உறவினர் வீட்டுப் பெரியவர்களையும், குழந்தைகளையும் அன்புடன் நேசிக்கிறீர்கள். உறவினருக்குக் கடிதம் போடும்போது 'ஜானுப் பாட்டி சௌக்யமா, கீது எத்தனாவது ரேங்க், தாத்தாவுக்கு மூட்டுவலி இப்ப எப்படியிருக்கு' இப்படி ஒரு வரி எழுதினால் பெரு வாரியான மகிழ்ச்சி அந்த உள்ளங்களுக்கு. மற்றவர்கள் சந்தோஷப் படுத்தியதில் உங்களுக்கும் ஆத்ம திருப்தி.

- எஸ்.மாலதி



## ஆறுதல் பரிசு ரூ.50/-

### புழுங்கலரிசிக் கஞ்சி

**தேவையான பொருட்கள்:**

புழுங்கல் அரிசி - 1 கப்
பாசிப் பயிறு - ½ கப்
முருங்கைக் கீரை - 1 மூடி (இலை மட்டும்)
வெந்தயம் - 1 சிறு கரண்டி
சீரகம் - 1 சிறு கரண்டி
சிறிய வெங்காயம் - 1 மூடி ( தோல் நீக்கியது)
உப்பு - தேவைக்கேற்ப.

**செய்முறை:**

நாம் சாதாரணமாகச் சோறு வடிப்பதற்கு வைக்கும் தண்ணீரை விட சற்று அதிகமாக தண்ணீர் வைத்து அதில் புழுங்கல் அரிசியையும், பாசிப் பயிரையும் வெந்தயத்தையும் கல் நீக்கிக் கழுவி அடுப்பில் போட்டுக் கொதிக்க வைக்க வேண்டும். கொதித்துச் சிறிது நேரம் ஆனதும் சீரகத்தைச் சற்று அம்மியில் வைத்துத் தட்டிப் போட வேண்டும். வெங்காயத்தையும் இரண்டாக வெட்டிப் போட வேண்டும். முருங்கைக்கீரை இலையையும் அந்தக் கஞ்சிக்குள் போட வேண்டும். எல்லாம் நன் றாக வெந்ததும் அப்படியே மூடி வைத்து விட வேண்டும். அடுத்த நாள் காலையில் எடுத்து உப்புப் போட்டு சாப்பிட்டால் சூட் டினால் ஏற்படும் வாய், நாக்குப் புண்கள் பறந்து விடும். (இரவு செய்து வைத்து விட்டு காலையில் சாப்பிட வேண்டும்) நல்ல பலன் கிடைக்கும்.

- டி.ஜெலக்ஸ்டினாபாக்யநாதன்
நாகர்கோவில்

## ஆறுதல் பரிசு ரூ.50/-

### கொள்ளுப் பருப்பு, கொள்ளு ரசம்.

*(பால் கொடுக்கும் இளம் தாய்மார்களுக்கும், சளி தொந்தரவு உள்ளவர்களுக்கும்).*

**கொள்ளுரசம்**

**தேவையான பொருட்கள்:**

*(ரசம் சுமார் 1 ¼ லிட்டர்.)*

கொள்ளு - 1 ஆழாக்கு அல்லது 200மில்லி
காய்ந்த மிளகாய் வற்றல் - 10 அல்லது 12 (இதை 10 நிமிடங்கள் தண்ணீரில் ஊற விட வேண்டும்.)
சீரகம் - ½ டீஸ்பூன்
கொத்தமல்லி - 1 டீஸ்பூன்
மிளகு - 10
கறிவேப்பிலை - 4 கொத்து
மஞ்சள்தூள் - 1 சிட்டிகை
பூண்டு - 25 கிராம்
புளி - 2 சிறிய எலுமிச்சை அளவு, தக்காளிப்பழம்- 2 அல்லது 3

**கொள்ளுப் பருப்பிற்கு.**

ப.மிளகாய் - 4
பூண்டு உரித்தது - 5 பல்
சிறிய வெங்காயம் உரித்தது - 5 பல்
ஜீரகம் - ½ டீஸ்பூன், தாளிப்பதற்கு எண்ணெய் 2 டீஸ்பூன்.

**செய்முறை:-**

முதலில் கொள்ளை சுமார் ½ லிட்டர் தண்ணீரில் கழுவி, கல் நீக்கிக் குக்கரில் வைக்க வேண்டும் இதற்கு அரிசி வேகும் நேரத்தையே எடுத்துக் கொள்ளலாம். பின்னர் குக்கரில் இருந்து எடுத்து சுமார் இரண்டு நிமிடங்கள் கொதிக்க விட வேண்டும். பின்னர் தண்ணீரை தனியாக வடித்தெடுத்து ஒரு பாத்திரத்தில் விட்டு மற்றொரு பாத்திரத்தில் புளியைக் கரைத்து கொள்ளு வேக வைத்த தண்ணீருடன் கலந்து கொள்ள வேண்டும். வேக வைத்த மிளகாய் வற்றல், சீரகம், கொத்தமல்லி, மிளகு, கறிவேப்பிலை முதலியவற்றை மைய அரைத்து அதை புளித் தண்ணீருடன் கலந்து மஞ்சள் தூளையும் கலந்து கொள்ள வேண்டும். பூண்டை தோல் உரிக்காமல் ஒன்றிரண்டாகத் தட்டி தக்காளியையும் போட்டு நன்கு பிசைந்து அடுப்பில் வைத்து, திட்டமாக உப்பைப் போட்டு நுரை கட்டியவுடன் (கொதிக்க விடக் கூடாது) இறக்கி வைத்து விட வேண்டும். (பிடித்தமானால் இறக்கும்முன் சிறிது மல்லித் தழை போடலாம்) இதுவே கொள்ளு ரசம் எனப்

படும். பி.கு. இதற்குத் தாளிதம் செய்ய வேண்டிய அவசியம் இல்லை.

**கொள்ளுப் பருப்பு**

பச்சை மிளகாய், பூண்டு, சீரகம், சிறிய வெங்காயம் முதலியவற்றை எண்ணெயில் வதக்கி ஆறியவுடன் மிக்ஸியில் போட்டுச் சிறிது ஓட விட்டு பின்னர் இத்துடன் வேக வைத்த கொள்ளையும் கொட்டி தண்ணீர் விடாமல் கொள்ளு ரசத்தை விட்டே (சிறிது ரசத்தை ஆறவிடவேண்டும்) மிக்ஸியில் பருப்புப் பதத்தில் எடுத்து வைத்துக் கொண்டு ருசிக்கேற்ப சிறிது உப்பு சேர்க்க வேண்டும். (ஏனெனில் ரசத்தில் சிறிது உப்பு இருக்கும்) இதுவே கொள்ளுப் பருப்பாகும். இந்த ரசத்தையும், பருப்பையும் குழந்தை பிறந்து 8 அல்லது 10 தினங்களில் இளம் தாய் மார்களுக்குக் கொடுக்கலாம். இதற்குத் தொட்டுக் கொள்ள சுண்டல் வத்தல், அல்லது மணத்தக்காளி வற்றல் அவசியம்.

**- கமலவேணி மயில்சாமி, நீலகிரி.**

## மேலும் சில சிறந்த உணவுக் குறிப்புகள்

**நா**ம் அன்றாடம் உண்ணும் பொருட்கள் எல்லாமே ஒவ்வொன்றும் ஒவ்வொரு மருந்தாகும்.

துளசி தீர்த்தம் ஒரு மிகச் சிறந்த ஔஷதம். இதே போல எங்கு வேண்டுமானாலும் முளைக்கும் பிரண்டை (ஒரு கணுவை மண் இருக்கும் இடத்தில் நட்டால் விரைவில் கொடியாகப் படரும்) நார்ச்சத்து மிகுந்த ஜீரணத்திற்கேற்ற சிறந்ததொரு மருந்து. இதற்கு ' வஜ்ரவல்லி' என்ற பெயர் உண்டு.

ஸ்ரார்த்த சமையலில் இதைச் சிறப்பாக சேர்க்க வேண்டும் என்பதற்கு ஒரு கதை உண்டு. அகஸ்தியரின் மனைவி லோபாமுத்ரா ஒரு ஸ்ரார்த்த தினத்தில் விஸ்வாமித்திரருக்கு 1000 காய்கறிகளுக்குச் சமமாக விருந்து படைப்பதாகச் சொல்கிறார். ஆனால் லோபாமுத்ரா ஒரு சில காய்கறிகளே சமைக்கிறார். அதில் பாகற்காய், பலா, பிரண்டை முதலியவை அடங்கும். 1000 காய்கறிகள் என்று கூறிவிட்டு, சில காய்கறிகளே சமைத்திருப்பதைப் பார்த்து விஸ்வாமித்ரர் லோபாமுத்ரையைக் கேட்க, லோபாமுத்ரை கூறுகிறார் 'பாகற்காய் 100 காய்கறிகளுக்குச் சமம், பாகற்காயைப் போல மூன்று மடங்குக்குப் பலா சமம் பலாவைப் போல மூன்று மடங்குக்கு 'வஜ்ரவல்லி' சமம்' என்று பதிலளிக்க ரிஷியும் அதை ஒப்புக் கொண்டு விருந்தை ஏற்றுக் கொள்கிறார். இவ்வளவு உயர்வாகக்குறிப் பிடக்கூடிய இந்த வஜ்ரவல்லியை அப்பளத்திற்கு உபயோகிப்பது பலரும் அறிவர். இதில் பலவகையான சமையல் செய்யலாம். அதில் ஒரு வகையான வஜ்ரவல்லித்துவையலைப்பற்றி கவனிப்போம்.

## வஜ்ரவல்லித் (பிரண்டை) துவையல்

**தேவையான பொருட்கள்:-**

இளம் பிரண்டை பொடியாக நறுக்கியது - 100 கிராம் (சுமார் ஒரு ஆழாக்கு துண்டங்கள்)

கொழுந்து கறிவேப்பிலை - 50 கிராம் (3 கைப்பிடி அளவு)

உப்பு- 25 கிராம்,

வெல்லம் -ஒரு கொட்டைப்பாக்களவு,

புளி - 25 கிராம் (ஒரு பெரிய எலுமிச்சம் பழம் அளவு)

மிளகு- ஒரு மேஜைக் கரண்டி,

நல்லெண்ணெய் - 5 தேக்கரண்டி

இஞ்சி - 25 கிராம்

கடுகு - 1 தேக்கரண்டி,

பெருக்காயம் - ஒருதுண்டு

வெள்ளை எள்ளு - ஒரு மேசைக் கரண்டி,

உளுத்தம் பருப்பு- 4 தேக்கரண்டி.

**செய்முறை:**

கறிவேப்பிலை, பிரண்டை இரண்டையும் அலம்பி வடிய வைக்கவும். பிரண்டையை 1செ.மீ.அளவு துண்டங்களாக நறுக்கவும். இஞ்சியைத் தோல் சீவி துண்டங்களாக்கவும்.

வாணலியை அடுப்பில் வைத்து என்ளை வறுத்து, படபட வென்று பொரிந்ததும் அதை ஒரு தட்டில் கொட்டவும். ஒரு தேக்கரண்டி எண்ணை விட்டு, மிளகு, பெருங்காயத்தை வறுத்து என்ளுடன் சேர்க்கவும். மறுபடி 2 தேக்கரண்டி எண்ணெய் விட்டுக் கடுகு, உளுத்தம் பருப்பு தாளிதம் செய்து தனியாக வைக்கவும். மீண்டும் எண்ணெயை விட்டு, பிரண்டைத்துண்டுகளை அடுப்பை 'சிம்'மில் வைத்து நிதானமாக பச்சை நிறம் மாறும் வரை வதக்கவும்.

**வெங்காயத்தை முதல் நாள் இரவு பிளாஸ்டிக் பைக்குள் போட்டு ஃப்ரிட்ஜில் வைத்து விடவும். மறுநாள் காலை நறுக்கும் போது தோல் சுலபமாக உறிக்க வருவதுடன் கண்களில் கண்ணீரும் இல்லை.**

**- கலாமூர்த்தி**





- என்.ஆர்.சித்ரா

கறிவேப்பிலை, இஞ்சி வதக்கிய பிரண்டை, எள், வெல்லம், பெருங்காயம், மிளகு, உப்பு, புளி எல்லாவற்றையும் நன்கு மசிய அரைத்து, கடைசியில் கடுகு, உளுத்தம் பருப்பை ஒன்றிரண்டாக அரைத்து எடுக்கவும். தேவையானால் சிறிது தண்ணீர் சேர்த்துக் கொள்ளலாம். இதைச் சாதத்திலும் பிசைந்து சாப்பிடலாம். தொட்டுக் கொள்ள துவையலாகவும் உபயோகிக்கலாம்.

பிரண்டை சாதத்திற்குச் சேர்மானமாகச் செய்ய பச்சை மோர்க்குழம்பு.

**தேவையான பொருட்கள்.**

தயிர் அல்லது கெட்டி மோர் - ஒரு கப்,

உப்பு - தேவையான அளவு

கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, துவரம் பருப்பு, வெந்தயம் வகைக்கு ½ தேக்கரண்டி,

மிளகாய் வற்றல் 1

தேங்காய்த் துருவல்- 2மேசைக் கரண்டி

கொத்தமல்லி - சிறிது

எண்ணெய் - 2தேக்கரண்டி

கடுகு ½ - தேக்கரண்டி

சீரகம் - ¼ தேக்கரண்டி

கடலைப் பருப்பு, உளுத்தம் பருப்பு, துவரம் பருப்பு, வெந்தயம், மிளகாய் வற்றல் எல்லாவற்றையும் சிறிது எண்ணெய் விட்டு சிவக்க வறுக்கவும். அதனுடன் தேங்காய், உப்புச் சேர்த்து நன்கு மசிய அரைத்துத் தயிரில் கலக்கவும். கடுகு, சீரகம் தாளிக்கவும். கொத்தமல்லியைப் பொடியாக நறுக்கி மோர்க்குழம்பில் சேர்க்கவும்.

இதோடு கூட பயத்தம் பருப்பு வெல்லம் சேர்த்துப் பாயஸம், வாழைத்தண்டு, கேரட் கோசுமல்லி, கீரை மசியல், மணத்தக்காளி வற்றல் வறுத்தது, வேப்பம் அல்லது கண்ட திப்பிலி ரஸம், கறிவேப்பிலை, உப்பு, பெருங்காயம், எலுமிச்சம்பழம் சேர்த்த மோர் சாதம், தொட்டுக் கொள்ள ஊறுகாயாக வேப்பிலைக் கட்டி (நாரத்தை இலைப் பொடி) இப்படி ஓர் பத்தியமான புதுமையான விருந்தே படைக்கலாம். இது எவ்வயதினருக்கும் ஏற்ற உணவும், மருந்தும் ஆகும். அல்லது இவ்விருந்தே ருசியானதொரு மருந்து என்பதில் ஐயமில்லை.

**- எ.பட்டம்மாள், சென்னை-83**

## இலை தோசை

இருமல் நெஞ்சில் சளிக்கட்டு போன்ற உபாதைகளுக்கு இந்த இலை தோசை கைகண்ட மருந்தாகும்.

**தேவையான பொருட்கள்:**

புழுங்கலரிசி - 1 டம்ளர்

முசுமுசுக்கை இலை, முள்ளு முருங்கை இலை, தூதுவளை இலை- மூன்றும் ஒவ்வொரு கைப்பிடி அளவு (அல்லது), அதற்கு மேலும் -

உப்பு, மிளகு, சீரகம் தேவையான அளவு.

**செய்முறை:-**

புழுங்கலரிசியை இட்லி, தோசைக்கு ஊற வைப்பது போல் ஊற வைக்கவும். இலைகளை ஆய்ந்து கொள்ளவும். (இந்த இலைகள் எவ்வளவு கிடைக்கிறதோ அவ்வளவு நம் விருப்பத்திற்கு ஏற்றார் போல் சேர்த்துக் கொள்ளலாம்). முள்ளு முருங்கை இலையின் நடு காம்பை எடுத்து விடவும். அரிசியுடன் சேர்த்து இந்த இலைகளை தோசைக்கு அரைப்பது போல் அரைக்கவும். உப்பு, மிளகு, சீரகம் ஆகியவைகளையும் அரைக்கும் போதே சேர்த்து விடவும்.

இந்த மாவினை புளிக்க விடாமல் அரைத்தவுடனேயே நெய் அல்லது நல்லெண்ணெய் ஊற்றி தோசையாக வார்த்துச் சாப்பிட சுவையாக இருக்கும்.

**- பட்டம்மாள், பட்டுக்கோட்டை.**

## பஞ்ச ரத்ன லேகியம் (குழந்தைகளுக்கு)

**தேவையானவை:**

வசம்பு - சிறு துண்டு,

சித்திரத்தை - சிறுதுண்டு,

ஓமம் - ஒரு டீஸ்பூன்,

சீரகம் - ஒரு டீஸ்பூன்,

சுக்கு - சிறுதுண்டு,

ஏலம் - 2,

கிராம்பு - ஒன்று,

பச்சை கற்பூரம் - சிறு துண்டு, குங்குமப்பூ - சிறிது, பாதாம் பருப்பு - 10, பிஸ்தா பருப்பு - 10.

**செய்முறை:-**

வசம்பு, சித்திரத்தை, ஓமம், சீரகம், சுக்கு ஆகியவற்றைத் தனித்தனியாக வறுத்த பின்பு ஒன்று சேர்த்து மிக்ஸியில் பொடிக்க வேண்டும். ஏலம், கிராம்பு, பச்சை கற்பூரம்,

ஆகியவற்றைப் பொடிக்க வேண்டும்.

பாதாம் பருப்பு, பிஸ்தா பருப்பு ஆகிய வற்றை ஓரிரண்டாக உடைத்து நெய்யில் வறுத்த பின்புப் பொடிக்க வேண்டும்.

அடுப்பில் வாணலியை வைத்து வெல்லப்பாகு காய்ச்ச வேண்டும், இரண்டு கம்பிப் பாகுப் பதம் வந்ததும் பொடித்த வசம்புக் கலவைப் பொடியைத் தூவி கட்டி கட்டாமல் கிளற வேண்டும். பின்பு பாதாம் கலவைப் பொடியைத் தூவி கலக்கவும், நெய்யை ஊற்றவும். பாத்திரத்தில் ஒட்டாத பதம் வந்ததும் இறக்கி, ஓமப் பொடியைத் தூவி கலக்கவும். பின்பு குங்குமப் பூவைப் போட்டுக் கலக்கவும். இந்த லேகியம் நீண்ட நாட்கள் கெடாமல் இருக்கும். காலையில் குழந்தைகள் எழுந்த உடன் ஒரு ஸ்பூன் லேகியத்தைச் சாப்பிடச் செய்த பின்பு பால் ஒரு டம்ளர் பருக தர வேண்டும். இந்த லேகியம் தீராத வயிற்றுவலி, அஜீரணம், பித்தவாந்தி, ஆகியவற்றை நீக்கும், உடலுக்குப் போஷாக்குத் தரும். நல்ல ஜீரணமளிக்கும் சிறந்த உணவு இது.

- பி.ராஜேஸ்வரி,சேலம்-7.

### முடக்கத்தான் இலை தோசை

இந்தக் காலத்தில் சிறியவர் முதல் பெரியவர் வரை கொண்டாடும் வியாதி முழங்கை + முழங்கால் வலி. உட்கார்ந்து எழ மிகவும் வேதனையாக இருக்கும். இதற்கு டாக்டரிடம் மருந்து மாத்திரை சாப்பிட்டாலும் விரைவில் குணமாகாது. ஆகவே மாதம் 2 முறை முடக்கத்தான் + பிரண்டையை உணவில் சேர்த்தால் மருந்தின்றி, நோயின்றி ஆரோக்கியமாக வாழலாம். அதற்கு நானே சிறந்த உதாரணம்.

**தேவையானபொருட்கள்:-**

புழுங்கலரிசி - ¼ கிலோ

பச்சை அரிசி - ¼ கிலோ

முடக்கத்தான் இலை - ரூ.3.00

பிரண்டை இளசானது - 4 விரற்கடை

மிளகு+சீரகம் - 4 டீஸ்பூன்

பெருங்காயத் தூள் - 4 சிட்டிகை

ருசிக் கேற்ற உப்பு.

**செய்முறை:**

அரிசியை கல், நெல், உமி நீக்கி, 2 மணி நேரம் ஊற வைக்கவும். கீரையை நன்கு ஆய்ந்து, அரிந்து, அலசி வடிய விடவும். அரிசி + கீரை + மிளகு + சீரகம் + பிரண்டை எல்லாவற்றையும் போட்டு மையாக அரைத்து உப்புச் சேர்க்கவும். 3 மணி நேரம் கழித்து வார்க்கலாம். மாவு ரவாதோசை மாவு பதத் தில் இருக்க வேண்டும். வார்த்தால் பேப்பர் ரோஸ்ட் போல் மொறு மொறு வென்று இருக்கும். பிரண்டையும் கூட இருப்பதால் வயிறு சுத்தமாகி விடும். வாயுத் தொல்லை இருக்காது. மலச் சிக்கல் என்ற பேச்சுக்கே இடமிருக்காது. இதற்குத் தொட்டுக் கொள்ள சௌராஷ்டிர சட்னி நன்றாக இருக்கும்.

**சட்னி செய்யும் முறை:**

தேவையான பொருட்கள்:

கடலைப் பருப்பு - 1 கைபிடியளவு

மிளகாய் வற்றல் - 5

வெந்தியம் - ½ டீஸ்பூன்

கடுகு - 1½ டீஸ்பூன்

பெருங்காயம் - 2 சிட்டிகை

வெங்காயம் -சிறியது 15

பச்சைக் கொத்தமல்லி + தக்காளி + கறிவேப்பிலை - 5

தாளிக்க எண்ணெய் - 4 டீஸ்பூன்

மஞ்சள் தூள் - ½ டீஸ்பூன்

வாணலியில் 1 டீஸ்பூன் எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் கடுகு, கடலைப் பருப்பு+ மிளகாய் வற்றல் + பெருங்காயம் + வெந்தியம் ஆகியவற்யைப் போட்டுப் பொன்னிறமாக வறுத்துக் கொட்டிக் கொண்டு, அதே வாணலியில் சிறிது எண்ணெய் விட்டு வெங்காயம் +தக்காளியை அரிந்து அலம்பி சுத்தமாகப் போட்டு வதக்கி எடுக்கவும்.

எல்லாவற்றையும் நன்றாக மைபோல் அரைத்துத் தண்ணீர் விட்டு அலம்பி எடுத்து, மறுபடியும் வாணலியைப் போட்டு எண்ணெய் விட்டு கடுகு தாளித்து மஞ்சள் பொடி தூவி அரைத்த விழுதைக் கொட்டி கறிவேப்பிலை போட்டு கொதிக்க விடவும். தோசை மாவு பதத்தில் இறக்கி அரிந்து வைத்துள்ள பச்சை மல்லியைத் தூவி சூடாக பறிமாறவும். இதன் ருசியே அலாதிதான். இட்லி +தோசை+பூரி +சப்பாத்திக்கும் நன்றாக இருக்கும்.

- விஜயா சுப்பிரமணியம், சென்னை-33.

---

### முடி திருத்திக் கொள்ளும் முன்...

கணவர், குழந்தைகளை முடி திருத்திக் கொள்ள சலூனுக்கு அனுப்பும்போது அவர்களை முடிக்கு ஷாம்பு போட்டு அலசச் செய்து அனுப்புங்கள்

பார்ப்பதற்கு லட்சணமாய் மிகவும் கச்சிதமாக தலையலங்காரம் (பிசிறில்லாமல்) வெளிப்படும்.

— எஸ். மாலதி,



# மேக்-அப் செய்து கொள்வது எப்படி?



ஒவ்வொரு பெண்ணும் அழகாகவும், இளமையோடும் இருக்க ஆசைப்படுவாள். மனித வாழ்வில் இளமை மாறாதிருக்க முடியாது. என்றாலும் பெண்கள் வாழ்வில் சகல பருவங்களிலும் தங்கள் தோற்றத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியும். உணவில் அதிகம் காரம் சேர்த்துக் கொண்டாலும், உடல் அழகைக் குறைக்கும். முகத்தில் எண்ணெய்ப் பசை வடிந்தவர்கள் எலுமிச்சை மூடி தேய்த்து வந்தால் அக்குறை நீங்கும். பச்சைக் காய்கறிகள், பால், பழவகைகள், கீரை, பேரிச்சை, திராட்சை போன்றவை, உடல் வனப்புக்கு மெருகூட்டித் தர வல்லவை. எப்போதும் உற்சாகமாக இருத்தல் மிகவும் சிறந்தது.

வீட்டிலேயே ஃபேஷியல் மற்றும் மேக்-அப் செய்து கொள்வது எப்படி?

ஒரு வாசகி.

வீட்டிலேயே ஃபேஷியல் செய்ய :-

கிளன்சிங் மில்க் (எண்ணெய் கசிவான சருமம் உடையவர்களுக்குக் கொழுப்புச் சத்து இல்லாத கிரீம்)

நரிஷிங் கிரீம் (உலர்ந்த சருமம் உடையவர்களுக்கு)

கோல்டு கிரீம் (சாதாரண சருமம் உடையவர்களுக்கு)

பஞ்சு, டவல், பெரிய துண்டு (தோளில் போர்த்திக் கொள்ள), ரோஸ் வாட்டர், ஓடிகோலன், பேசின், ஆவி பிடிக்க வெந்நீர், மாஸ்க்.

*செய்முறை :*

தலைமுடி நெற்றியில் விழாமல் முதலில் ஹேர் ஃபாண்ட் போட வேண்டும். முகத்தை நன்கு கழுவிய பிறகு கிளன்சிங் கிரீம் அல்லது கிளன்சிங் மில்க் உபயோகித்து பஞ்சினால் துடைத்து விட வேண்டும். பிறகு சருமத்திற்கு ஏற்றாற்போல் உள்ள கிரீமை எடுத்து புள்ளி புள்ளியாக வைத்து, கழுத்து, முகம் முதலிய இடங்களில் வைத்து வட்டமாக தேய்த்து விட

வேண்டும். இதற்குப் பிறகு மசாஜ் செய்ய வேண்டும். பிறகு பேசினில் நன்றாக ஆவி வரும் வெந்நீரை வைத்து, சில துளிகள் ஒடிகோலன் ஊற்றி பெரிய டர்க்கி டவலால் மூடிக் கொண்டு ஆவி பிடிக்க வேண்டும். பிறகு பஞ்சினால் துடைத்து மாஸ்க் போட வேண்டும்.

(சந்தனம், கசகசா, பால் ஏடு, ரோஜா இதழ், பாதாம் இவைகளை நன்கு அரைத்து மாஸ்க் ஆக பயன்படுத்தலாம்.)

எல்லாம் முடித்த பிறகு ஏதாவது ஒரு கோல்டு கிரீம் போடவும்.

*மேக்-அப் :* முதலில் முகத்தை நன்கு கழுவ வேண்டும். பிறகு கிளீன்சிங் மில்க் போட்டு முகத்தைத் துடைத்த பிறகு லிக்விட் பவுண்டேஷனை நன்றாகக் குலுக்கி இரு துளி உள்ளங்கையில் ஊற்றி, இரண்டு சொட்டு நீர் ஊற்றி முகம், முன் கழுத்து, பின்கழுத்து முதலிய இடங்களில் நன்கு தடவ வேண்டும். பின் பவுடர் போட்டுக் கொள்ளவும். பிறகு கண்ணிற்கு 'ஐ-லைனர்' பிரஷ்ஷினால் போட வேண்டும். அவரவர் விருப்பப்படி பொட்டோ, ஸ்டிக்கரோ வைத்துக் கொள்ளலாம். தேவையானால் லிப்ஸ்டிக் போட்டுக் கொள்ளலாம்.

**நிறைய பெண்களுக்குத் திருமணத்திற்கு முன்பே தொடை, ஆடுசதை போன்றவற்றில் வரிகள் (பிரசவம் ஆன பெண்களின் வயிற்றில் ஏற்படுவது போல்) உண்டாவது ஏன்? அதைப் போக்க வழி?**

தினசரி நாட்களில் சில நிமிடங்கள் ஒதுக்கி உடற்பயிற்சி செய்து பழக வேண்டும். சதை போட்டு இருப்பவர்களுக்குத் தொடை, ஆடு சதை போன்றவற்றில் வரிகள் காணப்படலாம். உடற்பயிற்சி செய்வதால் ரத்த ஓட்டம் சீராக இருக்கும். தசைகள் உறுதிப்படும். ஆலிவ் ஆயில் கொண்டு மசாஜ் செய்தால் வரிகள் குறையும்.

**குண்டாக இருக்கும் பெண்கள் எடை குறைக்கும் பொழுது இடுப்பு வயிற்றில் உள்ள சதை குறைந்தாலும், கை சதை குறைவதில்லை. இதைக் குறைக்கும் வழி என்ன?**

கைகளுக்குத் தனியாக பயிற்சி கொடுக்க வேண்டும். கைகள் பெரிதாக உள்ளவர்கள் தோள் பட்டையோடு கைகளையும் சுழற்ற வேண்டும்.

**இன்றைய அவசர உலகில் தலைக்குக் குளிக்கும் நாட்களில் தலையை**



## பாதுகாப்பான வழியில் எந்த நிறுவனம் தன் நிதிகளை முதலீடு

உங்கள் பணத்தை ஒரு நிதி நிறுவனத்தில் டெபாசிட் செய்யும் போது நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? அதன் மூலம் ஒரு நிலையான வருமானத்தைப் பெற வேண்டும்; பொருளாதார மாற்றங்கள் அந்த வருமானத்தைப் பாதிக்கக் கூடாது... என்பதுதானே! அந்த வகையில், நீங்கள் டெபாசிட் செய்ய மிகவும் ஏற்ற நிறுவனம் ஸ்ரீராம்தான். காரணம்—

ஸ்ரீராம் லாரிகளுக்கு நிதியுதவி அளிக்கும் பாதுகாப்பான வழிமுறையில் ஈடுபட்டுள்ளது. தவிர, லாரிகளைத் தயாரிக்கும் டெல்கோ, அசோக் லேலண்ட் நிறுவனங்களும் ஸ்ரீராம் நிறுவனங்களில் முதலீடு செய்துள்ளன. லாரிப் போக்குவரத்து ரொக்க அடிப்படையில் நடைபெறும் தொழில். உரிமையாளருக்கு ஒவ்வொரு நிமிடமும் வருமானத்தை ஈட்டித் தரும் சாதனமாக லாரி விளங்குகிறது. எனவே, லாரி உரிமையாளரால் தவணைத் தொகைகளை ஒழுங்காகச் செலுத்திவிட முடிகிறது. அப்படி அவரால் செலுத்த முடியவில்லையா? அந்த லாரியைக் கையகப்படுத்தி விற்பனை செய்து கடனை எளிதில் வசூலித்து விட முடியும்.

**லீஸிங் எனப்படும் குத்தகை ஒப்பந்த முறையில் கருவிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் இதே அளவு பாதுகாப்பு இருக்கிறதா?**

குத்தகை ஒப்பந்த முறையில் ஒரு சில தொழில்கள், பொருள்கள், இடங்களில் மட்டுமே நிதியுதவி அளிக்க முடியும். இவ்வாறு செய்யும்போது பல எதிர்மறையான அம்சங்கள் இடம்பெற்று விடுகின்றன. கடன் பெறுகிறவர் திருப்பித் தரத் தவறும்போது, அவருடைய சொத்துக்களை உடனடியாகக் கையகப்படுத்தி விற்பனை செய்வது எளிதல்ல. எனவே,

**ப ண த் தி ன் அ ரு மை தெ ரி ந் த வ ர் க ள் நா ங் க ள். அ தை வி ட,**

உலர்த்த போதிய அவகாசம் இல்லாத தால் காயவைக்க 'ஹேர்ட்ரையர்' உப யோகம் கட்டாயமாகிறது. ஹேர்ட்ரை யர் உபயோகித்தால் முடி கொட்டும் என்று தோழி கூறுகிறார். தலைவலி வரும் என்று சொல்கிறார்கள். இதெல் லாம் எந்த அளவுக்கு உண்மை? தோழி யும், மற்றவர்களும் சொல்வது சாத்தி யமா?

அனுபல்லவி, சென்னை - 90.

ஹேர்ட்ரையர் உபயோகித்தால் முடி கொட்டாது. தலைவலியும் வராது. தலையில் ஈரம் போக துடைத்து பிறகு ஹேர்ட்ரையர் உபயோகிப்பது நல்லது.

மருதாணி தைலம் தயார் செய்வது எப்படி? எத்தனை அளவுகள், மருதாணி எல்லா மாதங்களிலும் கிடைக்காதே அப்போது என்ன செய்ய வேண்டும்? கடைகளில் விற்கும் பொடிகளை உப யோகிக்கலாமா? இல்லாவிட்டால் கிடைக்கும்போதே நன்றாகக் காய வைத்துப் பொடி செய்து கொள்ள வேண்டுமா?

சுசீலா, விஜயவாடா.

மருதாணி இலைகளைப் பறித்து நன் றாகக் கழுவி நைசாக அரைத்துக் கொள் ளவும். அரைத்த மருதாணியை வடை களாக தட்டி வெய்யிலில் நன்கு காய வைத்துக் கொள்ளவும். 200 கிராம் தேங் காய் எண்ணெய் நன்கு காய்ச்சியதும் 6 மருதாணி வடைகளைப் போடவும். ஊறிக் கொண்டு இருக்கும் போது உப யோகப்படுத்தவும். சிறிது வெட்டிவேர் போடவும். கடைகளில் விற்கும் மருதாணி பொடியை விட மருதாணி இலை சிறந் தது.

என்னுடைய 11 வயது பெண்ணிற் கும், 6 வயது பெண்ணிற்கும் ஆங் காங்கே 4, 5 முடிகள் நரைக்கத் தொடங் கியுள்ளன. மருதாணி தைலம் தயாரிப் பது எப்படி? மயிர்க்கால்களில் எண் ணெய் தடவுவது எனில் முடியின் நுனியிலா? உச்சந்தலையிலா?

ம. மீனா, சென்னை - 22.

மருதாணி தைலத்திற்கு முன் பதி லைப் பார்க்கவும்.

இளம் நரைக்குப் பித்தம்தான் கார ணம். இளநரையை தடுக்க பி-12 வைட்ட மின் அவசியம் தேவை. இரும்புச் சத்து அதிகமுள்ள முருங்கைக் கீரை, அகத்திக் கீரை, புளிச்சக்கீரை, கறிவேப்பிலை, பிரட் நெய், பருப்பு வகைகளையும் நிறைய சேர்த்துக் கொள்ளவும்.

இரவில் விளக்கெண்ணெய் 1 ஸ்பூன் எடுத்து உச்சந்தலையில் நன்கு அழுந்தத் தேய்க்கவும். (போதிய இரத்த ஓட்டம் தலைக்குக் கிடைப்பதால் கேசம் உறுதி யாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கும். இளநரை தடுக்கப்படும்.) காலையில் சீயக்காய் பொடி கொண்டு அலசவும்.

- ஹேமா லக்ஷ்மண், அழகு மற்றும் சிகை அலங்கார நிபுணர்.

ஜூலை மாத 'மங்கையர் மலர்' இதழில் வளையல்கள் மாட்டுவதைப் பற்றிக் குறிப் பிட்டிருந்தீர்கள். நன்றி, நான் மே மாத லீவில் வீட்டைச் சுத்தம் செய்யும் போது, எனது பிள்ளைகள் காதணிகளை அலங்கோலமாக வைத்திருந்ததைப் பார்த்தேன். Pith ஆலான ஸ்டெபிலைசர் பெட்டியை எடுத்து ஜோடி ஜோடியாகக் குத்தி வைத்து விட்டேன். படத் தில் பார்க்கும் பெட்டியின் இரண்டு உட்பக்கங் களிலும் 45 ஜதைத் தோடுகளை அடுக்கி மாட்ட முடிந்தது. அவதி அவதியாக பள்ளிக்கும் வேலைக்கும் செல்லும் பெண் பிள்ளைகள், பெண்கள் சிரமமின்றி தங்கள் விருப்பப்படி எடுத்து அணிய அதிக வசதியாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

- பிரேமா ஜார்ஜ்.



MAXIMA - A UNIQUE GROUP OF COMPANIES







TO ALL WELL WISHERS
WHO MADE,
OUR BRANCH OPENING
AT 146 ELDAMS ROAD ON
1st AUGUST 1994
A MEMORABLE SUCCESS.

*LION N. S. T. MADHAN*
*Chairman & Managing Director*

Maxima Group of Companies

MAXIMA INVESTMENT & FINANCE COMPANY

**Regd. Office :** 1, Vedantha Desikar Street,
R. K. Mutt Road,
Near Luz Bazaar,
Mylapore, Madras - 600 004.
Ph : 4941849
Fax : 044-4347655, Grams : MAXFIN.

**Branch Office :** 146, Eldams Road,
Madras - 600 018.
Phone : 456950

MAXIMA - MAXIMUM DEPENDABILITY

பரிசு பெற்ற கட்டுரை

# நான் பார்த்து ஆச்சர்யப்பட்ட ஹேர்-ஸ்டைல்

பள்ளியில் எனது ஆசிரியைக்குத் தோள் பட்டை வரைதான் முடி இருக்கும். அதை அவர் சமமாக, ஏற்றத்தாழ்வு இல்லாமல் வெட்டிக் கொள்ளுவார். ஒருநாள் ஸ்கூலுக்கு வரும் போது அதை அப்படியே அழகாக வாரி விட்டுக் கொண்டு வருவார் (விரித்தபடியே). இன்னொரு நாள் வகிடு இல்லாமல் தூக்கி வாரி அப்படியே 'போனி டெய்ல்' போட்டுக் கொண்டு வருவார். அடுத்த நாள் அந்த முடியை வகிடு எடுத்து இரண்டாகப் பிரித்து, ஷார்ட்டாக இரட்டைப் பின்னல் போட்டுக் கொள்ளுவார். இன்னொரு நாள் இரண்டாகப் பிரித்து இரண்டு சிறிய 'போனி டெய்ல்' மாதிரி காதோரங்களில் ரப்பர் பேண்ட் போட்டுக் கொள்ளுவார். அடுத்த நாளுக்கு, 'ஏர் ஹோஸ்டஸ் ஸ்டைலில்' தூக்கி நடுமண்டையில் சிறியதாக, டீசண்டாக கொண்டை.

இப்படி ஒவ்வொரு நாளைக்கு ஒவ்வொரு ஹேர்ஸ்டைல். ஒவ்வொரு ஸ்டைலும் அவருக்குப் பொருத்தமாக, அழகாக இருக்கும். ஒரே ஒரு ரோஜாவை வலது காதோரம் சொருகிக் கொள்ளுவார். ப்யூட்டியோ ப்யூட்டிதான்.

அவர் திடீரென்று 10 நாட்கள் ஸ்கூலுக்கு வரவில்லை. நானும் என் தோழியும் அவரைப் பார்க்க வீட்டிற்குப் போனோம். டைபாய்டு ஜுரத்தில் படுத்திருந்தார். நாங்கள் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு கிளம்பினோம்.

"ப்ளீஸ்! ஒரு ஹெல்ப்" என்றார். "என்ன மேடம்?" என்றேன். "கையில் தினமும் மாற்றி, மாற்றி ஊசிப் போட்டுக் கொள்வதால் கையைத் தூக்கித் தலையைச் சீவ முடியவில்லை. கொஞ்சம் தலையைச் சீவி பின்னி விடுகிறாயா?" என்றார்.

நானும் சரியென, சீப்பு எடுத்து நான்கு நாட்களாக சீவாமல் சிடுக்காகிப் போன முடியைப் பிரித்தேன். அவ்வளவுதான்! பதறிப் போனேன். தலையில் வலது பாகத்தில் ஒரு ஜாண் நீளத்திற்கு தையல் போட்ட வடு இருந்தது. என்னவென்று விசாரித்ததில் ஐந்து வருடங்களுக்கு முன், ஒரு கார் விபத்தில், தலைமண்டை உடைந்து விட்டதாகவும், மூளையில் இரத்தம் கட்டிக் கொண்டதாகவும், அதனால் அந்த இரத்தக் கட்டியை அகற்ற ஆபரேஷன் செய்து கொண்டதாகவும் சொன்னார். எனக்கு இரத்தமெல்லாம் உறைந்து விட்டது போலிருந்தது. எவ்வளவு பெரிய 'ஸ்கல்' ஆபரேஷன்! இருந்தும், கொஞ்சமும் வெளியே காட்டிக் கொள்ளாமல் ஆபரேஷன் நடந்த இடத்தில் இருந்த வழுக்கை வெளியே தெரியாமல் எத்தனை அழகாக ஹேர்ஸ்டைல், தினம் ஒருவிதமாக செய்து கொள்கிறார். என்ன ஒரு தன்னம்பிக்கை! எத்தனை ஆர்வம்! ஆகா! எனது ஆசிரியையை விட வேறு யாருடைய 'ஹேர்ஸ்டைலும்' என் மனதைக் கவராது.

- **திருமதி. ரகுராமன், சென்னை - 39.**

## பிரசுரத்திற்குச் சில கட்டுரைகள் :

### ஏழ்மைக்குப் பலியான கூந்தல்!

எனது சக மாணவி ஜாக்குலீன். மிகவும் ஏழை. அவளுக்கு அப்பா இல்லை. அம்மா மட்டும்தான். ஒரு சிலும்பலோ, பிசிறோ இல்லாத ஒரே மாதிரி நீளமுடைய மிக நீண்ட அவளுடைய கூந்தல் எனக்கு ஆச்சர்யமாக இருக்கும். அவள் சாப்பாட்டில் ஒரு வளமையும் கிடையாது. இன்றும் நினைத்தால் வேதனையாகத்தான் இருக்கிறது. மதிய உணவாக அலுமினிய தூக்குச் சட்டியில் அவள் கொண்டு வருவது நான்கைந்து அவித்த சீனிக் கிழங்கு அல்லது மரவள்ளிக் கிழங்குகளே. (அப்போது இலவச மதிய உணவுத் திட்டம் கொண்டு வரப்படவில்லை).

ஒருநாள் காலை வகுப்பு ஆரம்பமாகிவிட்டது. ஆசிரியை பாடம் நடத்திக் கொண்டிருந்தார். அப்போது ஜாக்குலீனை கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வகுப்பறைக்குள் நுழைந்தாள் அவளது அம்மா. அழுதுகொண்டு வருகிற ஜாக்குலீனைப் பார்த்த எனக்கு, டீச்சருக்கு, ஏன் எல்லோருக்கும் அதிர்ச்சி. ஜாக்குலீனின் தலைமுடி பிடரியோடு வெட்டப்பட்டிருந்தது. டீச்சர், 'ஏன் அழுறே ஜாக்குலீன்?' என்ற போது அவள் அழுகை கூடியது. அவள் அம்மாதான் பதில் சொன்னாள்.

"பாருங்க டீச்சர், எங்க குடிசைகிட்ட இருக்கிற மாடி வீட்டுக்காரம்மா ஒரே நீள முடியா வச்சு சவுரி கட்டணும்னு கேட்டாங்க. பதினைஞ்சு ரூபா குடுத்தாங்க டீச்சர்! மூணு நாளா சாப்பாட்டுக்கே வழியில்லாம இருக்கிறப்ப பதினஞ்சு ரூபா கிடைக்குதேன்னு இவ முடியை வெட்டிக் குடுத்துட்டேன். இந்த முடியிருந்து என்னத்துக்கு? நான் பட்ட கஷ்டத்தில எண்ணெய் வாங்க முடியுதா? வெட்டுனா என்ன வளந்துட்டுப் போகுதுன்னு சொன்னா கேக்க மாட்டேங்கறா.

| இந்த இதழ் பரிசுக் கட்டுரைக்கு மீரா அளிக்கும் பரிசு - ரூ. 1,000/- மதிப்புள்ள குக்கர் | அடுத்த இதழுக்கான போட்டி - என்னைக் கவர்ந்த கூந்தல் ஜோக் |
|---|---|

பள்ளிக்கூடத்தில புள்ளைங்க கேலி பண்ணு வாங்கன்னு அழுறா. நீங்க கொஞ்சம் சொல் லுங்க டீச்சர்'' என்றாள்.

டீச்சரே ஒரு நிமிஷம் கண்கலங்கி விட்டு, ''ஜாக்குலீன்! அழக் கூடாது. இப்போதான் ஸ்டைலா நல்லா இருக்கு. அமெரிக்காவிலெல் லாம் இப்படித்தான் ஸ்டைலா எல்லாப் பொம்பளைகளும் பாப் வச்சிருப்பாங்க'' என் றார்கள். நாங்களும் அதிர்ந்து போய் அமர்ந் திருந்தோம். அந்த வயதில் ஏழ்மையின் கொடு மையை நேருக்கு நேரா பார்த்ததை மறக்கவே முடியாது.

**- கண்ணம்மா பகவதி, விருதுநகர்.**

## விளம்பரப் பெண்ணின் கூந்தல்!

**தூ**ர்தர்ஷனில் 'சர்ஃப் அல்ட்ரா' விளம் பரத்தில், ''தேடிக்கிட்டே இருக்கப் போறீங்க'' என்று கண்களைச் சுழற்றி அழகாக சொல்லும் அந்தப் பெண்ணின் 'ஹேர்ஸ்டைல்' என்னை ஆச்சர்யப்பட வைத்தது.

புசுபுசுவென, கருமையான, அழகான, அள வோடு வெட்டப்பட்ட கூந்தல்... அதனை எந்தவித பிடிப்புக்கும் கொடுக்காமல் சுதந்திர மாக எளிமையாக விட்டிருக்கும் ஸ்டைல்... அதோடு, சிறிய முடிக்கற்றையை, (ஒரு பத்து முடிகள் இருக்குமா?) முடிக்கற்றையாக இல்லா மல், ஒவ்வொன்றாகப் பிரித்து முன்நெற்றி யைத் தொட்டுக் கொண்டிருக்கும்படி பண்ணி யிருக்கும் ஸ்டைல்...

அவருடைய முகத்திற்கே அம்சமான தோற் றத்தைக் கொடுப்பதே அவருடைய ஹேர் ஸ்டைல்தான் என்று கண்டிப்பாகச் சொல்ல லாம்...

**- புவனேஸ்வரி பாலாஜி, கொரட்டாச்சேரி.**

## பாப் முடியழகு!

**க**ருகருவென்று கண்ணைக் கவரும் வித மாக அமைந்த அழகு. அதற்கு இன்னும் கொஞ் சம் அழகு சேர்க்க சுருள் வேறு. தலையைச் சுற்றிலும் ஹெல்மெட் அணிந்தது போல் அல்லது தலைக்குக் கவசம் இருப்பது போன்று 'பம்'மென்று இருக்கும் வசீகரம். சில நாட் களில் இரவு 10:00 மணியளவில் என்னை ஆச்சர்யப்பட வைக்கும் ஹேர்ஸ்டைல்.

ஆம். ஆங்கிலச் செய்தி வாசிப்பாளர் கிதாஞ்சலி ஐயரின் ஹேர்ஸ்டைலைத்தான் குறிப்பிடுகிறேன். எத்தனையோ பேர், 'பாப்' முடியழகு வைத்திருந்தாலும், இவரது ஹேர் ஸ்டைல், தலையைச் சுற்றி ஒளி வட்டம் அமைந்திருப்பது போல இருப்பது என்னை ஆச்சர்யப்பட வைக்கிறது.

**- பர்வதம் முத்துக்குமார், திருவண்ணாமலை.**

## ஆத்திக்கட்டு!

**நா**ன் பார்த்து ஆச்சர்யப்பட்ட ஹேர் ஸ்டைல் ''ஆத்திக்கட்டு'' என்பதுதான். அதா வது நன்கு தலைமுடியை வாரி காதின் இரு ஓரங்களிலிருந்தும் கற்றையாக முடி எடுத்து வகிடின் முடிவில் (நடு உச்சி) கொண்டு வந்து நடு உச்சியிலிருந்தும் கொத்தாக சிறு முடியை எடுத்துப் பின்னல் போட வேண்டும். மீதி முடியை நன்கு பிரஷ் பண்ணி விருப்பமுள்ள வர்கள் முடியின் நுனியில் சிறு முடி போடு வார்கள். இப்போது கிளிப் போடுகிறார்கள். எத்தனையோ ஹேர்ஸ்டைல் மாறி மாறி வந்தாலும் பழைய காலம் தொட்டு இருந்து வரும் இது மட்டும் மாறாமல் இன்னும் போட்டுக் கொண்டே இருக்கிறார்கள். (கேர ளாவில் அதிகம்). நம் ஊர் வெப்ப பிரதேசம். அதற்கேற்ற இந்த ஹேர்ஸ்டைல்தான் நான் பார்த்து ஆச்சர்யப்பட்டது.

பி.கு: ம. செ.தான் படம் போடும் பெண் களுக்கு இந்த ஹேர்ஸ்டைலையே அடிக்கடி போட்டு விடுவார்.

**- லதா வைத்தியநாதன், பெங்களூர்.**

## அடுத்த இதழிலிருந்து....

பிரபல அழகுக் கலை நிபுணர் மைதிலி உங்கள் கேள்விகளுக்குப் பதில் அளிப்பார்.




# சவுத் ஈஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட 'நிதி' நிறுவனம் துவக்கம் - 1989.
கார்த்திக் அப்பார்ட்மெண்ட்ஸ், அடித்தளம், 6, செயிண்ட் மேரீஸ் சாலை, மந்தைவெளி,
சென்னை - 28. போன்: 49 40 255.
(தொடர்புகள் பங்குதாரர்களுடன் மட்டும்)

| பிக்சட் டிபாசிட் திட்டம் (மாதங்கள்) | | | | | 'உதவும் கரங்கள்' டிபாசிட் திட்டம் (மாதங்கள்) | | | | சேமிப்பு நிதித் திட்டம் 9% வட்டி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 12 | 24 | 36 | 48 | 60 | 12 | 24 | 36 | 60 | வீடு மற்றும் குடியிருப்பு (FLAT) கடன் |
| 17% | 18% | 19% | 19.5% | 20% | 19.5% | 20% | 20.5% | 21.0% | பதிவு அலுவலக மதிப்பில் பாதி |

| 'குத்து விளக்கு' மறு முதலீட்டுத் திட்டம் - 1 | | | 'குத்து விளக்கு' மறு முதலீட்டுத் திட்டம் - 2 | | |
|---|---|---|---|---|---|
| 36 மாதங்கள் THIRTY SIX MONTHS | Rs. 2,925/- | Rs. 5,000/- | 252 மாதங்கள் (21 வருடங்கள்) 252 Months (21 YEARS) | Rs. 295/- | Rs.20,000/- |
| | Rs. 5,850/- | Rs. 10,000/- | | Rs.590/- | Rs.40,000/- |
| | Rs. 8,775/- | Rs.15,000/- | | Rs.885/- | Rs.60,000/- |
| | Rs.11,700/- | Rs.20,000/- | | Rs.1,180/- | Rs.80,000/- |
| | Rs.14,625/- | Rs. 25,000/- | | Rs. 1,475/- | Rs. 1,00,000/- |

| 'கலங்கரை விளக்கம்' மறு முதலீட்டுத் திட்டம் - 1 (மாதங்கள்) | | | | | | 'கலங்கரை விளக்கம்' மறுமுதலீட்டுத்திட்டம் - 2 | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| டிபாசிட் | 12 | 24 | 36 | 45 | 60 | டிபாசிட் | 120 மாதங்கள் | 180 மாதங்கள் |
| 1,000/- | 1,184/- | 1,430/ | 1,735/ | 2,000/ | 2,535/ | 2,500/ | 16,500/ | 45,500/ |

'கல்பதரு' மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை | 10-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை | 15-ம் ஆண்டு முடிவில் பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs. 6,320/- | Rs. 6,000/- | Rs.6,000/- | Rs.56,300/- |

'காமதேனு' மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 30 ஆண்டுகள் | 10-ம் ஆண்டு முடிவில் நீங்கள் பெறும் தொகை | மேலும் 20 ஆண்டுகள் கழித்து நீங்கள் பெறும் தொகை |
|---|---|---|
| Rs. 12,500/- | Rs. 12,500/- | Rs.25,00,000/- |
| Rs. 25,000/- | Rs. 25,000/- | Rs.50,00,000/- |
| Rs.50,000/- | Rs.50,000/- | Rs.1,00,00,000/- |

**ரெக்கரிங்டிபாசிட்திட்டம் மாதாந்திரவட்டி 19%**

தங்க நகைக் கடன்
ஒரு கிராமுக்கு
ரூ. 300/ -
புதுப்பித்தல்கட்டணம் இல்லை
ஆர்.டி.தேவையில்லை.
உச்சவரம்பு இல்லை.
வட்டி வரி இல்லை.

ஏ.வி. இராமநாதன்
இயக்குநர் ஆடிட்டர்

எம்.பி. பாண்டுரங்கம்
துணைத் தலைவர் மற்றும் தலைமை நிர்வாகி

பி.கே. சாமிநாதன், தலைவர்
ஓய்வு பெற்ற மாநில அரசு துணைச்செயலாளர்

நேரம்: 9-12.30 & 3 - 5.30 | பங்குத் தொகை ரூ.1/-தான் | மாதத்தின் கடைசி நாள் வேலை நாளாகும்.



# நாங்களும்தான்

• லக்ஷ்மிநாராயணன்







" 'ஹாஸ்டலில் ஒரு சகலகலாவல்லவி!'ன்னு போட்டு இருக்கீங்களே! இதோ எங்களிடம் கலைத்திறமை இருக்கிறது. எங்களையும் ஊக்குவியுங்களேன்!'' என சேலத்தில் என்னை வந்து சந்தித்தார்கள் ஓர் இளம் பெண்ணும், ஒரு சிறுவனும்.

மாலதி எந்தவித முறையான பயிற்சியும் இல்லாமலே அழகிய ஓவியங்களை ,வரைகிறார். அவருடைய படங்களைப் பார்த்துப் பிரமித்துப் போனேன். இவருடைய தந்தையாரும் தானே ஓவியங்கள் வரைவாராம். சிறு வயதில் இருந்தே வண்ணங்களுடனும், பிரஷ்களுடனும் பழகிவிட்ட மாலதி தானே படம் போட ஆரம்பித்து இருக்கிறார். பல விழாக்களில் ரங்கோலியில் பூக்கள், சரஸ்வதி என அமர்க்களப்படுத்துகிறார்.

அதேபோல லக்ஷ்மிநாராயணனிடம் உள்ள திறமை ஆச்சர்யமாக

# வல்லவர்கள்









• அரிசியில் பறவைகள்.....

இருந்தது. அவனிடம் அட்சதை அரிசி போல கலர் கலராக வண்ணம் கலந்த அரிசியைக் கொடுத்து விட்டால் போதும்! நிமிடத்தில் யானை யாக, மானாக, பறவையாகச் செய்து விடுகிறான். தரையில் அமர்ந்து கொண்டு அவன் கிடுகிடுவென்று அரிசியைப் பரப்பி உருவங்களை அமைக்கும் வேகம்! பக்கத்திலேயே அவனுடைய தாயார் தில்லைக்கரசி நின்று கொண்டு ஊக்கம் தருகிறார்.

லக்ஷ்மிநாராயணனின் பாட்டி கோதுமையை வெளியில் காய வைத்திருந்தார். அதில் விளையாட்டாக அவன் உருவம் அமைத்த போது தான் அவனிடம் இந்தத் திறமை இருப்பது வெளிப்பட்டு இருக்கிறது. பிறகு தில்லைக்கரசியும், அவருடைய கணவரும் ஏகமாக ஊக்குவித் திருக்கிறார்கள். இப்போது சேலத்தில் பல விழாக்களில் இவன் ஆஜராகி விடுகிறான் அரிசியில் கோலம் வரைய!

- மஞ்சுளா ரமேஷ்





# ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேச்வர கோடி நாமயக்ஞம் - திருப்பதி

**From 7th Oct '94 to 22nd Jan '95, 108 Days**

## 'ஸ்வாகதம்'

ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் அனுக்ரஹத்துடனும், ஆஸ்திகஅன்பர்களின் விசேஷ உதவியுடனும் திருப்பதி புண்ய க்ஷேத்திரத்தில் கடந்த 14 வருடங்களாக பார்வையற்ற குழந்தைகள் மற்றும் ஆதரவற்ற முதியோர்களுக்கு நவஜீவன் ஆசிரமம்உதவி வருவது குறித்து ஆஸ்திக அன்பர்கள் அறிந்ததே.

### மீண்டும் கோடி நாம யக்ஞம் :

தமிழ்நாடு, கர்நாடகம், பாம்பே, வடஇந்தியா மற்றும் வெளிநாட்டிலுள்ள ஆஸ்திக அன்பர்களின் விசேஷ வேண்டுகோளுக்கிணங்க ஸ்ரீ காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்வாமிகளின் அருள் ஆசியுடன் திருப்பதி "நவஜீவன் சப்தகிரி ஆஸ்ரமத்தில் "மீண்டும் 7.10.94 முதல் 22.1.95 வரை 108 நாட்களுக்குத் தொடர்ந்து ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேஸ்வர கோடி நாமயக்ஞம்" எழுத்து வேள்வி நடத்த திட்டமிட்டுள்ளோம்.

கலியுக கண்கண்ட தெய்வமான ஸ்ரீ ஏழுமலையான் அருள் பாலிக்கும் திருப்பதி புண்ய ஸ்தலத்தில் நடக்கவிருக்கும் இந்தப் புனிதமான கோடிநாம வேள்வியில் கலந்து கொள்ளுமாறு ஆஸ்திக அன்பர்களை அன்புடன் வேண்டுகிறோம்.

### இலவச புனிதப் பயணம் மற்றும் தங்கத்தில் திருமாங்கல்யம் :

1) Free trip to Tirupati - FTT - தேர்ந்தெடுக்கப்படும் 101 அன்பர்களுக்கு இலவச திருப்பதி புனிதப் பயணம் ஸ்ரீ வெங்கடாஜலபதியின் திவ்ய அருளாக!
2) Free trip to Kashi - FTK - தேர்ந்தெடுக்கப்படும் 9 வயோதிக அன்பர்களுக்கு இலவச காசி புனிதப் பயணம் காசி விஸ்வநாதரின் ஆசியாக!
3) Free Gold Tirumangalyam - FGTM - தேர்ந்தெடுக்கப்படும் 9 பெண்களுக்கு இலவசமாகத் தங்கத்தில் திருமாங்கல்யமும் பட்டுப்புடவையும், ஸ்ரீ பத்மாவதி தாயாரின் மங்கள ஆசீர்வாதமாக அளிக்கப்படும்!

### ஆசீர்வாதமாக விசேஷ பிரசாதம்:

ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேச்வர கோடி நாம யக்ஞத்தில் பங்கு கொள்ளும் எல்லா ஆஸ்திக அன்பர்களின் சார்பாகவும் விசேஷ பிரார்த்தனை செய்வித்து அன்னதானமும் வழங்கி ஸ்ரீ வெங்கடாஜலபதி - ஸ்ரீ பத்மாவதி தாயார் ஆசீர்வாதமாக ஹோம பிரசாதம் போஸ்ட் மூலமாக அனுப்பி வைக்கப்படும்.

### முக்கிய குறிப்பு :

ஸ்ரீ லக்ஷ்மி வெங்கடேச்வர கோடி நாம வேள்வியில் பங்கு கொள்ள விரும்பும் ஆஸ்திக அன்பர்கள், அதற்கான விதிமுறைகள் மற்றும் நியமங்களை அறியும் பொருட்டு Printed Form அச்சிட்ட படிவத்தை இலவசமாகப் பெற போஸ்ட் கார்டில் தங்களது அட்ரஸைத் தெளிவாக எழுதி (With Pincode) கீழ்க்காணும் அட்ரஸிற்கு விண்ணப்பிக்கும்படி வேண்டுகிறோம்.

**K. S. ACHARYA, Organiser**
**SRI LAKSHMI VENKATESWARA KOTINAMA YAGNAM,**
**NAVAJEEVAN SAPTAGIRI ASHRAM,**
**P.O. TIRUCHANUR, TIRUPATI - 510 503.**

ச்ரேயோ பூயாத் ஸகல ஜனானாம்

# டி அண்ட் ஸி செய்தால் குழந்தை பிறக்குமா?

டைலடேஷன் & க்யூரடேஜ் என்றால் பெரும்பாலானவர்களுக்குத் தெரியாது. ஆனால் டி அண்ட் ஸி அறுவை சிகிச்சை என்று சொல்லிப் பாருங்கள் உங்கள் பாட்டிமார்களுக்குக் கூடத் தெரியும். ஏனெனில் கர்ப்பம் தரிப்பதற்கு டி அண்ட் ஸி அறுவை சிகிச்சை கையாள்வது அந்தக் காலத்தில் அதிகம் இருந்ததே இதற்குக் காரணம். சமீபத்தில் டி அண்ட் ஸி பற்றிய ஒரு செய்தியை படிக்க நேர்ந்தது. டி அண்ட் ஸி பண்ணியதாலேயே ஒரு பெண் கர்ப்பம் தரிக்கும் தன்மையை இழந்தாள் என்பது தான் அது. முன்னுக்குப் பின் முரணாக இருக்கும் இந்தச் செய்தி எவ்வகையில் சாத்தியமாகும்? மகப்பேறு நல மருத்தவரான திருமதி ராதா பாண்டியனை சந்தித்து இதற்கு விளக்கம் கேட்டோம்.

"கரு தரிப்பதற்காக மட்டும் டி அண்ட் ஸி சிகிச்சை முறையினைக் கையாள்வது 1976 லிருந்தே பெரும்பாலும் வழக்கத்தில் இல்லை எனக் கூறலாம். அல்ட்ராசவுண்டும், ஸ்கேனிங் முறைகளும் மருத்துவத் துறையில் முளைத்த பிறகு அவை டி அண்ட் ஸியை பின்னுக்குத் தள்ளி விட்டன என்றும் சொல்லலாம். மாதவிடாய் ஒழுங்காய் வரும் பெண்களுக்கு டி அண்ட் ஸி அறுவையைச் செய்தால் மகப்பேறு உடனே கிடைக்கும் என்கிற அபிப்பிராயம் மருத்துவர்களிடமிருந்து மறைய ஆரம்பித்ததும் இதற்கு ஒரு காரணமாகும்.

இருந்தும் சில நவீன மருத்துவ வசதி இல்லாத இடங்களில் (நகரம், கிராமம் என்று பிரித்துக் கூற முடியாத இடங்களில்) நாளொன்றுக்கு 10 முதல் 15 வரை இவ்வகை அறுவை சிகிச்சைகள் செய்யப்படுகின்றன.

"டி அண்ட் ஸி செய்த பிறகும் ஒருவருக்கு கர்ப்பம் தரிக்கவில்லையே ஏன்?"

"அதற்குப் பல காரணங்கள் சொல்லலாம். அ) கர்ப்பப்பை அறுவை சிகிச்சைக்குப் பின் அதன் வாயைத் தொற்றுநோய் கிருமிகள் தாக்கியிருக்கலாம். ஆ) கூர்மையான ஆயுதங்களைக் கொண்டு கர்ப்பப் பை வாயை அகலப்படுத்தப்படுவதால் அதில் துளைகள் ஏற்பட்டிருக்கக்கூடும். இது கர்ப்பம் உருவாவதைத் தவிர்த்துவிடும். இ) கர்ப்பப்பை வாயினை அடிக்கடி அகலப்படுத்துவதால் அது விரிந்து சுருங்கும் தன்மையினை இழந்து கரு உள்ளே சென்று ஸ்திரமாக தங்கமுடியாமல் வழுக்கிக் கொண்டு வெளியே வந்து விடக்கூடிய வாய்ப்புகள் அதிகம்.



இவற்றில்

ஏதாவதொரு காரணத்தினால் நீங்கள் குறிப்பிட்ட பெண்ணிற்குக் கர்ப்பம் தரிக்காமல் இருந்திருக்கலாம்.

**"தற்போது எத்தகைய நிலையிலெல்லாம் டி அண்ட் ஸி அறுவை சிகிச்சை செய்கிறார்கள்?"**

"மாதவிடாய் கோளாறு உள்ளவர்களுக்கு, கர்ப்பம் தரித்து அரைகுறையாய் கரு கலைந்தவர்களுக்கு, கருப்பையினை காசநோய் மற்றும் புற்றுநோய் தாக்கியிருந்தால், குழந்தை பிறந்த பிறகு நஞ்சுக்கொடி என்று சொல்வார்களே அது கர்ப்பப் பையினுள் சென்று விட்டால் மேற்கூறிய அறுவை சிகிச்சையினை கையாள்வது அவசியம்."

**'டி அண்ட் ஸி' அறுவை சிகிச்சை செய்து கொள்பவர்கள் தெரிந்து கொள்ள வேண்டியது என்ன?"**

"'டி அண்ட் சி' அறுவை சிகிச்சையுடன் அதற்கு முன்னோடியாக ஸ்கேனிங் அல்லது லாப்ரோஸ்கோப், ஹிஸ்டோ ஸ்கோப் முறைகளைக் கையாள்கிறார்களா என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். கருக் கலைப்பாக இருந்தால் கருவினை உறிஞ்சு குழாய் ஊசி மூலம் எடுத்த பிறகே டி அண்ட் சி செய்ய வேண்டும். இல்லையெனில் கர்ப்பப்பை மிகவும் பலமற்று விடும். டி அண்ட் சி முடிந்த பிறகு கர்ப்பப் பையினின்றும் எடுத்த சதையை பரிசோதனைக்கு அனுப்பி முடிவைத் தெரிந்து கொள்வது மிக மிக அவசியம். டி அண்ட் சி பண்ணிய பிறகு அதிக இரத்தப் போக்கோ, துர்வாடையோ, வயிறு உப்புசம் அல்லது வாந்தி, மலம் பிரியாமல் இருப்பது போன்ற சங்கடங்கள் இருந்தால் மகப்பேறுநல மருத்துவரை அணுகி ஆலோசனை பெறுவது மிக அவசியம். டி அண்ட் சி அறுவை சிகிச்சை செய்யும் மருத்துவர்கள் தொற்றுநோய் பரவாமல் இருக்க (சீழ் பிடிக்காமல் இருக்க) பாதுகாப்பான உபகரணங்களைப் பயன்படுத்துவதுடன் அறுவை சிகிச்சையினை நவீன வசதி கொண்ட அறையில் செய்வது மிகவும் முக்கியம்" என்றார் ராதா பாண்டியன்.

- கீதா மோஹன்

---

மழை நாட்களில் பொரித்த அப்பளம் சீக்கிரம் நமுத்துவிடும். அதற்கு ஒரு யோசனை. அப்பளம் பொரித்துச் சூடு ஆறிய பிறகு, ஒரு ஸ்டீல் டப்பாவில் போட்டு டைட்டாக மூடி ஃபிரிட்ஜில் வைத்துவிட்டால் நான்கு நாட்களுக்குப் பிறகு எடுத்தால் கூட அப்போதுதான் பொரித்த மாதிரி கரகரப்பாக இருக்கும். முயற்சி செய்து பாருங்களேன்.



- வி. மீனா

---



# பள்ளி நடத்த ஆசை

எத்தனையோ பள்ளிகள் பெண்களின் கூட்டு முயற்சியாலும், தனிப்பட்ட முறையிலும் வளர்ந்திருக்கின்றன. திருமதி மீனா சேது தனி ஒருவராக நின்று சேலத்தில் இன்றைய சிறந்த பள்ளிகளில் ஒன்றான 'கோல்டன் கேட்ஸ் ஹையர் செகண்டரி ஸ்கூலை' நிறுவி இருக்கிறார்.

எண்ணூறுக்கும் மேற்பட்ட மாணவ, மாணவிகள். இப்பள்ளி சென்ற வருடம் 100% தேர்ச்சி பெற்றது. 80% சதவீதத்தினர் முதல் வகுப்பு பெற்றார்கள். இதில் என்ன விசேஷம் என்றால் இப்போதுதான் அவர்கள் முதன் முதலில் பத்தாம் வகுப்பு தேர்வுக்கு மாணவர்களை அனுப்புகிறார்கள். இந்த வெற்றிக்குப் பின்னணி என்ன? இன்று வெற்றிப் பாதையில் சென்று கொண்டிருக்கும் மீனா சந்தித்த சோதனைகள் நிறைய....

"நான் தன்னந்தனியாக இதைச் சாதித்தேன் என்று சொல்ல முடியாது. ஏனென்றால் வெகு ஆரம்பத்தில் இருந்தே எனக்குப் பள்ளி ஒன்றினை நடத்த வேண்டும் என்று ஆசை. நான் சென்னையில் மகளிர் கிறித்துவர் கல்லூரியில் படித்த போது அங்கு நடந்து கொண்டிருந்த நர்ஸரி ஸ்கூலில் நான் சேர்ந்து விட வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் எதிர்பாராதவிதமாக அந்த வருடமே எனக்குத் திருமணமாகி விட்டது. அப்புறம் குடும்பம் குழந்தைகள் என்று சில வருடங்கள் இருந்து விட்டேன்.

என் முதல் மகனைப் பள்ளியில் சேர்த்தபோது இரண்டாவது மகன் பிறந்திருந்தான். பள்ளிக்கு அவன் வெகு தூரம் போக வேண்டிய நிலை. அது தவிர நினைத்திருந்த மாதிரி பள்ளிக்கல்வி இல்லை.

ஏன் நாமே ஒரு பள்ளி ஆரம்பிக்கக் கூடாது என நினைத்தேன். என் தோழிகளிடமும் சொல்லி நான்கு குழந்தைகளோடு பள்ளியை ஆரம்பித்தேன். எங்கள் வீட்டிலேயே அதை ஆரம்பிக்க என் மாமியார் பெரிதும் ஒத்துழைத்தார். ஆரம்ப நாட்களை இன்று நினைக்கும் போது வேடிக்கையாக இருக்கிறது. நான்கு குழந்தைகள் இருந்தாலும், எட்டு குழந்தைகள் இருந்தாலும் தவறாமல் ஆண்டு விழா, சுதந்திர விழா எனக் கொண்டாடுவோம். பள்ளிகளுக்கிடையே போட்டி கூட நடத்தினோம். மிகச் சிறு பள்ளியின் முதல்வரான நான் எல்லா பள்ளிக்கும் போய் நேராகவே அழைத்தேன். சிலர் என்னை வினோதமாகக் கூட பார்த்தார்கள். ஆனால் அதைப் பற்றியெல்லாம் நான் கவலைப் படவே இல்லை. தவறாமல் என் பள்ளி சிறந்த பள்ளி, சாதனைகள் நிகழ்த்தக் கூடிய பள்ளி என நிரூபிக்க முயன்று கொண்டே இருந்தேன்..."

"அந்தச் சமயத்தில் மிகப்பெரிய பிரச்னை என ஏதாவது வந்திருக்கிறதா?"

"நிறைய. மூன்றாம் வகுப்பிற்கு மாணவர்கள் இல்லாமல் நான்காம் வகுப்பு ஆரம்பித்து இருக்கிறேன். எல்லாவற்றையும் விட பெரிது, ஒரு கட்டடத்தில் பள்ளியை அது நடந்து கொண்டிருந்த இடத்திலிருந்து உடனடியாகக் காலி செய்ய வேண்டும் என்று சொன்னதுதான். தேர்வு முடிந்து எல்லா சாமான்களையும் மூட்டை கட்டி வைத்து விட்டு, அடுத்து பள்ளியை எங்கே



## கிரைண்டர் இல்லாதவர்க்கும் பூப்போல இட்லி

கிரைண்டர் இல்லாதவர்கள் கூட பச்சரிசியிலும் பூப்போல இட்லி செய்யலாம். புழுங்கலரிசி தேவையில்லை. தேவையான சாமான்கள்: பச்சரிசி - 3 ஆழாக்கு, வெ.உ.பருப்பு - 1½ ஆழாக்கு.

முதலில் அரிசியை கல் நீக்கி சுத்தம் செய்து வெறும் வாணலியில் நன்றாக சிவப்பாகாமல் பொன்னிறமாக வறுத்து ஊற வைத்து விடவும். உளுத்தம் பருப்பையும் 3 மணி நேரம் ஊற வைத்து விடவும். முதலில் உ.பருப்பை நன்றாக நீர் விட்டு மிக்ஸியில் நைஸாக அரைத்து எடுத்துக் கொள்ளவும். பிறகு அரிசியை நீர் விடாமல் கெட்டியாக ரவை பதத்திற்கு அரைத்து உளுத்தம் மாவுடன் சேர்த்து உப்பு போட்டு தேவையானால் நீர் விட்டு கரைத்து வைத்து விடவும். மறுநாள் காலை வழக்கம் போல இட்லி செய்தால் பூப்போல வெண்மையாக அழகாக வரும். மைசூரில் உள்ள என் அத்தை சொல்லிக் கொடுத்த அழகான வழி இது.

- லதா நரசிம்மன்

திறக்கப் போகிறோம் எனப் பெற்றோர்களுக்குத் தகவல் தெரிவிக்கிறோம் எனச் சொல்லி முடிவேன். அந்த இரண்டு மாதங்களும் நானும் என் கணவரும் அலைந்த அலைச்சல். ஒரு இடம் கிடைக்கவில்லை. தேடி அலைந்து கடைசியில் ஒரு இடம் பிடித்தோம். அதே போல பல சமயங்களில் பணியாற்றுபவர்களுக்கும் சம்பளம் கூட கொடுக்க முடியாமல் திண்டாடி இருக்கிறேன். அந்தச் சமயத்தில் எல்லாம் என் குடும்பத்தினர் எனக்கு உதவியதை மறக்கவே முடியாது."

"உங்கள் குடும்பத்தினர் வசதியானவர்கள். நீங்கள் நினைத்த போதெல்லாம் உதவி செய்திருக்கிறார்கள். சாதாரணமாக ஒரு பெண்ணிற்கு இந்த அளவு சாதிக்க முடியும் என நினைக்கிறீர்களா?"

"நிச்சயமாக முடியும். மனதிலே பிடிவாதம், சாதித்தே தீர வேண்டும் என்ற பிடிவாதம் இருந்தால் சாதிக்க முடியும். அதே சமயம் எந்தக் காரணத்தைக் கொண்டும் தரத்திலிருந்து இறங்கவே கூடாது. குவாலிட்டியில் 'காம்ப்ரமைஸ்' செய்து கொள்ளவே கூடாது. இவ்விரண்டும் மனோதிடமும் இருந்தால் பெண்களால் தங்களால் நினைத்தது எதையும் சாதிக்க முடியும்!"

"இன்றைக்குப் பள்ளிகள் என்றாலே பெரிய வியாபாரஸ்தலமாகி விட்டது. எக்கச்சக்கமாகப் பணம் இருந்தால்தான் நல்ல பள்ளியில் சேர்க்க முடியும் என்றாகி விட்டதே!"

"எனக்கு மற்றவர்களைப் பற்றித் தெரியாது. எங்கள் பள்ளியைப் பொறுத்தவரை ஒரு வகுப்பிற்கு இருபது மாணவ, மாணவிகளைத்தான் வைத்திருக்கிறேன். அப்போதுதான் ஒவ்வொருவரையும் தனித்தனியாகக் கவனிக்க முடியும். அதே போல சிறந்த ஆசிரியர்கள் இருந்தால்தான் சிறந்த கல்வியினைப் பெற முடியும். அவர்களுக்கு நல்ல சம்பளம் கொடுக்கும் போதுதான் ஆசிரியர்களும் மனச் சோர்வில்லாமல் வேலை செய்வார்கள். அதே போல மாணவ மாணவியர்க்குத் தேவையான அத்தனை உபகரணங்களும், வசதிகளும் செய்து கொடுத்தே ஆகவேண்டும். இத்தனையையும் செலவிடும் போதே சிறந்த தரமான கல்வியை எதிர்பார்க்க முடியும். எனவே அதற்கேற்ற கட்டணத்தைத்தான் நான் மாணவர்களிடம் வசூலிக்கிறேன். இதை என்னுடைய பள்ளிப் பெற்றோர்கள் நன்கு உணர்ந்தே இருக்கிறார்கள். என்னுடன் நல்ல முறையில் அவர்கள் ஒத்துழைக்கவே செய்கிறார்கள். அதனால்தான் என்னால் மேலும் மேலும் பள்ளியை விரிவாக்க முடிகிறது!"

"நிர்வாகத்தில் மட்டுமில்லாமல் பள்ளி மாணவர்களிடையே கூட பிரச்னைகள் ஏற்படும் இல்லையா?"

"நிறைய. சிறு குழந்தைகளிடம் ஏற்படுவது பஸ் மாறி ஏறிவிடுவது. சிறுவர்கள் தெரியாமல் வேறு பஸ்ஸில் ஏறிவிட்டால் அவர்களை மீண்டும் பெற்றோர்களிடம் ஒப்படைக்கும் வரை இருக்கும் டென்ஷன் இருக்கிறதே, பயங்கரம்! அதே போல எட்டு, ஒன்பது,

பத்தாம் வகுப்பு மாணவர்களிடையே நிறைய மன சம்பந்தமான பிரச்னைகள் ஏற்படும். நன்றாகப் படிக்கும் குழந்தைகள் திடீரென்று பாடத்தில் ஆர்வத்தை இழந்து விடுவார்கள். மாணவர்களில் பலர் மிக முரட்டுத்தனமாக நடந்து கொள்வதும் உண்டு. இவை அனைத்திற்கும் இவர்கள் காரணமே இல்லை. பெற்றோர்கள் அல்லது வீட்டுச் சூழ்நிலை காரணமாக இருக்கும்.

அப்படிப்பட்ட ஒரு மாணவனை நாங்கள் வெளியேற்றும் நிலையில், ஒரு பெண்மணி நான் இவனிடம் பேசிப்பார்க்கிறேன் என்றார். அவனிடம் பேசிப்பேசி 'அடலஸன்ட்' வயதுக்கே உரிய பல பிரச்னைகளில் அவன் சிக்கியிருப்பதை உணர்ந்தார். அதற்கு மெதுவாக அறிவுரைகள் சொல்லி அவனை மாற்றினார். பின்னர் அப்பெண்மணியை நான் 'கவுன்சிலிங்'கிற்கு நியமித்தேன். இப்படி மாணவர்களிடையே கூட மிக நுட்பமாகவே நடந்து கொள்ள வேண்டியதாக இருக்கிறது..."

"எந்த நிறுவனமும் ஆரம்பிக்கும் போது ஒரு உத்வேகத்தோடு ஆரம்பிப்பார்கள். பிறகு வளர்ந்த பிறகு நிறுவியவர்களிடையே கூட பிரச்னைகள் வந்து விடுவது உண்டு இல்லையா?"

"அது உண்மைதான். பெண்கள் இதைப் பற்றியெல்லாம் ஒரு தொலைநோக்குப் பார்வையோடு சிந்தித்துச் செயல்பட வேண்டும். என்னைப் பொறுத்தவரை முதலிலிருந்தே நான் தனியாகத்தான் இயங்கி வருகிறேன். தனியாளாக எதையும் முடிவு செய்வதால் வேகமாகச் செயல்பட முடிகிறது. அதனால் சில சமயம் தவறும் செய்கிறேன், இல்லையென்று சொல்லவில்லை. பிறகு நானே திருத்திக் கொண்டு விடுவேன்."

"உங்கள் பள்ளியைப் பொறுத்தவரை நீங்கள் வலியுறுத்தும் விஷயங்கள் வேறு என்ன?"

"இன்று சமுதாயத்தில் பெரிய குடும்பங்கள் போய், சிறிய குடும்பம் வர ஆரம்பித்து விட்டன. ஒரு குழந்தை என வரும் போது அது விட்டுக் கொடுப்பதே இல்லை. எல்லாம் எனக்கே எனும் மனப்பான்மையோடு வளர்கிறது. எனவே இந்த மனோ நிலையை மாற்றி பகிர்ந்து கொள்ளும் குணத்தைப் பள்ளிகளில் வளர்க்க வேண்டும். இன்று நாங்கள் பள்ளியை வளர்த்துவிட்டோம். சொந்தக் கட்டிடத்தில் இயங்குகிறோம். நாங்கள் இருக்கும் மலையடிவாரத்தில் பொருளாதார நிலையில் பிற்பட்ட குடும்பங்கள் வாழ்கின்றன. அவர்களின் பிள்ளைகளுக்காகவே ஒரு பள்ளியையும் ஆரம்பித்தோம். அந்தக் குழந்தைகளுக்காக எங்கள் பள்ளி மாணவர்கள் எவ்வளவு உதவி செய்கிறார்கள் தெரியுமா? அவர்களின் ஒரு வேளை பாலுக்காக உதவி கேட்ட போது பெரும் வரவேற்பு இருந்தது. ஒவ்வொரு குழந்தையின் பிறந்த நாளும் அந்த மாணவர்களோடு கொண்டாடப்படுகிறது. கல்வி நிலையமே எதிர்கால சமுதாயத்தை நல்ல முறையில் உருவாக்கும் என்பதில் சந்தேகமே இல்லை."

இன்றைய நவீன பெண்கள் ஏதோ ஒரு வேலைக்குப் போவது என்றில்லாமல், எதையேனும் சாதிப்பது எனப் புறப்பட்டு இருக்கிறார்கள். அந்த வகையில் இன்று வெற்றிக்கொடி நாட்டியிருக்கும் மீனா சேதுவை வாழ்த்துவோம்.

— 'புவன்'

**குறைப் பிரசவமான குழந்தையை 'இன்க்யுபேட்டரி'ல் வைக்காமல் மருத்துவ ரீதியாக முடியும் போதெல்லாம் தாயின் அரவணைப்பில் படுக்க வைத்திருப்பது நல்லது என சமீப ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இதைக் 'கங்காரு பாதுகாப்பு' என்கிறார்கள். கருப்பையில் அனுபவித்த அதே ஸ்பரிசம், கேட்ட அதே சிறு ஒலிகளை அச்சிசுவால் உணர முடிவதால், அதன் ஆரோக்கிய வளர்ச்சிக்கு அது பெரிதும் உதவுகிறதாம்.**

**- அ. ஷண்முகசுந்தரம்**



# மகாநிதி

**21%**
**வட்டி**

ஆழ்வார்பெட் பெனிஃபிட் ஃபண்ட் - **3 வருட டெபாசிட்டுகளுக்கு 21% வரை வட்டி** வழங்குகிறது. அந்த வட்டியும் மாதம்தோறும் அளிக்கப்படுகிறது. இதை நிலையானதொரு வருமானம் போலவே நீங்கள் பெற்று மகிழலாம். ABFL 10,000-க்கு மேற்பட்ட உறுப்பினர்களுடன், நற்பெயரும் நன்மதிப்பும் பெற்ற நல்லதொரு நிதி நிறுவனம் ஆகும். இது மிக மகத்தானதொரு வளர்ச்சியைக் கண்டிருக்கிறது - டெபாசிட்டுகளில் 18 மடங்கு உயர்வு... மேலும் மூலதனம் மற்றும் ரிசர்வுகளில் 280% உயர்வு... அதுவும் மிகக் குறுகிய காலத்தில்! வீட்டு வசதிக் கடன்கள், நகைக் கடன்கள், பிக்சட் டெபாசிட், இரட்டைப் பயன் (Double Benefit) டெபாசிட் மற்றும் பென்ஷன் தாரர்களின் பெட் டெபாசிட் திட்டங்கள் போன்ற பலப்பல திட்டங்களை இந்த நிறுவனம் அளிக்கிறது.

## வீடுகளின் பேரில்
## க ட ன்

- சென்னை நகர எல்லைக்குள் உள்ள ஃபிளாட்டுகள் / வீடுகளுக்கு
- பூர்த்தி செய்ய வேண்டிய படிவங்கள் மிகக் குறைவு
- விரைவாகப் பரிசீலனை செய்து வழங்கப்படும்
- கடனைத் திருப்பிச் செலுத்த இணக்கமான திட்டம்




நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்

**ஆழ்வார்பெட் பெனிஃபிட் ஃபண்ட் லிமிடெட்**

கூட்டாண்மை அலுவலகம் : 43-B, சி.பி. ராமசாமி ரோடு
ஆழ்வார்பேட்டை, சென்னை 600 018
தொலைபேசி : 499 4809
உறுப்பினர்களுக்கு மட்டும்

insight: 4197

கிளைகள் : ★ அண்ணா நகர் ★ அடையாறு ★ அசோக் நகர் ★ தி. நகர் ★ நங்கநல்லூர் ★ தாம்பரம் ★ ஜார்ஜ் டவுன் ★ பாண்டிச்சேரி ★ கோயம்புத்தூர்

எனக்குப் பயமாக இருந்தது. கருணாவிடம் இரண்டாம்தாரமாக ஒரு வாய் காபி கேட்க வேண்டும்.

"மிஸ் யூனிவர்ஸ்னு சொல்றானேயொழிய, நேத்தி நீ லேஸா மேக்கப் பண்ணிண்டு ரிசப்ஷனுக்கு வந்தியே... சுஷ்மிதாவெல்லாம் எந்த மூலைக்கு?" என்றேன் சமையலறையை நோட்டமிட்டவாறே. கருணாவிடமிருந்து பதிலில்லை.

"விஸ்வதாரா ஜவுளி ஸ்டோர்ஸ்லே நேத்தி ஷோகேஸ்லே பொம்மைக்கு ஒரு புடவை கட்டி வைச்சிருந்தான். கடனாவது சொல்லிட்டு வாங்கிட்டு வந்துடலாம்னு நினைச்சேன்... நீ கட்டிக்கிட்டா அசத்தலாயிருக்கும்."

கருணா மசிவதாயில்லை.

"இதோ பாருங்க நீங்க எதுக்கு இப்படி அடி போடறீங்கன்னு எனக்குத் தெரியும்... ரெண்டாம் தரம் காபி கிடையாது... இன்னிக்கு தேதி முப்பது. நாளையோட மாசம் முடியப் போறது... அடுத்த மாதம் சுத்தமா காப்பிப் பொடி வாங்கப் போறதில்லே... ஞாபகம் வைச்சுக்கங்க ஆமாம்."

இப்படி ஒரு குண்டைத் தூக்கிப் போடுவாளென்று எதிர்பார்க்காத நான் ஸ்தம்பித்து நின்றேன்.

"என்னடி காபியை நிறுத்தப் போறயா... விளையாடறயா?" என்றேன்.

"மளிகைக் கடைக்குப் போய் எதையாவது வாங்கியிருந்தாதானே உங்களுக்குத் தெரியப் போறது... முழுசா ஒரு கிலோ இருநூறு ரூபாய் ஆயிடுத்து... காபி குடிச்சி கட்டுப்படியாகாது" கண்டிப்பாகப் பேசினாள்.



"காபி சாப்பிடலைன்னா உயிரே போயிடுமே" என்றேன் பரிதாபமாக.

"குடிச்சாத்தான் உடம்பு குட்டிச்சுவராகும்... அதுலே காஃபின்னு நச்சு இருக்கு தெரிஞ்சுக்கங்க."

"நாசமா போச்சு, நாப்பது வருஷமா ஒன்னும் பண்ணாத நச்சு இப்ப என்ன பண்ணுமாம்?" சற்று ஓங்கிப் பேசினேன்.

"பாத்தீங்களா கத்தறீங்க... எல்லாம் ரத்த அழுத்தத்தால வர்றகோளாறு... அதுக்கு இந்த காபிதான் காரணம்."

"அடிப்பாவி பி.பிக்கும் காபிக்கும் முடிச்சு போடறயே காப்பியை நிறுத்திட்டா எனக்குப் பைத்தியமே பிடிச்சிடும் கருணா" இப்பொழுது குழைந்தேன்.

"இப்ப மட்டும் என்னவாம்... தத்துபித்துன்னுதான் உளறிப்

# ‘காபி’யக் கலவை

பேசறீங்க... ராத்திரி தூக்கத்திலே கன்னாபின்னான்னு பேத்தறீங்க. இந்தக் காபியைத் தினம் நாலைஞ்சு தரம் குடிச்சா தலைக்கு மேலே பித்தம்தான் ஏறும் ஆமாம்" துளி கூட ஈவு இரக்கமின்றி பேசி னாள். "தெய்வத்தின் குரல்லே காபியே கூடாதுன்னு பெரியவா சொல்லி யிருக்கா தெரிஞ்சுக்கங்க... கொஞ்ச நஞ்சமாவா விக்குது... கனையா இரு நூறு ரூபாய்..."

"அதுக்குன்னு காபியை நிறுத்தணுமா சொல்லு.... ஒண்ணுமில்லே பத்துத் தேய்க்கிற பவுடர், கட்டி இதெல்லாம் மாசம் இருபது ரூபாய்க்கு வாங்கறே... காபியை மட்டும் கட் பண்ணி என் உயிரை வாங்க நினைக்கறயே ஞாயமா சுகு" கெஞ்சினேன்.



"காபி கொட்டை விலை மட்டும்தானா ஏறியிருக்கு? சர்க் கரைக் கூடத்தான் யானை விலை விக்குது... அதனாலே தான் 'காபி கட்'டுன்னு தீர் மானம் செஞ்சுட்டேன்."

"வேண்டாம் சுகு.... இது விஷப் பரீட்சை... எனக்கு மட்டு மில்லே உனக்கும்தான் காபியை விட்டா மண்டை வெடிச்சுடும்... ஒரு நாள் பால்காரன் லேட்டா வந்தான்னா நீ என்ன பாடுபடுவேன்னு எனக்குத் தெரியும். காபி உள்ளே இறங்கற வரைக்கும் என் மேலேயும் குழந்தைங்க மேலேயும் 'வள்வள்'னு விழுவியே காலையிலே டிபனோ, சாப்பாடோ அதுக்கு முன்னாடி அரை கப், முக்கால் கப்ன்னு காபி கலந்து 'கப் கப்'னு விழுங்கினாத்தானே உனக்கு வண்டி ஓடும்... வேண் டாம் யோசனை பண்ணு" மறுபரிசீலனைக்கு மனு போட்டேன்.

"நான் இதையெல்லாம் யோசனை பண்ணிதான் பக்கத்து வீட்டு பாட்டியைக் கேட்டு ஒரு சத்து மாவு அரைக்கப் போறேன். கோதுமை, கம்பு, சோளம், மக்காச்சோளம், வேர்க்கடலை, பொட்டுக்கடலை இன் னும் நாலைஞ்சு தானியம் போட்டு அரைச்சி..." அவள் முடிப்பதற்குள் குறுக்கிட்டு,

"என்னடி ஏதோ மாட்டுத் தீவனம் மாதிரி 'ஃபார்முலா' சொல்றே.

## அகிலா கார்த்திகேயன்



## திருமண விருந்திற்கு ஓர் ஆலோசனை :

பொதுவாக திருமண விருந்தென்றால், இலை பூராவும் பல வித அயிட்டங்களை நிரப்பி பரிமாற வேண்டும் என பெண் வீட்டாரும், பிள்ளை வீட்டாரும் விரும்புகிறார்கள். அதுதான் சிறந்தது என்றும், அதில்தான் பெருமை என்றும் நினைக்கிறார்கள். அதில் எத்தனை பண்டங்கள் சேதமாகி, குப்பைத் தொட்டிக்குப் போகிறது என்பதை நினைத்தே பார்ப்பதில்லை. அப்படியே நினைத்தாலும் அதை பொருட்படுத்துவதேயில்லை. அதற்காக ஒரு சிறு ஆலோசனை.

விருந்திற்கு, இலையில், மைசூர் பாகு, ஜாங்கிரி, லட்டு, கேக், பாதுஷா, என ஏதாவது ஒரு ஸ்வீட் பரிமாறப்படும். இது போன்று வைக்கும் ஸ்வீட்டை இலையில் வைக்காமல் ஒரு பாலிதின் கவரில் போட்டு ஒட்டி இலையில் வைக்கலாம். அதே போல் கார வகையில் மிக்ஸர், மெதுபகோடா, வடை என ஏதாவது ஒன்று பரிமாறப்படுகிறது. அதையும் இலையில் வைக்காமல், ஒரு பாலிதின் கவரில் போட்டு, ஒட்டி பின்னர் இலையில் வைக்கலாம். அல்லது ஸ்வீட்+காரம் ஆக இரண்டு கவரையும் ஒரு க்ளாஸ் பேப்பர் கவரில் போட்டு, அத்துடன் ஒரு வாழைப்பழத்தையும் போட்டு பின் அடித்து இலையில் வைத்து விடலாம்.

விருப்பம் உடையவர்கள், சாப்பிட முடிகிறவர்கள் சாப்பாட்டுடன் இந்த ஸ்வீட்+காரம்+பழம் கவரை பிரித்துச் சாப்பிட்டுக் கொள்வார்கள். சாப்பிட முடியாதவர்கள் பாக்கெட்டை கையில் எடுத்துக் கொள்வார்கள். வீட்டிற்குச் சென்று கூட சாப்பிடலாம். மேலும் வெளியூரிலிருந்து திருமணத்திற்கு வந்து விட்டு, அவசர, அவசரமாக விருந்தை முடித்துக் கொண்டு ரயில், பஸ் பிடிக்க ஓடுபவர்கள், ரயில், பஸ்ஸில் கூட இந்தப் பாக்கெட்டை சாவகாசமாக பிரித்துச் சாப்பிட்டுக் கொள்வார்கள்.

- ஆர். பாலா

பயமா இருக்கு" என்றேன்.

"இதோ பாருங்கோ உங்களுக்கும் வயசு நாற்பதுக்கு மேலே ஆறது. நாக்கை கட்டுங்க. அதுதான் நல்லது காபி இல்லேன்னா உலகமே இருண்டு போயிடுமா என்ன? நாளையிலிருந்து சத்துமாவு கஞ்சிதான் ஆமாம்" உறுதியாக காபி விவகாரத்தை முடித்தாள் சுகுணா.

அடுத்த நாள் காலை பல் தேய்த்து முடித்தவன் டேபிள் மேல் சுகுணா கொண்டு வைத்த பண்டத்தை பரிதாபமாக பார்வை விட்டேன். டம்ளரின் விளிம்பில் வடிந்து கொண்டிருந்த திரவம் என்னைப் பார்த்து அசடு வழிந்தது. செமி சாலிடா, செமி லிக்விடா என்று இனம் பிரிக்க முடியாத இரண்டுங்கெட்ட நிலையிலிருந்த அந்த வஸ்து டம்ளரிலிருந்து டபராவிற்குள் விழ அடம் பிடித்தது.

"சுகுணா... இது உனக்கே நல்லாயிருக்கா?" ஏக்கத்தோடு வினவினேன்.

"இதுக்கென்ன குறைச்சல் அத்தனையும் ஊட்டச்சத்து. சத்தம் போடாம குடியுங்கோ."

உண்மையிலேயே அந்தப் பானத்தை பருகியதும் சப்தம் போட முடியவில்லை. அத்தனை கொழகொழப்பு. வாயிலிருந்து தொண்டைக்குள் செலுத்த ஒரு தேர்ந்த காளையின் லாகவத்தில் நாக்கைச் சுழற்றிப் பிரயத்தனப்பட வேண்டியிருந்ததில் பேச நா எழவில்லை. முதல் சந்திப்பிலேயே நாக்கும் கஞ்சியும் அத்தனை ஒட்டி உறவாட, உடம்பின் நரம்பு மண்டலங்களோ 'பந்த்' அறிவித்தன.

மூளை கோட்டையின் முன் மறியல் செய்து உணர்ச்சிகளை செயலிழக்கச் செய்த பந்தினால் மண்டையில் கலவரம் ஏற்பட்டது. காபி எனும் சக்திமிக்க காவல் துறை உள்ளே நுழைய முடியாத நிலையில், மந்தமான ஆமையாய் நகர்ந்த கஞ்சி செய்வதறியாமல் சிறு குடலுக்குள் கம்மென்று கம் போல தங்கி விட்டது.

நான் மகாமந்தமானேன். அடித்து பிடித்துக் கொண்டு அவசரமாய் ஆபீஸ் ஓடினேன். போன வேகத்தில் பியூன் செல்வராஜிடம் ஒரே மூச்சில் மூன்று கான்டீன் காபி வாங்கி வரச் சொல்லி பருகினேன். உயிர் வந்தது. பந்த் கைவிடப்பட்டு நரம்பு நாட்டில் சகஜ நிலை வந்தது.

சாயங்காலம் முன் எச்சரிக்கையாக அடையாரில் இறங்கி காபி குடித்த பிறகே வீடு சென்றேன்.

முகத்தை கழுவிக் கொண்டு வந்தவன்

முன் சுகுணா ஏதோ உப்புமாவைப் போல ஒரு டிபனை கொண்டு வைத்தாள். என்ன இழவோ... டீ.வியில் 'சாப்பிட வாங்க' பார்த்து விட்டு கண்டதையும் பண்ணி தின்னச் சொல்வாள்... அலுத்துக் கொண்டவன் ஆனந்தத்தால் துள்ளினேன். டிபன் தட்டிற்குப் பக்கத்தில் மணமும், குணமும், நுங்கும், நுரையுமாக கமகமவென்று டபரா டம்ளரில் காபி! அடி சுகுணா உயிர் வந்ததடி!

"சுகுணா என்னதிது?" என்றேன் ஆச்சர்யமாக.

"ஏன் காபிதான்" என்றாள் அலட்சியமாக.

"ஓகோ... கிலோ இருநூறு ரூபாய்னு விக்குதே அதுவா?" என்றேன் விடாமல்.

"ரூபாய் என்னங்க பெரிசு... நேத்து உங்க அம்மாவுக்குக் கூட நூறு ரூபாய் அனுப்பினீங்க... அல்பம் இருநூறு ரூபாயிலே குடி முழுகி போயிடுமாக்கும்" முகத்தை ஒரு வெட்டி வெட்டி பேசினாள்.

"காபிலே நச்சு கலந்திருக்குன்னு சொன்னியே."

"ஆமாம் வயசு நாப்பது ஆச்சி... இத்தனை நாளா காப்பாத்தாத உடம்பை போற காலத்திலேதான் பொத்தி பொத்தி காப்பாத்தனுமாக்கும்" கில்லாடித்தனமாக எதிர்வாதம் செய்தாள்.

"இந்த ரத்த அழுத்தம், பித்தம் இதெல்லாம்?"

"ஆமாம் காலையிலே பார்த்தேனே உங்களை... ஒரு டம்ளர் காபி குடிக்கலையாக்கும் பைத்தியமா திரிஞ்சீங்க.. என் மேலே ரத்த அழுத்தம் வந்தாப்பல எரிஞ்சி எரிஞ்சி விழுந்தீங்க... காபி சாப்டா அழுத்தமாவது பித்தமாவது எல்லாம் சரியாப் போயிடும்... இதோ பாருங்க வளவளன்னு நான் பேச மாட்டேன்... காபி இல்லேன்னா நமக்குச் சரிப்படாது அதனாலேதான் மத்யானம் 'விஜயா காபி'க்குப் போய் அரை கிலோ கமகமன்னு அரைச்சிண்டு வந்து வைச்சிட்டேன்... வாயைத் திறக்காம குடியுங்க" ஆர்டர் போட்டாள்.

"அப்போ அந்த சத்துமாவு?"

"ஆமாம் மனுஷன் குடிப்பானா அதை... அந்தக் கண்றாவியை உப்புமாவா கிளறி உங்க முன்னால வைச்சிருக்கேன் பாருங்க" என்றாள்.

எனக்கு ஒருபுறம் ஆச்சரியமாகவும், மறுபுறம் ஆனந்தமாகவும் இருந்தது. பாவம் சுகுணாவிற்கே காபியை விட்டால் முடியவில்லை போலும் எனக்கு முன்பே தெரியும்.

எப்படியோ விடுதலை கிடைத்ததே என்று நினைத்தபடி தேன் ஒழுகும் காபியைப் பருகினேன்.

பருகி முடித்தவன் கையில் ஒரு போஸ்ட் கார்டை தந்து விட்டு பவ்யமாக நின்றாள் சுகுணா. படித்தவுடன் புகிரென்றது... 'பாவி சுகுணா... புரிந்து விட்டதடி உன் மாற்றத்தின் காரணம்' என்று புழுங்கினேன்.

ஒன்றுமில்லை. அவள் அப்பாவும் அம்மாவும் நாளைக்கு ஊரிலிருந்து வருவதாகக் கடிதம் சொன்னது. காபி வெறியர்களான அவர்களின் வருகையை முன்னிட்டே சுகுணாவின் இந்தத் தலைகீழ் மாற்றமென உங்களுக்கே புரிந்திருக்குமே!



ரீஃபைன்ட் ஆயில் வரும் பாலிதீன் பைகளை
கிரைண்டர் கவர் தைத்துக் கொள்ளலாம் என
ஒரு சகோதரி கூறி இருந்தார்.
அதே போல -
தேவையான நீள அகலங்களில் பைகளை சேர்த்து
விரிப்பாக தைத்துக் கொண்டால், வற்றல் வடகம் இட
மிக சௌகரியமாக இருக்கும்.
(பைகளின் அச்சிட்ட பக்கம், அடிப்பக்கமாக
வரும்படி தைத்துக் கொள்ள வேண்டும்).
அதே போல -
தேவையான அளவு நீள அகலத்தில் பைகளாக தைத்து
பிடி வைத்துக் கொண்டால், ரேஷன், சாமான்கள் வாங்க
பயன்படும் (அச்சிட்ட பகுதி பையின் உட்புறமாக
வரும்படி தைக்க வேண்டும்,
அதே போல -
தேவையான நீள அகலத்தில் சேர்த்து தைத்து சாமான் வைக்கும்
அலமாரி பீரோ தட்டுகளில் விரிக்க உபயோகிக்கலாம்.
பார்க்கவும் அழகாக இருக்கும். அவ்வப்போது சோப்பு நீரில்
அலசி சுலபமாக சுத்தம் செய்து உபயோகிக்கலாம்.
நீண்டநாள் வரும்.
- எஸ். பட்டம்மா.

# தண்ணீரால் ஏற்பட்டுள்ள உங்களது பிரச்சினை கீழ்குறிப்பிட்டவைகளோ அல்லது மற்றவைகளோ...



1. உங்கள் உடல் நலம் தண்ணீரால் ஏற்படும் நோய்களால் அடிக்கடி பாதிக்கப்படுகிறது
2. மிகவும் நல்ல சோப்பை உபயோகித்தாலும் தேவையான நுரையும் வருவதில்லை. சருமமும் சுத்தமாவதில்லை.
3. கெய்சரிலும் வாஷிங் மெஷினிலும் உப்புக்கறை படிந்து இவற்றின் உள் பாகங்கள் நாசமாகிவிடுகின்றன
4. எவ்வளவு நல்ல சுத்திகரிக்கும் பவுடரையோ திரவங்களையோ உபயோகித்தாலும் தரைகளிலிருந்து பழுப்பு நிறைந்த அழுக்குகளையோ, கறைகளையோ நீக்க முடிவதில்லை
5. உங்களது கவனத்தையும் மீறி உங்கள் தலைமுடி உதிர்கின்றது
6. நீங்கள் உபயோகிக்கும் பாத்திரங்கள் எவ்வளவு சுத்தப்படுத்தியும் பளபளப்பாவதில்லை.
7. உங்களது துணிகள் துவைத்த பின் பழுப்பாகிவிடுகின்றன. தண்ணீரும் மஞ்சள் கறையுள்ளது.
8. தண்ணீர் உப்புகரிப்பதால் அதை குடிப்பதற்கோ சமைக்கவோ பயன்படுத்த முடிவதில்லை.
9. தேவைக்கு வேண்டிய அளவு சுத்தப்படுத்தப்பட்ட தண்ணீர் கிடைப்பதில்லை. உடல் நலம் குன்றி தேக நிலையில் எதிர்பார்க்குமளவிற்கு தண்ணீர் சுத்தமாயிருப்பதில்லை.
10. எவ்வளவு கவனமாக தண்ணீரை உபயோகப்படுத்தினாலும் அளவாக அதை பயன்படுத்த முடிவதில்லை

## ...எங்களால் அவற்றை முழுமையாக தீர்க்க முடியும்

டெல்ட்டா தண்ணீர் ஆய்வாளரை அழைத்து உங்கள் பிரச்சினையை அவரிடம் சொல்லுங்கள், மற்ற விஷயங்களை அவர் பார்த்துக் கொள்வார். மிகச்சிறந்த மிகச் சிக்கனமான முடிவை அவர் சொல்வார் உங்கள் தேவைக்கேற்ற சாதனங்களை சிபாரிசு செய்வார்.

**உங்களது தண்ணீர் பிரச்சினையை தரம் பிரித்து தீர்வு சொல்ல எங்களை அணுகுங்கள்**

விற்பனை & மண்டல அலுவலகங்கள்: திருச்சி 17-A, முதலாவது மெயின் ரோடு, 4-வது குறுக்கின் சந்திப்பு ஸ்ரீநிவாசநகர் (தெற்கு).



### டெல்ட்டா தண்ணீரை தூய்மையாக்கும் சாதனம்

பேத்தாஜெனிக் பாக்டீரியாவுக்கு எதிராக, உங்களுக்கு முழுமையான பாதுகாப்பு தரும் இதன் உள்ளடங்கிய ஒரு கட்டுப்பாட்டு அமைப்பு. முற்றிலும் தூய தண்ணீர் மட்டுமே வெளிவருவதை நிச்சயப்படுத்துகிறது.



### டெல்ட்டா . தண்ணீரைத் மென்மையாக்கும் சாதனம்

கடின நீரை.. மென்மையாக்குகிறது கடின நீரில் சோப் நுரை தராது. சருமம் பொலிவிழந்து போகும். சருமத்தில் எரிச்சல், அரிப்பு போன்றவையும் ஏற்படும். உங்கள் வாட்டர்ஹீட்டர் மற்றும் வாஷிங் மெஷினின் உள்பாகங்கள் அரிக்கப்பட்டு நாசமாகிவிடும். இதனால் சில சமயம் ஷார்ட் சர்க்யூட் உண்டாகி கருவிகள் தீக்கு இரையாகலாம். டெல்ட்டா மென்மையாக்கும் கருவியை பயன்படுத்துவதன் மூலம் இந்த பிரச்சினைகளை தீர்க்க முடியும்.



### டெல்ட்டா இரும்பை நீக்கும் சாதனம்

சலவைக்குப் பின் துணிகள் மஞ்சளாக மாறிவிடுகின்றனவா? அதற்குக் காரணம் தண்ணீரில் அளவுக்கு அதிகமாக இருக்கும் இரும்புதான்... இரும்பு கலந்த தண்ணீரை உட்கொண்டால் மனித உடலில் உள்ள ரசாயனப் பொருள்களின் சமநிலை பாதிக்கப்பட்டு, ஹேமிசிடரோசிஸ் நிலைக்குக் கொண்டு போய்விடும்.

### டெல்ட்டா ரிவர்ஸ் ஆஸ்மாசிஸ் யூனிட்

இது கிணறு மற்றும் போர்வெல் கிணற்றுத் தண்ணீரில் உள்ள உப்புத் தன்மையை நீக்கும் சாதனம். இந்தக் கருவி, தண்ணீரில் உள்ள உப்புத் தன்மையை நீக்கி, அதைக் குடிப்பதற்கும் சமைப்பதற்கும் ஏற்றதாக ஆக்குகிறது.

### டெல்ட்டா ஓஸோனேட்டர்

தண்ணீரைத் தூய்மையாக்கும் சக்தி மிக்க சாதனம். இந்த சாதனம், தண்ணீரில் உள்ள கிருமிகளை முழுவதுமாக ஒழித்து விடுகின்றது. இதனால் உடல் நலம் குன்றி குணமடைந்துவரும் நோயாளிகளை, குறுகிய காலத்தில் ஆரோக்கிய நிலைக்கு கொண்டுவர முடிகிறது.

உங்களது தேவைகளை மேற்குறிப்பிட்ட சாதனங்களால் பூர்த்தி செய்ய முடியாதின், உங்கள் தேவைக்கேற்ப சாதனங்களை எங்களால் வடிவமைத்துக் கொடுக்க முடியும்.




உங்களது உடல் ஆரோக்கியத்தின் மீது உண்மையிலே உங்களுக்கு அக்கறை இருந்தால்...

மேலே காட்டியுள்ள பட்டியலைப் பார்த்த பின், உங்கள் பிரச்சினையை கீழே உள்ள கட்டங்களில் ✓ குறியிட்டுக் காட்டுங்கள்.

☐ 1 ☐ 2 ☐ 3 ☐ 4 ☐ 5 ☐ 6 ☐ 7 ☐ 8 ☐ 9 ☐ 10 வேறு ஏதாவது ................

எங்களது தண்ணீர் பிரச்சினைக்குத் தீர்வு சொல்ல டெல்ட்டா தண்ணீர் தர ஆய்வாளரை அனுப்பக் கோருகிறேன்.

உங்கள் பெயர் ........................................

முகவரி ........................................

........................................ பின் கோடு .................... தொலைபேசி ....................

அனுப்ப வேண்டிய முகவரி :



எஸ் அண்டு எஸ் இண்டஸ்ட்ரீஸ் அண்ட் எண்டர்பிரைசஸ் லிமிடெட்,
A-3, முதல் மெயின் ரோடு, அம்பத்தூர் தொழிற்பேட்டை, சென்னை - 600 058.
தொலைபேசி : 652689/ 6258112/6258214 டெலக்ஸ்: 041-22153 SSIE IN ஃபேக்ஸ் : 91-44-6257996
எங்கள் மற்ற அலுவலகங்கள்: கோயம்புத்தூர் : 32609, திருச்சி : 32815, பெங்களூர் : 3338212, விஜயவாடா : 66983

திருச்சி-620017. தொலைபேசி: 0431 32815 ● கோயம்புத்தூர்: 123, படேல் ரோடு, ராம்நகர், கோயம்புத்தூர். தொலைபேசி: 0422 3209.

FOUNTAINHEAD-1162-94

ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். இரண்டு தேர்வுகளிலும் வெற்றி பெற்றார்!

# அபார சாதனைக்கு அமுதா

**சமீபகாலமாக தமிழக மாணவர்கள் ஐ.ஏ.எஸ். ஐ.பி.எஸ் தேர்வுகளில் தேர்ச்சி பெறுவதில்லை என்ற பெரும் குறையை அகற்றி, இப்போது மதுரை மாணவி குமாரி. அமுதா ஐ.பி.எஸ், ஐ.ஏ.எஸ் இரண்டு தேர்வு களிலும் வெற்றி பெற்று பட்டம் பெற்று சாதனை புரிந் துள்ளார். இவர் சிறந்த விளையாட்டு வீராங்கனை கூட. மதுரை ஆத்திகுளத்தில் உள்ள அமுதாவின் இல்லத்தில் பெற்றோர்... பாட்டி உடன் இருக்க பேசினோம்.**

**ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ் இரண்டு பட்டங்களையும் பெற்றது மகத்தான சாதனைதானே?**

"உண்மையைக் கூற வேண்டும் என்றால் எழுதப் படிக்கக் கூட தெரியாத என் தந்தையின் பெற்றோர் தந்தையைப் படிக்க வைத்தது சாதனை. என்னைப் பட்டங்கள் பல பெற்று புகழ் பெற வைத்தே தீருவேன் என்று லட்சியத்தோடு வசதியே இல்லாத என் தந்தை மிகவும் கஷ்டப்பட்டு என்னை ஐ.ஏ.எஸ், ஐ.பி.எஸ். பட்டதாரி ஆக்கியது மாபெரும் சாதனை. இதில் என் சாதனை ஏதும் இல்லை. படிக்க வசதி... வாய்ப்புகள் ஏற் படுத்திக் கொடுத்தார்கள். அதை முழுமையாக உணர்ந்து படித்தேன், அவ்வளவுதான். நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணாக இருந்தாலும் மனது வைத்தால் இஷ்டப்பட்டு லட்சியத்தோடு படித்தால் நிச்சயம் பட்டங்களைப் பெற முடியும் என்பதைச் சாதித்திருக் கிறேன், அவ்வளவுதான்!"

**நீங்கள் படித்த விவரங்கள்....**

"மதுரை கேந்திரிய வித்யாலயாவில் முதல் வகுப்பு முதல் பிளஸ்டு வரை படித்தேன். அதன் பிறகு மதுரை விவசாய கல்லூரியில் பி.எஸ்ஸி அக்ரிகல்சர் படித்து முதல் ரேங்கில் பட்டம் பெற்றேன். 'தங்கப் பதக்கம்' கிடைத்தது. 1992 ஆண்டில் ஐ.பி.எஸ் எழுதினேன். 1993 ஆண்டில் பட்டம் கிடைத்தது. 1993 ஜூனில் ஐ.ஏ.எஸ் எழுதினேன். 1994 ஜூனில் நான் பாஸ் செய்த ரிசல்ட் வந்திருக்கிறது. அதில் சிறப்பாக தேர்ச்சி பெற்ற நூற்றி ஐம்பது பேர்களில் நானும் ஒருத்தி என்ற பெருமை கிடைத்திருக்கிறது."

**மிகவும் கடினமான ஐ.பி.எஸ்., ஐ.ஏ.எஸ். இரண்டி லேயுமே தேர்ச்சி பெற்றிருக்கிறீர்கள்?**

"படிப்பைத் தவிர வேறு விஷயங்களில் கவனம் செலுத்தாமல் அது ஒன்றே குறிக்கோளாகப் படித்தேன். கடினம் என்பது மனதைப் பொறுத்ததே. எதையும் படித்து விடலாம், பட்டம் பெற்று விடலாம் என்ற அசைக்க முடியாத நம்பிக்கையுடன் படித்தேன். ஐ.பி.எஸ். தேர்விற்கு என் சகோதரர் பல்வேறு புஸ்தகங்களை வாங்கித் தந்து உதவினார். இரவு தூங்கக் கூடாது. கண் முழித்துப் படிக்க வேண்டும் என்றெல்லாம் இல்லாமல் கவனத்துடன் ஈடுபாடுடன் படித்தேன். ஐ.ஏ.எஸ். பரிட்சையில் 'ஜெனரல் சர்வீஸ்' என்று முக்கியமான பேப்பர் உண்டு. சயின்ஸ், ஹிஸ்டரி, ஜியாகரபி, எக்னா மிக்ஸ், இந்தியன் பொலிடிக்ஸ் எல்லாமே உண்டு. அதற்கு டெல்லியில் கோச்சிங் கிளாஸ் உண்டு. என்



தந்தையுடன் டெல்லி சென்று இரண்டு மாதம் தங்கி அந்த விசேஷ பயிற்சி வகுப்பில் பங்கு பெற்றுத் திரும்பினேன்."

**ஐ.ஏ.எஸ். பரிட்சையில் வெற்றி பெற என்ன தகுதிகள் இருக்க வேண்டும்?**

"படிக்கும் ஆர்வம் மிக முக்கியமான தகுதி. We must know something about everything. எல்லா விஷயங்களையும் பற்றியும் கொஞ்சமாவது தெரிந்திருக்க வேண்டும். பொது அறிவு மிக முக்கியமான தகுதி. பார்வைக்குக் கம்பீரமாகக் கேட்கும் கேள்விகளுக்குத் தயங்காமல் பதில் சொல்லத் தெரிந்திருக்க வேண்டும். எந்த விஷயத்திலும் மேலோட்டமான பார்வை கூடாது. தீர்க்கமான ஆழ்ந்த நோக்கு அவசியம். விருப்பு வெறுப்பு இல்லாத சமநிலை அணுகு முறை அறிந்திருத்தல் அவசியம்."

**விளையாட்டுத் துறையில் உங்கள் சாதனைகள் பற்றி....**

"நான் பள்ளிக்கூடத்தில் படிக்கும் போது பத்து வயது முதலே பல்வேறு விளையாட்டுகளில் பங்கு பெற்று முதல் பரிசு, பதக்கம், கோப்பைகள் பெற்றுள்ளேன். செஸ், பாட்மிட்டன், கிரிக்கெட், கபடி என ஒன்றையும் விட்டு வைத்ததில்லை. காரணம் சாரணர் இயக்கத் தலைவியாக, பள்ளி மாணவர் சங்கத் தலைவியாக என நிறைய.... முன்பு குடியரசுத் தலைவர் ஜைல் சிங்கிடம் விருதும் பெற்றிருக்கிறேன். எங்கள் பள்ளி மாணவிகள் குழுவுடன் இமயமலையில் 12 ஆயிரம் அடி உயரம் சென்று காண்பித்துப் பாராட்டும், பரிசும் கிடைத்துள்ளது."

**ஐ.பி.எஸ்., ஐ.ஏ.எஸ். இரண்டு பட்டமும் பெற்று விட்டீர்கள். ஆனால் எந்தத்**





**துறையில் செயல்படப் போகிறீர்கள்?**

"எனக்குச் சமூக சேவை மீதுதான் மிகுந்த ஆர்வம் இருக்கிறது. ஐ.ஏ.எஸ் கலெக்டராக மக்களுக்குக் குறிப்பாக ஏழை எளியவர்களுக்கு உதவியாக செயல்புரிய விரும்புகிறேன். கனிவான ஆனால் கண்டிப்பான, உறுதியான அதிகாரியாக நான் விளங்க நினைக்கிறேன். எனது விவசாயப் பட்டம் என் பணிக்கு உதவியாக இருக்கும்."

**உங்கள் குடும்பம் பற்றி....**

"அப்பா பெரியசாமி. மதுரை தந்தி ஆபீஸில் டெபுடி சீனியர் சூப்பிரிண்டெண்டெண்டாக பணி புரிகிறார். அம்மா ரத்தினம். அதே தந்தி ஆபீஸில் சூப்பர்வைசராக வேலை பார்க்கிறார். அண்ணன் குமரன், ஐ.எப்.எஸ் பாஸ் செய்தவர். ஈஜிப்ட் எகிப்தில் (கெய்ரோவில்) செகரட்டரியாக அரசு அலுவலராக பணி ஆற்றி வருகிறார். தங்கை எம்.பி.ஏ. முடிச்சிட்டு வேலை பார்த்திட்டு இருக்கார். என் பெற்றோர் காதல் திருமணம் செய்து கொண்டவர்கள். என் அப்பா வேலை காரணமாக வெளியூர் அடிக்கடி மாற்றலாகி சென்று விடுவார், அம்மா ஆபீஸ் போய் விடுவார். எனக்கு எல்லா விதங்களிலும் உதவியாக இருந்து படிக்க உதவியது என் அம்மாவின் அம்மா பாட்டிதான். என் பாட்டி சுதந்திர போராட்ட வீரரின் மனைவி. அதனால் தன் பேத்தி நாட்டிற்காக உழைக்க வேண்டும் என்று ஆர்வத்துடன் என்னை வளர்த்திருக்கிறார்."

பேட்டி : **விஜயா கண்ணன்**

படங்கள் : **கே.ஏ. ரமேஷ்**

அன்புள்ளவருக்கு,

நலம். நீங்கள் நலமா? நானும், பிரபுவும் நலமாக ஊர் வந்து சேர்ந் தோம்.

பத்து நாள் கழித்து, வந்து சேர்ந்த விபரம் பற்றி நான் எழுத வேண்டிய அவசியம் என்ன என்று நீங்கள் யோசிக்கலாம்.

இந்த பத்து நாட்களில் நம்மைப் பற்றி நான் யோசித்ததனால் எழுந்த சிந்தனைகளே என்னை இக் கடிதம் எழுதத் தூண்டியது.

நம்மிடையே ஏற்பட்ட பிணக்கின் விளைவாய் நான் பிறந்தகம் வந்ததும் நல்லதாகப் போயிற்று.

அடிக்கடி பூசல்கள் நிறைந்ததாய் போய் விட்டது நம் வாழ்க்கை. ஒருவருக்கொருவர் ஒத்து வராத ஒவ்வாமைக் குணங்களே இதற்குக் காரணம். நம் இருவர் மீதுமே தவறில்லை என்று யோசித்ததில் புரி கிறது.

நம்மிடையே முதன் முதலாக எப்போது நெருடல் வந்தது என் பது நினைவிருக்கிறதா உங்களுக்கு?

நம் திருமணம் நடந்த மறுவாரமே நாம் தேனிலவு கொண்டாட கொடைக்கானல் சென்றிருந்தோம்.

ஹோட்டலில் டிபன் சாப்பிட்டு விட்டு வெளியே வந்த போது வாசலில் நின்றிருந்த பிச்சைக்காரன் தட்டில் ஒரு ரூபாயை நான்

# ஒவ்வாமை



போட்டேன்.

பிச்சைக்காரர்களைக் கண்டாலே பிடிக்காது என்றீர்கள். ஒரு ரூபாய் அதிகம் என்றும் சொன்னீர்கள்.

தேனிலவின் சந்தோஷத் திளைப்பில் எனக்கு உங்கள் வார்த்தை பெரிதாகப்படவில்லை.

ஆனால் அன்று முழுதும் அடிக்கடி நீங்கள் இதைச் சுட்டிக்காட்டி பேசிய போதுதான் எனக்குள் எரிச்சல்.

"பேரரோட தட்டுல இரண்டு ரூபாய் டிப்ஸ் வைச்சீங்களே, அது மாதிரிதான் இதுவும்" என்றேன். சொன்ன போது கவனமாய் குரலில் சாந்தத்தைக் காட்டினேன்.

"டிப்ஸ் கொடுத்ததுனாலேதான் நாம போற ஒவ்வொரு முறையும் விழுந்து, விழுந்து கவனிக்கறான்" என்றீர்கள்.

விவாதம் எதற்கு என்று விட்டு விட்டேன். பிறகுதான் உங்கள் குணம் புரிய ஆரம்பித்தது.

மற்றவர் முன்னே உங்கள் பெருமையை பறைசாற்றிக் கொள்ள கொஞ்சம் படாடோபமாய் நடந்து கொள்கிறீர்கள். வயிற்றுக்குக் கஞ்சி இல்லாவிட்டாலும் உடைக்கு 'செண்ட்' அவசியம் என்ற கொள்கைக்காரர் நீங்கள்.

நான் எளிமையை விரும்புபவள். பெருமைக்காக வாழாமல் நம் மனசுக்குப் பிடித்தபடி, நமக்காக வாழ வேண்டும் என்று வற்புறுத்து



வேன்.

சமூகத்தின் மத்தியிலே வாழற நாம, அந்தச் சமூகம் மதிக்கறபடி வாழ இந்த மாதிரி வேஷம் அவசியம் என்பது உங்கள் வாதம்.

ஆனால் ஒன்று, தேனிலவில் பிணக்குடன் திரும்பிய முதல் தம்பதி நாமாகத்தான் இருக்க வேண்டும்.

நிதானமாக அமர்ந்து யோசித்துப் பார்த்தேன். நம்மிடம் சண்டை வரக் காரணம் என்ன?

முதலில் சிவப்பு நிறம். இந்தக் கலர் எனக்கு அலர்ஜி சிறு வயது முதலே. ஆனால் நியூமராலஜி பைத்தியமான நீங்கள், வீட்டிற்கு எந்தப் பொருள் வாங்கினாலும் சிவப்பு நிறத்திலேயே வாங்குவீர்கள். உடைகளும் இதற்கு விலக்கல்ல. சிவப்பைப் பார்த்தாலே எரிச்சலும், மூடு அவுட்டும் ஆகும் நானும், சிவப்பை உடலிலேயே பூசிக் கொள்ளத் தயாராயிருக்கும் நீங்களும் ஒரே வீட்டில் வாழ

## கிருஷ்ணா

வேண்டிய கட்டாயம்.

அடுத்தது மசாலா சாமான். சமையலில் அது இருந்தாலே உங்களுக்குப் பிடிக்காது. வடக்கே கொஞ்ச நாள் அப்பா வேலை பார்த்த போது மிகவும் பிடித்துப் போன ருசி இது எனக்கு. வீட்டிற்குள் எனக்கு மட்டும் கூட நான் அதைச் சமைக்க முடியாது. உங்களுக்குக் குமட்டிக் கொண்டு வாந்தி வரும். உங்களுடன் வெளியில் செல்லும் போது ஹோட்டலில் நான் ஆசைப்பட்டு சாப்பிட்டு விட்டால் அவ்வளவுதான். இரண்டு நாட்கள் என் பக்கமே வர மாட்டீர்கள். சில சமயங்களில் உங்களின் இந்தக் குணம் என்னிடம் வீம்பை உண்டாக்கி சண்டையில் வந்து முடியும்.

அடுத்த முக்கியமான காரணம் உங்கள் நண்பர் பாலு. உங்களுக்கு மிகவும் நெருங்கியவர்.



நிறைய மருத்துவமனைகளில் (தனியார்) நேரம் செல்வது உபயோகமாக இருக்க டி.வி.யில் (அதாவது கேபிள் டி.வி.யில் கூட) சினிமா, பாட்டுதான் போடுகின்றனர். குடும்பக்கட்டுப்பாடு, பெண் சிசுகொலைத் தடுப்பு, எய்ட்ஸ், தற்கொலைத் தடுப்பு இவற்றை அடிப்படையாகக் கொண்டு, டாக்குமெண்டரி நாடகங்கள் தயாரித்து ஒளி பரப்பினால், பார்க்கும் நோயாளிகள் பயன் பெறுவார்களே.

அதே போல் தனியார் பள்ளிக் கூடங்களுக்குத் தகுந்தாற் போல் விளையாட்டுடன் கூடிய கல்வி, குழந்தைகள் மனதில் பதியும் அளவிற்குச் சுகாதார முறைகள், சிறுவர் சிறுமியரே நடிக்கும் நாடகங்கள் மூலம் குழந்தைகள் மனதில் பதியும் வண்ணம் வீடியோ கேசட் தயாரிப்பாளர்கள், தயாரித்தால் தனியார்ப் பள்ளிகளில் குழந்தைகளுக்குப் போட்டுக் காட்டலாம். கேபிள் டி.வி. போடுபவர்களுக்கும் இதை ஒளிபரப்பினால், தற்போதைய தமிழ் சினிமா பாடல்கள் தரம்... குழந்தைகள் மனதில் ஓரளவாவது பாதிக்காமல் தடுக்கலாம். இதில் பள்ளிக் கூடங்களின் பங்கும் பெரிதாக உள்ளது.

- தேன்மொழி.

ஆண்களின் பார்வையின் மூலமே அவர்களை எடை போடும் திறமை பெண்களுக்கு உண்டு. அது கடவுள் கொடுத்த வரப்பிரசாதம்.

பாலுவை விழுந்து, விழுந்து நான் உபசரிக்க வேண்டும் என்று கட்டாயப்படுத்துவீர்கள். தொலைகிறது என்று விட்டால், அவர் எதிரில் நானும் உங்களுடன் அமர்ந்து அரட்டையடிக்க வேண்டும் என்பீர்கள்.

பாலுவின் எதிரே அமர்ந்திருக்கும் போது நான் அம்மணமாய் இருப்பது போல கூசிப் போகிறது. பார்வையா அது? இப்படி உரித்துப் பார்க்கிறதே உடையை, ச்சே!

சொல்லவும் முடியாத, மெல்லவும் முடியாத தர்மசங்கடம் பெண்களுக்கு இது. உங்களுக்கு அவர் நிறைய உதவிகள் 'உடுக்கை இழந்தவன் கை போல' செய்திருப்பதாக அடிக்கடி புகழ் பாடுவீர்கள்.

இருக்கலாம். ஆனால் நட்பின் எல்லைக் கோடு ஹால் வரைதான். பெட்ரூம் வரை அல்ல.

பொறுக்க முடியாமல் ஒருமுறை நான் சொன்ன போது, என் உள்ளத்தில்தான் கள்ளம், எனக்குத்தான் மூளைக் கோளாறு என்று பரிகசித்தீர்கள்.

இப்படி சின்னச் சின்னதாய் காரணங்களை நோக்கும் போது அல்பமாய்தான் படுகிறது. ஒத்துக் கொள்கிறேன்.

இயல்பிலேயே நமக்குள் வேறுபாடுகள். பிறவி குணத்தை மாற்ற முடியுமா?

ஜாதகத்தில் கணப் பொருத்தம் என்று பார்ப்பார்கள். நமக்குள் அந்தப் பொருத்தம் இல்லையோ என்னவோ?

நீங்கள் தேவ கணமாகவும், நான் ராக்ஷச கணமாகவும், இல்லை, மாறியுமோ இருக்கலாம் என்று நினைக்கிறேன்.

நம்மிடையே ஏற்படும் பிணக்குகளின் காரணம் அல்பமாய் இருக்கலாம். ஆனால் சிறிய ஓட்டைதானே படகை கவிழ்த்து விடும்.

யோசிக்க, யோசிக்க ஒன்று புரிந்தது. இந்த உரசல்களின் அடிப்படைக் காரணம் நாம் ஒருவருக்கொருவர் மற்றவரை தம் இயல்புக்கு, விருப்பத்துக்கு வளைக்க முற்படுவது தான். அவரவர் இயல்பிலேயே வளைய வர விட்டு விட்டால் சுமுகம் பிறந்திடுமோ?

யோசித்துப் பாருங்கள் நீங்களும்.

நம்மிடையே ஒத்த எண்ணம் உள்ள ஏதாவது ஒன்று இருக்கிறதா? ஒன்றே ஒன்று இருக்கிறது!

பிரபு! நம் குழந்தை! இருவருக்குமே அவன் மேல் உயிர். அலாதிப் பிரியம்.

அந்த சின்னப் பூவின் பிரியத்தினை அடித்தளமாக்கி நம் வாழ்க்கையின் இடைவெளியைத் தகர்த்து சீர்படுத்திக் கொள்ள முடியாதா? தயவுசெய்து யோசியுங்களேன்.

உங்கள் பதிலுக்காகக் காத்திருக்கிறேன்.

பூமியில் எல்லா இடத்திலுந்தான் ஊற்றுக்கண்கள் உண்டு. எங்கே அண்மையில் நீர் மட்டம் இருக்கும்., எங்கே நிரந்தரமாய் தண்ணீர் கிடைக்கும் என்பதை வாட்டர் டிவைனர்தான் கண்டு பிடித்துக் கொடுக்கிறார். நம்முள்ளும் ஊற்றுக் கண்களாய் அனேக திறமைகள், ஆர்வங்கள். எதைத் தொட்டால் சுடர் விடுவோம் என்பதை உணர வேண்டும்.



# நீங்களும் உன்னதமானவர்-தான்!

*'உங்களுக்கு எது பிடிக்கும்?'*

பூவிழி அற்புதமான பெண். பிறக்கும் போதே பல வரங்களையும் பெற்று வந்தவள் என்றுதான் மற்றவர்களுக்கு நினைக்கத் தோன்றும். இசை, நடனம், ஓவியம் வரைதல், கவிதை எழுதுதல் என்று அனேக சிறப்பியல்புகளை அவள் கொண்டவளாய் இருந்தாள். எல்லாவற்றிலும் விஸ்தாரமாக இறங்கி அரைகுறையாய் விடுவதைவிட, அனைத்து சக்தியையும் ஒருமுகப்படுத்தி ஏதாவது ஒரு துறையில் பரிமளிக்கவே விரும்பினாள்

அவள். நடனத்தைத் தேர்ந்தெடுத்தாள். பரதம் பயின்று, குச்சிபுடி, ஒடிஸி, கதகளி என்று பழகி நடனகலா வித்தகியானாள். அயல் நாடுகளிலும் அவள் நிகழ்ச்சிகளுக்கு வரவேற்பு இருந்தது. நடனக்கலை தொடர்பாக புத்தகங்கள் எழுதினாள். பெயரும், புகழும், பொன்னும், பொருளும் அவள் காலடியில் வந்து குவிந்தது.

உங்களின் திறமைக்கும், ஆர்வத்துக்கும் ஏற்ற ஒரு துறையில் ஈடுபடுங்கள் முன்னுக்கு வருவீர்கள்.

*'கலந்து பழகுங்கள், கற்றுக் கொள்ளுங்கள்':*

உங்கள் சிநேகிதிகளை வெறும் அரட்டைக் கச்சேரி அங்கமாகக் கருதிவிடாதீர்கள். பேச்சில் கிடைக்கும் சந்தோஷத்தோடு, உபயோகமான



விஷயங்களையும் நீங்கள் அவர்களிடமிருந்து கிரகிக்க முடியும்.

அமெரிக்க நாவலாசிரியை ஒருவர் தன்னை தேடிவருகிறவர்களை பேச்சில் தூண்டி விட்டுக் கொண்டே இருப்பார். தான் அதிகம் பேசமாட்டார். ஆனால் அவர் காட்டுகிற ஆர்வமும், போடுகிற கேள்விகளும் எதிராளிக்குப் போதுமான உற்சாகத்தை வழங்கிவிடும். பிறகென்ன, வந்தவர் தன் மனசில் இருப்பதை, தனக்குத் தெரிந்ததை எல்லாம் ஒரே மூச்சில் கொட்டித் தீர்த்துவிடுவார்.

அந்த நாவலாசிரியையிடம் ஒரு நிருபர் கேட்டார், "நீங்கள் ஏன் அதிகம் பேசுவதில்லை? அடுத்தவர் பேச்சில் வெகுவாய் சுவராஸ்யப்பட்டு விடுகிறீர்களே" என்று.

"நான் பேசினால் எனக்குக் கிடைப்பது பாராட்டு மட்டுந்தான். அதுவே நான் கேட்பதோடு நின்று விடும் போது புதிய விஷயங்களை கற்றுக்கொள்ள முடிகிறதே" என்றார் நாவலாசிரியை.

வாஸ்தவம் தானே.

***'மிகைப்படுத்தாதீர்கள்' :-***

ஆகா, ஓகோ என்று தன்னைப் பற்றிக் கதை அளப்பது விரும்பத்தக்க விஷயமே அல்ல.

உங்கள்பால் மற்றவருக்கு நம்பிக்கை அற்றுப் போகும்.

உங்களுக்குத் தெரியாத விஷயங்களை தெரிந்த மாதிரி "பாவ்லா" செய்யாதீர்கள். 'இது பற்றி எனக்குத் தெரியாது'...

"ஐஹாவ் நோ ஐடியா" இப்படிச் சொல்வதில் எவ்வித குறைவும் கிடையாது. ஹானஸ்டிக்கு எப்போதுமே அங்கீகாரம் உண்டு.

ஒன்றை கூட்டிச் சொல்வதோ, குறைத்துச் சொல்வதோ பொய் பேசுவதற்குச் சமம். நற்பெயரை காத்துக் கொள்வதே அனைத்திலும் முக்கியம் என்பதை நினைவில் வையுங்கள்.

***'சூழலுக்கு ஏற்ப பொருத்திக் கொள்ளுங்கள்' :***

சினிமாத்துறைக்குக் கதாநாயகியாக நடிக்க வந்த ஒரு நடிகை நகைச் சுவை நடிகையாக மாறி கின்னஸ் சாதனை செய்துவிட்டார்.

இன்னொரு 'நாயகி' நடிகை தாயார் வேடத்தில் சக்கைபோடு போடுகிறார்.

கிரிக்கெட் பிளேயர் ஒருவர் 'கமண்டேட்டர்' ஆகிவிட்டார். இன்னொரு பிளேயர் மாடலிங், வியாபாரம், எழுத்து என்று தன்னை நிலைப்படுத்திக் கொண்டுவிட்டார்.

***'எது... எப்போது?' :***

நீங்கள் எத்தனை துரிதமாய் காரியம் பண்ணுகிறீர்களோ அத்தனைக்குப் பிரகாசம் அடைகிறீர்கள். புத்திசாலிகள் காரியங்களை முதலில் வரிசைப்படுத்திக் கொண்டு விடுகிறார்கள். காரியத்திற்கேற்ற வேகமும், அக்கறையும் காட்டி நல்ல பெயரை தட்டிக் கொள்கிறார்கள்.

***'முணுமுணுக்காதீர்கள்' :***

சதா குறை கூறிக் கொண்டிருப்பவர்கள் தன் மதிப்பை தானே குறைத்துக் கொள்கிறார்கள்.



நீங்கள் 'A' பற்றி 'C' யிடம் கம்ப்ளெயின்ட் பண்ணும் போது, 'C' யும் 'A' மாதிரியே உங்களிடம் நடந்து கொள்ள ஆரம்பித்து விடுவார். அடுத்தவரை சிலாகித்துப் பேசுவதே நன்று. அதனால் பல சாதகங்கள் ஏற்பட முடியும்.

***'நீங்கள் எப்படித் தோன்று கிறீர்கள்?' :***

நீங்கள் ரொம்பவும் ஆக்டிவ் பர்ஸனாக இருக்கலாம். ஆஃபீஸில் நாலுபேர் வேலையை தனி ஒருவராக செய்து முடிக்கிற, வீட்டில் விரல்



## தயாரிப்பாளர்களுக்கு ஒரு யோசனை

பட்டுப்புடைவைகளுக்கு என்னதான் உயர்ந்த சோப்பு, பவுடர்கள், ஷாம்பூ போட்டு அலசினாலும் அவை ரசாயனக் கலவைகள்தான். பூந்திக் கொட்டை போட்டு அலசுவதற்கு எதுவுமே ஈடாகாது. ஆனால் இப்போதுள்ள அவசரத்தில் வேலைக்குப் போகும் பெண்களுக்கு பூந்திக் கொட்டை ஊற வைத்து கசக்கி, பிழிந்து, சிலுப்பிஉஹூம் யாருக்கு நேரமிருக்கிறது?

ஆகவே,

சிகைக்காய் பொடி, ஷாம்பூ முதலியவை சாஷேக்களில் விற்பது போல -

தனி பூந்திக் கொட்டை நுண்பொடியாக சாஷேகளில் விற்றால் பட்டுப்புடைவைகள், நகைகள் சுத்தம் செய்ய மிக எளிதாக இருக்கும். பட்டுப்புடைவைகள் இந்த இயற்கை சலவையில் நீண்டநாள் மெருகு குலையாமல் இருக்கும். செய்வார்களா?

- எஸ். பட்டம்மா.

சொடுக்குகிற நேரத்திற்குள் டின்னர் தயாரித்து விடுகிற 'அசகாய சூரி'யாக இருக்கலாம். பட், காமாசோமாவென்று உங்கள் தோற்றம் இருக்குமாயின் நோயூஸ். 'நீட்'டாக உடுத்துங்கள், நல்ல நடைமுறைகளைக் (manners) கையாளுங்கள். உங்களுடைய பர்ஸ்பக்ஷனை எதிராளிக்கு உணர்த்தக் கூடியது fine exterior தான். 'பொருளின் தரம் மட்டுமே அதற்கு மார்க்கெட்டை பெற்றுக் கொடுத்து விடுவதில்லை. கவர்ச்சிகரமான 'பேக்கிங்'கும் அவசியம் அல்லவா.

***'உங்கள் காரியப்பாங்கு' :***

எதை எப்படி ஒழுங்குபடுத்தலாம் என்று தெரிந்தவர்களுக்குதான், எதை எப்படி அனுபவிக்கலாம் என்பதும் புரியும்.

சிலர் வாழ்க்கை முழுதுக்குமான வற்றை ஒரே வேளையில் விழுங்கி ஜீரணித்து விட முடியுமா என்று பார்ப் பார்கள்.

விரைந்து காரியம் பண்ணுங்கள். ஆனால் காரியத்தின் பலனை நிதானமாக அனுபவியுங்கள்.

சிலர் ஒரே நேரத்தில் நாலுகாரியம் பண்ணுகிற வேகம் காட்டுவார்கள். ஆரம்பத்தோடு சரி, முடிவில் ஒன்று கூட சொல்லிக் கொள்ளும்படியாய் இருக்காது.

காரியத்தின் பெறுமானமே அதன் 'பூர்த்தி'யில்தான் இருக்கிறது.

எதில் ஈடுபட்டாலும் சவுகரியமாக நுழைவதைப் போலவே, வெற்றியுடன் வெளியேறி விடுகிற லாகவமும் உடையவராய் இருங்கள். உங்கள் பிரவேசத்தின் போது கிடைத்த வரவேற்பும், கரகோஷமும் பெரிதல்ல. நீங்கள் வெளியேறிவிட்ட பின் உங்களை ரொம்பவே மிஸ்பண்ணிவிட்டதாக மற்றவர்கள் உணரும்படி செய்கிறீர்களே அதுதான் முக்கியம்.

**— சி.எஸ். தேவநாதன்**

***பொரித்த அப்பளங்கள், மீந்து, நமுத்துப் போய்விட்டால், துண்டு துண்டாகக் கிழித்து, வெறும் வாணலியில் வறுத்து, சிறிது தேங் காய், கறிவேப்பிலை, புளி, 2 பச்சை மிளகாய், உப்பு (தேவைப்பட்டால்) சேர்த்து மிக்ஸியில் அரைத்தால், ஜோரான அப்பளத்துவையல் சுடு சாதத்துக்கு வெகு ஜோர்.***

***- கீதாஞ்சலி.***





# ஸ்ரீ ஸ்ரீமான் மாத்வா சித்தாந்த ஒன்னாஹினி பர்மனென்ட் நிதி லிமிடெட் (ஸ்தாபிதம் 1881)

(THE S M.S.O. Permanent Nidhi Ltd.)

**நூற்றாண்டுகளுக்கு மேல் உங்கள் சேவையில்**

பதிவு அலுவலகம்: நெ. 19, தோபி தெரு, திருவல்லிக்கேணி, சென்னை 600 005. ஃபோன்: 842139, 845422.

கிளை அலுவலகங்கள்: ● அசோக்நகர்: பிளாட் ஏ-1 முதல் அவென்யூ, சென்னை - 83 ஃபோன்: 4824020. ● வில்லிவாக்கம்: நெ. 4, பாலியம்மன் கோயில் தெரு, சென்னை - 49. ஃபோன்: 6262914. ● குரோம்பேட்டை: நெ. 61-ஏ, ஸ்டேசன் ரோடு, ராதா நகர், சென்னை 600 044.

## கடன் திட்டங்கள்

1. வீடுகள், அடுக்குமாடி கட்டிடங்கள் மீது சென்னை மாநகராட்சி மற்றும் எம்.எம்.டி.ஏ. எல்லைக்குட்பட்ட இடங்களுக்கு கடன் கொடுக்கப்படும். வட்டி விகிதம் ஆண்டொன்றுக்கு 21% மட்டுமே (1.75 மாத வட்டி)

2. சிறப்பு கடன் திட்டத்தின் மூலம் ரூ. 2,00,000 மேற்பட்ட தொகைக்கு தனிப்பட்ட விதிமுறைகளின் மூலம் கடன் கொடுக்கப்படும்.

3. தங்க நகையின் பேரில் சவரன் ஒன்றுக்கு ரூபாய் 2,400/- வீதம் கடன் கொடுக்கப்படும். வட்டி விகிதம் ஆண்டொன்றுக்கு 21% மட்டுமே (மாத வட்டி 1.75) கடன் பெறுவதற்கு R.D. கட்ட தேவையில்லை.

அசல் மீது வட்டி நாட்கள் அடிப்படையில் கணக்கிடப்படும்.

## டிபாசிட் - திட்டங்கள்

| காலம் | 3 மற்றும் 6 மாதங்கள் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 60 மாதங்கள் |
|---|---|---|---|---|---|
| வட்டி விகிதம் (ஆண்டுக்கு) | 14% | 15% | 16% | 16.5% | 17% |

1/2% கூடுதலாக சமய மற்றும் அறக்கட்டளை நிறுவனத்திற்கு வழங்கப்படும்.

1/2% கூடுதலாக ரூ. 50,000 - மற்றும் அதற்கு மேலாக 60 மாதங்களுக்கு செலுத்துபவர்களுக்கு

1/2% கூடுதலாக ரூ. 10,000 - மற்றும் அதற்கு மேலாக 60 மாதங்களுக்கு செலுத்துபவர்களுக்கு வயது முதிர்ந்தோர்க்கு மட்டும் (அதாவது 60 வயது மற்றும் அதற்கு மேலாக வயதுள்ளவர்களுக்கு)

## நூற்றாண்டு ரொக்கப்பத்திரம்*
## (50 மாதங்களிலேயே டிபாசிட் இரட்டிப்பாகிறது)

| காலம் | செலுத்தும் தொகை | திரும்பப்பெறும் தொகை |
|---|---|---|
| 50 மாதங்கள் | ரூ. 100/- குறைந்தபட்சம் | ரூ. 200/- |

## ரெக்கரிங் டெபாசிட்*

| காலம் | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
|---|---|---|---|---|---|
| வட்டிவிகிதம் (ஆண்டுக்கு) | 15.5% | 16% | 16.5% | 16.5% | 17% |

## ஸேவிங்ஸ் டெபாசிட்*

மாதத்தின் 10ம் தேதி முதல் இறுதி வேலை நாள்வரை உள்ள தொகைக்கு வருடத்திற்கு 7% வீதம் வட்டி வழங்கப்படும். 'ஏ' வகுப்பு பங்கு தாரர்களுக்கு அதிக பட்ச டிவிடெண்டுகளை வழங்கி வருகின்றது

| வருடம்: | 31.3.91. | 31.3.92. | 31.3.93 | 31.3.94 |
|---|---|---|---|---|
| சதவிகிதம்: | 40% | 50% | 80% | 100% |

*பங்குதாரர்களுக்கு மட்டும் சேமிப்பே பாதுகாப்பு வார விடுமுறை வெள்ளிக்கிழமை

வெ. ராமு நிர்வாக அலுவலர். டி.எஸ். ராமராவ் தலைவர்.

"குழந்தைகளுக்கு இந்தக் காலத்தில் திடீர் திடீரென்று 104, 105 என்று ஜுரம் 'டக்'கென்று வந்து விடுகிறது. இதுபோன்ற 'வைரஸ்' காய்ச்சலுக்கு எமர்ஜென்சியாக உங்களிடம் ஏது மருந்து?"

பதினெண் சித்தர் மருத்துவமனை டாக்டர்களிடம் கேட்டோம். "இருக்கே!" என்று முன்பே பிரம்மானந்த ஸ்வாமிகள் சொல்லியிருக்கிறார். "அப்படிப்பட்ட எமர் ஜென்சி மருந்துகள் சித்தமருத்துவத்தில் இருக் கின்றன. அந்தக் காலத்தில் பயன்படுத்தி இருக்கிறார்கள். இப்போதும் எங்களிடம் நம்பிக்கை வைத்து வந்தால் நிச்சயமாகக் குணப்படுத்த முடியும். ஏன், பாம்பு கடித்து இறந்தே போய் விட்டான் என்று கருதப் பட்டவர்களையெல்லாம் காப்பாற்றி இருக்கிறேனே" என்கிறார்.

"ஆனாலும் சித்த மருத்துவத்தின் நோக்கமே முதலிலிருந்து அதாவது அடிப்படையில் இருந்தே உடல்நலத்தைச் சீராகப் பாதுகாப்பதுதான். குழந்தை பிறந்த நாளில் இருந்தே ஏன் கர்ப்பம் தரித்த நாளில் இருந்தே தாயும், சேயும் ஆரோக்கியமாகப் பாதுகாக்கப்படுவார்களேயானால் 'இந்தப் பிரச்னைகளே வராதே'' என்கிறார்கள் டாக்டர்களான சிவராமனும்முத்துக்குமாரும் செல்வமும்.

# வருமுன் காப்பது நல்லது

"சரி, குழந்தை பிறந்த நாளில் இருந்து என்ன மாதிரி குழந்தைகளை பாதுகாக்க வேண்டும் என்கிறீர்கள்?"

'உரமருந்து' என்பதைப் பற்றி நாங்கள் முன்னாடியே சொல்லியிருக்கிறோம். இந்த மருந்தினை குழந்தை பிறந்த நாளிலிருந்தே கொடுக்க ஆரம்பிக்கலாம். வசம்பினை 'பிள்ளை வளர்ப்பான்' என்றே சொல்வார்கள். இதோடு வேறு சில மூலிகைகளும் சேர்த்துச் செய்யப்படுவதுதான் இந்த 'உரமருந்து' என்கிறார் டாக்டர் சியாமளா.

"மற்றொரு முக்கியமான விஷயம் குழந்தை பிறந்தவுடன் முதல் மூன்று நாட்கள் தாய்ப்பால் கொடுக்காமல் இருக்கிறார்கள். இது ரொம்ப ரொம்பத் தவறு. தாய்க்கு முதலில் சுரக்கும் தாய்ப்பால் முழுக்க முழுக்க நோய் எதிர்ப்புச் சத்து கொண்டது. எனவே கண்டிப்பாகத் தாய்ப்பால் ஆரம்பத்தில் இருந்தே கொடுக்க வேண்டும்."

"அதே போல தேன் மிகச் சிறந்த நோய் எதிர்ப்புச் சக்தி கொண்டது. நல்ல தரமான தேனை வாங்கிக் குழந்தைகளுக்கு நாக்கில் தடவி வர வேண்டும். இது குழந்தைகளுக்குத் திக்குவாயைத் தவிர்த்துத் தெளிவான பேச்சைத் தந்து, உடலில் நல்ல ரத்தம் ஊறவும் செய்விக்கிறது" என்கிறார் இம் மருத்துவமனையில் மேனேஜிங் டைரக்டரான ஸ்நேகலதா.



• சிநேகலதா

"குழந்தைகளை ஆரம்பத்தில் இருந்தே அதிக மருந்து கொடுத்து, அவர்களை மருந்துகளுக்கு அடிமையாக்கி விடுவது ரொம்பத் தவறு அடிப்படையிலேயே குழந்தைகளை ஆரோக்கியமாக வளர்க்க வேண்டும். ஒரு சின்ன தும்மல் போட்டால் கூட உடனே மருத்துவரிடம் அழைத்துச் சென்று சளிக்கான மருந்து, ஆன்டிபயாடிக், அதற்கு வைட்டமின் மருந்து என நான்கு ஐந்து மருந்துகளைத் தொடங்கி விடுகிறார் கள். இவற்றிற்குக் கேட்காத போது ஊசி போடுகிறார்கள். சில சமயங்களில் ஸ்டீராய்ட் உபயோகிக்க வேண்டியதாக வருகிறது.

எனக்குத் தெரிந்து ஒரு நான்கு வயதுக் குழந்தை சளிக்காகத் தனக்குக் கொடுக் கப்படும் மாத்திரைகளை வரிசையாகச் சொல்லிக் கொண்டே வந்தது" என்கிறார் சிவராமன்.

"பொதுவாகவே சின்ன வயதில் இருந்தே கொஞ்சம் பொறுத்துக் கொள்ளும் தன் மையைக் குழந்தைகளிடம் வளர்க்க வேண் டும். ஒரு நோய் வந்தால் அதை ஒரே அமுக் காக அமுக்கி அந்த நிமிஷமே சரியாகி விடு வது போல மருந்தை எதிர்பார்க்கிறார்கள். நோய் என்பதே உடல் நிலை சரியாக இல்லை, எங்கேயோ கோளாறு எனக் காட்டும் அறி குறிதான். ஆனால் அது என்ன, ஏன் தும்மல், சளி எனப் பார்க்காமல் அதை உடனே ஒழித்துக் கட்ட மிகச் சக்திவாய்ந்த மருந் துகளை உட்செலுத்தும் போது கண்டிப்பாக அதற்குப் பின்விளைவுகள் வரும். ஸ்டீராய்ட் போட்டே பழக்கப்படுத்தி விடும் போது பிற் காலத்தில் குழந்தைகளுக்கு நோய் எதிர்ப்புச் சக்தியே இல்லாமல் போய்விடுகிறது. உடம் பில் சக்தி இல்லாமல், சதை பிடித்தும் பார்க் கவே வலுவில்லாமல் ஆகி விடுகிறார்கள். எனவே கூடிய மட்டும் குழந்தைகளுக்கு இயற்கையை ஒட்டிய மருந்து கொடுப்பது நல்லது.

முக்கியமாக நோய் வந்து மருந்து கொடுப்பதை விட ஆரம்பத்தில் இருந்தே நோய் வராமல் பாதுகாப்பது நல்லது."

"அதுதான், அப்படி நோய் வராமல் பாதுகாப்பது எப்படி?"

"குழந்தைகளை வசம்பு கொடுத்து வளர்ப்பது ஆரம்பம். தேன் நாக்கில் தடவி வர வேண்டும். ஆறு, ஏழு மாதம் வரை தாய்ப்பால் முக்கியம். குழந்தைகளை முதலில் தாக்குவது சளி சம்பந்தப்பட்ட நோய்கள்தான். அடுத்ததாக டயரியா எனப்படும் வாந்தி பேதி போன்றவை வருகின்றன.

தாய்ப்பால் அருந்துகின்ற குழந்தைகளுக்கு நோய் வருவது பெரும்பாலும் தாயின் மூல மாகத்தான். ஏனென்றால் தாயின் உடல் நிலையும் மனநிலையும் மிக அதிகமாகக் குழந்தைகளைத் தாக்குகிறது. தாய் எளிதான சத்தான ஆகாரம் உண்ண வேண்டும். ஜீரணம் ஆகக் கடினமான உணவுகளையும், வாய்வுப் பதார்த்தங்களையும் தவிர்க்க வேண்டும், கீரை, பழங்கள் போன்றவற்றை அதிகம் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

"தாயின் உணவுத் தன்மை குழந்தையின் பாலில் சேர்கிறது என்பதற்கு ஒரு சுவையான உதாரணம் கூடச் சொல்லுவார்கள். முதல் நாள் இரவு பூண்டு சேர்த்த உணவு சாப்பிட்டு மறுநாள் பால் கொடுத்தால், குழந்தையின் வாயை முகர்ந்து பார்த்தால் பூண்டு வாசனை அடிக்குமாம்" என்கிறார் டாக்டர் கீதா.

அதே போல மனநிலையும் ரொம்ப முக்கியம். குழந்தைக்குப் பால் கொடுக்கும் தாய் படபடப்பு, கோபம், ஆத்திரம் இல்லா மல் இருக்க வேண்டும். இவை அத்தனையும் மார்பில் சேரும் பாலின் தன்மையைப் பாதிக் கிறது. அதனால்தான் அந்தக் காலத்தில் பிள்ளை பெற்றவள் என்று சொல்லி அவர் களை அமைதியான முறையில் இருக்கச் செய்தார்கள். பிள்ளை பெற்றவர்களின் அறைக்குள் யாரையும் உள்ளேயே விட மாட்டார்கள். மிக முக்கியமானவர்கள் தவிர யாரும் செல்ல மாட்டார்கள்.

எனவே இப்படி அடிப்படையிலேயே தாயும், சேயும் நலமாக இருந்து விட்டால் பிரச்னை ஒன்றும் இல்லை. அதே போல முதலில் இருந்தே குழந்தைகளுக்கு வெது வெதுப்பான நீரில் தலைக்குக் குளிப்பாட்டிப் பழக்கி விட வேண்டும். வெந்நீரில் குளிப்பது என்பது உடல்நலத்திற்கு மிகவும் தீங்கானது. 'ஜில்'லென்று நீர் இருக்கக் கூடாது, அவ் வளவுதான். நம்முடைய குழாய்களில் வருகின்ற நீரே வெதுவெதுப்பானதாகத் தானே இருக்கிறது.

வெந்நீரில் குளிக்கும் போது உடல் திடீ ரென்று சூடடைகிறது. இது உள் உறுப்புக்கள் அனைத்தையும் பாதிக்கிறது. வெந்நீரிலேதான் குளிக்க வேண்டும் என்பவர்கள் சிறிது சிறி தாக மேலே ஊற்றிக் கொண்டு கடைசியில் தான் தலைக்கு ஊற்ற வேண்டும்.

ஆனால் முதலில் இருந்தே தண்ணீரில் குளிக்கப் பழகி விட்டால் அது மிகவும் சிறந் தது. இயற்கையான நிலையில் உடல் சுத்தம்

---



**எண்ணை வாங்கிய கேன்களை பயன் படுத்தாமல் இருந்தால், ஆணி கொண்டு கீழ்பாகத்தில் நிறைய துளைகள் போட்டு, செடிகளுக்குத் தண்ணீர் வாளியாகப் பயன்படுத்தலாம்.**

**ஆர். சீதா**




- ☐ சுத்தமான நெய்யில் தயாராகும் ஸ்வீட் வகைகள்
- ☐ சுத்திகரிக்கப்பட்ட, கொலஸ்ட்ரால் தொல்லை இல்லாத தாவர எண்ணெயில் தயாராகும் கார வகைகள்
- ☐ அதிகப்படியான எண்ணெய் அகற்றப்படுவதால் நீண்டநாள் கெடாமல் இருக்கும் தென்னிந்திய பட்சணங்கள் (FREE OF OIL)

**OUR SPECIALITIES :**

- ☐ புழுங்கலரிசி கைமுறுக்கு, தட்டை, சீடை, மிக்ஸர் (FREE OF OIL), ETC.,
- ☐ மைசூர் பாகு, போளி, லட்டு, கோதுமை அல்வா, ETC.,




# SUSWAAD

The Delicious Home made Sweets and Savouries

1/2 Venkatraman street,
T.Nagar, Madras - 17. Ph: 8282324 P.P

Also available at:
C/o. Unique Electronics
160, Royapettah High Road, Mylapore, Madras - 4.
Ph: 4992190
131, Mudichur Road, Thambaram West,
Ph: 403267

கல்யாண ஸ்வீட்ஸ், சீர் முறுக்கு சீர்வரிசை பட்சணங்கள் எவ்வளவு தேவை ஆனாலும் அர்ஜெண்ட் ஆர்டர் பேரில் தயார் செய்து தருகிறோம்.

**EXPORT ORDERS & ENQUIRIES FOR TECH. KNOWHOW SOLICITED**

KOMALA ADS.

செய்யப்படுவதுடன் நம்மைப் போன்ற வெப்ப நாடுகளில் உள் உறுப்புக்கள் வெப்பத்தால் விரிவடையாமல் இயற்கையாக இயங்குகிறது. வாரம் இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிப்பது மிகச் சிறந்தது.

அந்தக் காலத்தில் மூக்கின் நடுவில் சுத்தமான நல்லெண்ணெய் விட்டு கண்களைத் தூய்மையாக்கி, காதுகளிலும் விட்டார்கள். தலையில் தேய்த்து விடுகிறார்கள். இன்று விளக்கெண்ணெய் கூட சுத்தமாகக் கிடைப்பதில்லை. எனவே இந்தப் பழக்கத்தினைத் தவிர்க்கலாம். ஆனால் குழந்தைகளுக்குத் தலையிலும், உடம்பிலும் நல்லெண்ணெயைத் தேய்த்து லேசாக நீவி குளிப்பாட்ட வேண்டும். இது சருமத்திற்கு இயற்கையான மினுமினுப்பைக் கொடுக்கிறது. உடம்பிற்கும் குளுமையைத் தருகிறது. எண்ணெய்க் குளியலின் சிறப்பை மேல் நாடுகள் கூட ஏற்றுக் கொண்டு விட்டன."

"குழந்தைகளுக்கு அடிப்படை ஆரோக்கியம் சரி. நோய் வந்து விட்டால்...?"

"இரண்டு வயது வரை குழந்தைகளுக்கு வருகின்ற நோய் ஒரு வகை. பிறகு அதிகமாக அவர்களை இன்று 'பிரைமரி காம்ப்ளெக்ஸ்' எனச் சொல்லப்படும் மாந்தம் தாக்குகிறது. மாந்தத்திலேயே முப்பதுக்கும் மேற்பட்ட மாந்தங்களை நம் சித்தர்கள் சொல்லி இருக்கிறார்கள். மாந்தத்திற்கு அடிப்படையே மந்தம் எனப்படும் நல்ல ஜீரணம் இல்லாததே. இதற்கு அடுத்து இந்த மாந்தமே பின்னர் கணைச்சூடு எனப்படும் நோயாக மாறுகிறது என்கிறார்கள். இது வயிறு பெருத்து உடல் மெலிந்து ஏற்படும் நோய். உடல் ஆரோக்கியமாக இல்லாத போதுதான் இத்தகைய நோய்கள் வருகின்றன. இதற்கெல்லாம் மிகச் சிறந்த மருந்துகள் சித்தவைத்தியத்தில் உள்ளன. மற்ற மருத்துவ முறைகளில் முயற்சி செய்து கொண்டிருப்பவர்கள், சித்த மருந்துகளையும் எடுத்துக் கொள்ளலாம். இது நோய்க்கு அடிப்படையான கோளாறுகளைச் சரிசெய்து, உடல் ஆரோக்கியத்தை மீட்டுக் கொண்டு வந்து விடுகிறது."

"அது மட்டுமேயல்ல. இப்போதெல்லாம் இரண்டரை வயதுக்கே குழந்தைகளைப் பள்ளியில் கொண்டு போய் சேர்த்து விடுகிறார்கள். அவர்களுக்குக் கல்விச் சுமையும் அதிகமாகி விடுகிறது. இப்படி மிகச் சிறு வயதில் இருந்தே உழைக்க ஆரம்பித்து விடும் குழந்தைகளுக்கு வல்லாரை போன்ற கீரைகள் ஞாபக சக்திக்கு, படிப்புக்குப் பெரிதும் உதவும். சரி, இந்த மாதிரி கீரைகளுக்கு எங்கே போவது என யோசனை வரலாம். அதே போலத்தான் அருகம்புல் ஜூஸ் குடியுங்கள் என்பது இப்போது சொல்லப்படுகின்ற விஷயம். அருகம்புல் எல்லோருக்கும் கிடைக்குமா? எங்களைப் போன்ற சித்த மருத்துவர்கள் இவற்றை எடுத்துப் பொடியாக்கிக் காம்ப்ஸ்யூல்களாகக் கொடுக்க ஆரம்பித்து இருக்கிறோம். அவற்றை மக்கள் பயன்படுத்த ஆரம்பிக்கலாம்."

"பொதுவாகவே ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இது மிகவும் வேகமான காலம். பெண்களுக்கெல்லாம், எல்லாமே 'ரொமனாக' போய்க் கொண்டு இருக்கும் வரை நல்லது. திடீரென்று குழந்தைகளுக்கு உடம்பு சரியில்லாமல் போகும் போது யார் லீவ் போடுவது, யார் பார்த்துக் கொள்வது என்றெல்லாம் பிரச்னைகள் வந்து விடுகிறது. எனவே ஆரம்பத்தில் இருந்தே கூடியவரை ஆரோக்கியமாகக் குழந்தைகள் வளரும்படி முன்ஜாக்கிரதையாக வளர்த்து விடுவது நல்லது. அதற்குச் சிறந்த மருத்துவர்களை அணுகி ஆலோசனை பெற்று இயற்கையான முறையில் வளர்த்து விட வேண்டும். நோய் வந்தால்தான் மருத்துவர்களை அணுக வேண்டும் என்பது இல்லை. வருமுன் காப்பது எப்போதுமே சிறந்த கொள்கை அல்லவா?" என்கிறார்கள் இந்த முன்யோசனைக் காரர்கள்.

- ஜ்வாலா

## வாசகர்களுக்கு...

'மங்கையர் மலரின் திருமணமலரில் விளம்பரம் கொடுத்தாலே ஒரு ராசி' என்ற எண்ணம் வாசக வாசகியரிடையே நிலவுகிறது. அந்த நல்ல எண்ணத்திற்கு நாங்கள் மகிழ்ச்சியுடன் தலைவணங்குகிறோம். ஆனால் என்னவாயிற்று என்றால் திருமணமலர்ப் பகுதிக்கு விளம்பரம் தருபவர்கள் அதிகமாகி விட்டார்கள்! இப்போதே டிசம்பர் இதழ்வரை காத்திருக்கும் நிலை. எனவே வாசகர்களின் எண்ணத்திற்கு மதிப்பு கொடுக்கும் வகையில் இந்த இதழில் பக்கங்களை அதிகரித்து, திருமணமலர்ப் பகுதிக்கென கூடுதல் பக்கங்களை அளித்துள்ளோம்.

மணம் புரியக் காத்திருக்கும் மங்கையருக்கும், இளைஞர்களுக்கும் வாழ்த்துக்கள்.

- (ஆசிரியர்)

# திருமண மலர்

## மணமகள் தேவை

• துளுவ வேளாளர் (அகமுடையார்) 27 வயது (பி.ஏ.), சொந்தமாக ஆப்செட் அச்சகத்தை நிர்வகித்துவரும் நல்ல வசதியான குடும்பத்து மணமகன் உயரம் 5'.9" மாநிறமுள்ள இவருக்கு, 5'.6"க்கு குறைவில்லாத உயரமும், நற்பண்புகளும், நல்ல அழகும், நிறமும் உள்ள கல்வி பயின்ற, வேலைக்குச் செல்லாத நற்குடும்பத்து மணமகள் தேவை. பெண்ணின் ஜாதகம் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11201

• அஷ்டசகஸ்ரம், காஸ்யப கோத்திரம், 28 வயது, பரணி சிவந்த நிறம், நல்ல தோற்றம் +2 படித்த மணமகனுக்கு, உயரம் 160 செ.மீ., சொந்த வேன், கார் வைத்துக் கொண்டு டிராவல்ஸ் நடத்துகிறான். கெட்ட வழக்கங்கள் எதுவும் கிடையாது. சொந்த வீடு உண்டு. குடும்பத்துக்கு அடக்கமான, அழகிய பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11202

* Brahmin Bharadwaj, Vadamal, Moolam, 41, 5'.5", Asst. Manager, Nationalised Bank, Rs.8000/- Own house, widower, two sons, 14, 8. subsect Iyengar, Madhwa, Telugu no bar. Issueless widows. Divorcees considered. send horoscope to Box No. 11203

• பாரத்வாஜ கோத்திரம், வடமான் ஐயர், உத்திராடம், வயது 30, படிப்பு (பி.காம்.) மாத வருமானம் 4500/- மத்திய அரசு பணியில் (கல்பாக்கம்) உள்ள பையனுக்கு +2 முதல் பட்டப் படிப்பு வரை படித்துள்ள வேலையிலிருக்கும்/இல்லாத பெண் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11204

*Alliance for Vadama, Garga Gothram, bachelor groom, 42, 158, B.Sc., Accountant, Telegraph Department, graduate girls of age 34 to 38 preferred. Horoscope to Box No. 11205

• வடமான் ஸ்ரீவத்ஸ கோத்திரம், சுயதொழில் செய்யும் வீடியோ மற்றும் போட்டோகிராபி வருமானம் ரூ. 2500/- உயரம் 5'.2" மகம் நட்சத்திரம் பையனுக்கு பொருத்தமான 28 வயதிற்குட்பட்ட +2 வரை படித்த மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதமில்லை. வரதட்சணை பிரச்சனை இல்லை. முழு விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11206

* Alliance invited for Iyer boy Brahacharanam, Kousika Gothram, Swathi, B.A., 31, 5'8" 2000/- reputed concern, wanted employed girl. contact with horoscope. subsect no bar. Box No. 11207

* Educated employed girl for Thengalai Iyengar boy Kousika Magam, 32, 2000/- 163 cms,Technician BPL Company, Madras Reply with horocope subsect no bar. Box No. 11208

• சென்னையில் தனியார் வங்கியில் வேலை பார்க்கும் 32 வயது, எம்.காம்., பூராடம், அழகான மெலிந்த தோற்றமுடைய உயரமான, திருநெல்வேலி சைவப் பிள்ளை மணமகனுக்கு, அதே இனத்தில் பட்டப் படிப்பு, சிவந்த நிறம், வங்கி அல்லது எல்.ஐ.சியில் பணிபுரியும் மணமகள் தேவை. விவரங்களுக்கு அணுகவும். பெட்டி எண் : 11209

* Wanted fair, good looking Non-Haritha graduate Iyer girl from decent family for Vadama, B.E. Iyer boy Bharani, 24, 172, 7000, Jr. Manager in Bhilai Steel Plant. Reply with horoscope and family details. Subsect no bar. Box No. 11210

* Suitable match for fair, handsome boy Haritha, Brahacharnam, Uthiram, B.Com.,(Hons)ACA, Executive Multi-national Saudi, 29/172 invited from well settled, fair, slim, good-looking post-graduate girl decent respectable families. Reply to Box No. 11211

* Telugu Brahmin, Velnadu, Bharadwajam, Trichy based consultant Neuro Psychiatrist, owning prviate hospital 29/175/10,000/- Telugu Brahmin girl, doctros preferably post-graduates professionals subsect no bar. Contact horoscope full family details. Box No. 11212

• வடமான், கௌண்டின்யம், பூசம் 2-ம் பாதம், 26 வயது, 170 செ.மீ., B.Tech (Instre) M.I.T. Junior Manager, Sail. Central Public Sector, Bokaro, 5500/- ஒரே பையன் வசதியான குடும்பம், நல்ல பழக்கங்களுடைய அழகான வரனுக்கு, அதே பிரிவைச் சேர்ந்த MCA/CA/MBA/PG படித்த அழகான, குடும்பப்பாங்கான, வசதியுள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். தபால் பெட்டி எண் : 11213

* Athreya 27 years B.Com., Thiruvonam, Iyer, Marketing Job, Rs. 63,000 Plus benefits, decent family settled in North wirte with horoscope to Box No. 11214

* Alliance for Agasthya Brahacharanam, Aswini, Iyer boy, 30, 170cm, 4000, employed in Southern Railway at Bangalore from girls employed in Bank/LIC/Central. Reply with horosope and other details. Box No. 11215

* Bank employee, 31, is Ambitious to marry a physically handicapped girl, preferably employed, from decent vegetarian family. Caste is no bar. Box No. 11216

• பேரி செட்டியார் (தெலுங்கு ஆயிரவைஸ்யர்), 38/156/எஸ்.எஸ்.எல்.சி./பப்ளிக் லிமிடெட் கம்பெனியில் சூப்பர்வைஸர்/3000/பரணி/கிழேந்தி மகரிஷி கோத்திரம், செவ்வாய் தோஷமுள்ள மணமகனுக்கு தகுந்த வேலையிலுள்ள (அ) வேலையில்லாத மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11217

* Vadakalai, Bharathwaj, 29, Sathyam, 5'.10", M.A., Sales Executive Rs. 4000/- prefers graduate, employed girls. Phone : 2355439. Box No. 11218

• தமிழ் ஐயர், ஸ்மார்த்தா, ஸ்ரீவத்ஸம், பூரம், 32 வயது, 180 செ.மீ., பி.ஏ. தனியார் நிறுவனத்தில் ரூ. 1500/- சம்பளத்தில் வேலையிலிருக்கும் பையனுக்கு வேலை பார்க்காத குடும்பப்பாங்கான ஓரளவு படித்த (8 முதல் +2) பெண் தேவை. இதே இனத்தில் உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம், குடும்ப விவரத்துடன் எழுதுக. பெட்டி எண் : 11219

* Wanted a fair Brahmin working girl employed in Madars preferably Iyengar for a 32 years old boy. working in a private firm, earning Rs. 1800/- per month. Contact to Box No. 11220

* Wanted suitable alliance from employed or unemployed girl for Iyer, Brahacharanam, Avittam, Kasyapa Gothram Boy, BSc., self employed at Erode earning 4000/- aged 41. Subsect acceptable. Apply to Box No. 11221

* Bride with beauty/pleasing/loving nature of any caste for Hindu, Nathamar, 46/153/5000, Govt., good looking. Contact to Box No. 11222

* Alliance invited for Naidu boy, graduate, 26, 175 cms, Business, 5000/- per month, Moolam, seeks good looking, gradute girl, homeloving, from a decent family. Send Bio-data and horoscope to Box No. 11223

• கவரை நாயுடு, வயது 23, உயரம் 5'.9", வியாபாரம், 5000/- மாத வருமானம், ஆயில்ய நட்சத்திரம் உள்ள வரனுக்கு நாயுடு வகுப்பில் நல்ல பண்பும், அழகும், கௌரவமான குடும்பப்பாங்கான பெண் தேவை. குடும்ப முழு விவரங்களுடன், ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11224

* Alliance invited from graduate/non-graduate fair Iyer girl for Vadama, Garga, Chithrai graduate fair Iyer Boy bachelor. 40/160/6500 employed in Nationalized BanK, Madars. Box No. 11225

* Alliance invited for Thenkalai, Vadoolam, Aswathi, Boy 31, 5'.3" Telecom Officer, Madras Telephones from Iyengar girls graduate decently employed in Govt/ Bank, Public Sector etc. Reploy to Box No. 11226

• ஐயர் வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், வயது 42, எம்.ஏ., எம்.பில்., சென்னை தனியார் கல்லூரியில் மணமாகாத பேராசிரியர் 6000/- சம்பாதிக்கும் பையனுக்கு முதுகலை/இளகலை பட்டமுடைய அதே இன, சங்கீதத்தில் விருப்பமுள்ள பெண் தேவை. பெட்டி எண் : 11228

• வசதியுள்ள, 26, 176, பி.எஸ்ஸி., மத்திய அரசு, பிராமின்/நாயுடு பெற்றோர் பையனுக்கு உயரமான, சிவப்பான, பட்டதாரி, வங்கி, இன்சூரன்ஸ், மத்திய அரசு, அல்லது பணியில்லாத வசதியுள்ள பெண் பிராமின்/பிராமின் கலப்புள்ள சைவ குடும்பம் எதுவும் சம்மதம். பெட்டி எண் : 11229

* Alliance invited for Iyer Boy Brahacharanam, Krithika, B.Com., 31, 5'.6", 3000 pm., Administrative Assistant in a Private firm, Bangalore wanted girl from decent family background. Box No. 11230

* Alliance from SSLC Iyer girl for Keralite Iyer, Brahacharanam, Kousika, Revathi, 40, 170 cms, 1400/- Private firm Madras, unencumbered Legal divorcee. Reply with horoscope and family details to Box No. 11231

* Gavara Naidu, age 45, Central Government Office employee, salary 3000, good charactered, divorcee wealthy bridegroom needs Naidu fair educated charactered family bride age 25-36.Apply horoscope to Box No. 11232

* Iyengar, unencumbred divorcee, Koundinya upper division clerk 31/170/Kettai at Delhi seeks alliance from Brahmin girls. Box No.11234

• துளுவ வெள்ளாளர், பி.ஈ., 31 வயது, நல்ல நிறம், 5'.9", உத்திராடம், 3-ம் பாதம், பெங்களூரில் தனியார் நிறுவனத்தில் மேலாளராக பணிபுரியும் வசதியுள்ள மணமகனுக்கு, அழகான பட்டதாரியான பெண்ணின் ஜாதகமும், குடும்ப விவரமும் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11235

• வடமாள், பாரத்வாஜம், பூரட்டாதி, 35/5'.8"/5500, B.Com., CAIIB, வட ஆற்காடு மாவட்டம், பம்பாயில் ஸ்டேட் பேங்க் ஆஃப் இந்தியாவில் வேலை செய்யும் ஒரே பையனுக்கு மணமகள் தேவை. பையனுக்கு பம்பாயில் சொந்த வீடு. தகப்பனார் ஓய்வு பெற்ற ரெயில்வே அதிகாரி. ஐயரில் உட்பிரிவுகள் சம்மதம். குடும்ப விவரம் ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11236

• சௌராஷ்டிரா சமூகத்தைச் சேர்ந்த எஸ்.எஸ்.எல்.சி., படித்து மாதம் ரூ. 4000/- சம்பாதிக்கும் பத்திர விற்பனை செய்யும் 32 வயதுள்ள வசதியான மணமகனுக்கு (மவுஞ்சாயன கோத்திரம்) சௌராஷ்டிரா மணமகள் தேவை. பெட்டி எண் : 11237

• மறுநாட்டுப் பிரஹசரணம், சங்க்ருதி கோத்திரம், 5'.8" உத்திரம், 32, பி.ஏ., 4000, சென்னை ஏ.ஜி. அலுவலகத்தில் செக்ஷன் ஆபீஸராக வேலை பார்க்கும் வரனுக்கு வேலையில் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்த அழகுள்ள பட்டதாரி மணமகள் தேவை. பெட்டி எண் : 11238

• ஸ்ரீவத்ஸ கோத்திரம், வடமாள் ஹஸ்தம், 28 வயது, 5'.4", நல்ல நிறம், மெடிகல் ரெப்ரெசென்டேடிவ் பையனுக்கு அரசு வேலையோ அல்லது பேங்க் வேலைக்குச் செல்லும் பெண் வரன் தேவை. ஜாதகம் குடும்ப விவரத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11239

* Wanted employed Tamil Girl for Thengalai Iyengar, Srivatsa, Pooradam, boy 33, 155 cm, 1500, PUC, working in MRF sister concern. Vadagalai no bar. Contact with horoscope to Box No. 11240

* Abudhabi based protestant handsome well to do groom 28/165/30,000 requires qualified beautiful girl from decent family. Reply full details to Box No. 11241

* Vadamal Naithrupa Kasyapa, Rohini, Sales Engineer Dubai 28/175 DME, MBA, (part time), PGDCA wants graduate girl Steno/Computer/B.Ed., willing to work at Dubai. Subsects no bar. Box No. 11242

• இந்து ஆதிதிராவிடர், 30 வயது, 170 செ.மீ. உயரம், இந்தியன் ஏர்லைன்ஸில் பணி, சம்பளம் ரூ. 4000/- மணமகனுக்கு அதே இன மதம், படித்த வேலையிலுள்ள/வேலையில்லாத அழகுள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11243

* Horoscope invited, Iyer, Vadama, Vathoola, Swathi, M.E, Distinction Diploma Computer, age 27/5'.8"/5000 lecturer MGR Engineering College, suitable B.E., P.G. employed girl from decent family. Box No. 11244

• பிராமின், பி.எஸ்ஸி., 26/175, பையனுக்கு சொந்த பிஸினஸ், நல்ல பரந்த மனப்பான்மையுடன் பிஸினஸில் கைதூக்கி விடக்கூடிய வகையில் உதவி செய்யும் நோக்கத்துடன் உள்ள பெண் தேவை. சிறிது உடல் ஊனம் இருந்தாலும் பரவாயில்லை. விதவைகள், விவாகரத்து ஆனவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண் : 11245

* Vadamal, Kousika, Pooradam (seventh house Sevvai & Rhaghu) B.Com., ACA, 35 years, 168 cms groom seeks graduate/post-graduate, employed/un-employed fair, height 155cms & above girl. Apply with horoscope and bio-data to Box No. 11246

• வெள்ளாள முதலியார் குழந்தைகளில்லாமல், விவாகரத்தான வயது 41, உயரம் 5'3" பி.யு.சி. படித்த தனியார் கம்பெனியில் மாதம் ரூ. 3000/- சம்பளம், சென்னையில் சொந்த வீடும், வாடகை வருமானமுள்ள மணமகனுக்கு, அதே இனத்தைச் சேர்ந்த பெண் தேவை. விரைவில் திருமணம். பெட்டி எண் : 11247

* Alliance invited from Telugu/Tamil girls employed in Banks (preferably inIndian Bank) prepared to come to Rural Areas for Telugu Brahmin Boy. Bank Officer 28 years Rs. 5500. Harithasa Gothram. Mirugasirisham. Job non-transferable to Madras. Box No. 11248

* Brahachranam, Koundinya Maham, B.Sc., B. Pharm, 182 cm, Rs. 5000/- working in Pharmaceutical Company Raipur based propertied boy seeks alliance from graduate, good-looking decent family. Sub-sect no bar. Apply to Box No. 11249

* Wanted good-llooking employed girls for Madras based divorcee Naidu boy 162/38/M.A.P.G.D.M.M./5500 p.m. propertied and without encumberances. widow/caste no bar. Simple marriage desirable to Box No. 11250

• ஐயர், பிரஹசரணம், கௌண்டன்யம், மிருகசீரிஷம், 5'.8", எஸ்.எஸ்.எல்.சி./37, ரயில்வேயில் Class IV சம்பளம் ரூ. 2500/- +2 படித்த வேலைக்குச் செல்லும்/செல்லாத பெண் தேவை. பெட்டி எண் : 11251

• வடமாள்/கௌண்டின்ய/கேட்டை/33/165 செ.மீ./பி.எஸ்ஸி./4000/பப்ளிக் லிமிடெட் கம்பெனி (Quasi Govt), சொந்த வீடு உள்ளது, இவ் வரனுக்கும் வசதிக்குறைவான நல்ல குடும்பத்தைச் சேர்ந்த படித்த பெண் குடும்ப விவரத்துடன் எழுதவும். பெட்டி எண் : 11252

• வடமாள் ஐயர், தமிழ் 43 வயது, எம்.பி.பி.எஸ். டாக்டர் மணமகனுக்கு தகுந்த டாக்டர் அல்லது போதிய வசதி படைத்த விவாகரத்தான, தாரமிழந்தவர் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11253

* Ashtasahasram, Koundinya, Krithgai B.Com./29/170/2600 employed Central Govt. seeks Madars based employed girls. Subsect acceptable send horoscopes to Box No. 11254

* Vadama (Sukla Yajus) B.Com., boy employed Nationalised Bank, Erode, Srivatsam Avittam, Sudda Jadagam, perfect habits Religious minded 38 salary Rs. 4000 other properties, height 5'.3" Apply with horoscope family details to Box No. 11255

• யாதவர், சிவப்பு நிறம், பட்டதாரி, வயது 40, தாரமிழந்தவர், குழந்தையில்லை, சைவம், பிரபல கம்பெனியில் வேலை சம்பளம் ரூ. 4000/- வேறு தொழிலும் உண்டு. வீடு நிலபுலன்கள் வசதிகள் உண்டு. இவருக்கு 33 வயதுக்குள் மணமகள் தேவை. பெட்டி எண் : 11256

• வடமாள், உயரம் 5.7", ஆத்ரேய கோத்திரம், வயது 28, படிப்பு பி.ஏ., கார்பரேட், சொந்தத் தொழில், உத்திரட்டாதி நட்சத்திரம் பையனுக்கு மணமகள் தேவை. பெட்டி எண் : 11257

* Wanted Iyer bride working or studying in U.S.A. for boy B.Tech., M.S., working in U.S.A. age 28, Avittam, Koundinya Gothram. Box No. 11258

• ஐயர் வடமாள் ஆத்ரேய கோத்திரம், ரோகிணி நட்சத்திரம், பி.யு.சி. 36 வயது, 5'.4", தனியார் கம்பெனியில் வேலை, மாத வருமானம் ரூ. 1750/ சென்னையில் வேலை பார்க்கும் குணமுள்ள பெண் தேவை. எந்தவிதமான எதிர்பார்ப்பும் கிடையாது. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11259

* Vadama, Athreya Gothram, Karthika, boy aged 34, height 5'.10", working in U.A.E. seeks a good looking, homely girl from middle class family below 28 years. Reply with horoscope to Box No. 11260

* Vadama, Kashyapa, Aswathy boy, aged 30 height 5'.6" working in a reputed Limited Company as Supervisor in Cochin seeks a good looking, fair, homely girl from a decent family below 26. Reply with horoscope to Box No. 11261

• ஐயர், வடமாள், வடஆற்காடு, வாதூல கோத்திரம், ரேவதி, 27/5.8/2000/- எம்.காம்., கடலூரில் தனியார் நிறுவனத்தில் வேலையில் உள்ள பையனுக்கு, வேலையில் உள்ள/வேலைக்குச் செல்லக்கூடிய பட்டதாரி வடமாள் பெண் தேவை. பெட்டி எண் : 11262

• வடமாள் கௌண்டின்ய, 35, 2000/- 5'.5" அஸ்வதி, பி.யு.சி., புரொபஷனல் அக்கௌண்டெண்ட் ஆக இருக்கும் பையனுக்கும், சகோதரர் பூரட்டாதி, 2000, 28, 5'.9" செவிடு மற்றும் ஊமை நிரந்தர வேலையில் இருக்கும் பையனுக்கும் வேலையில் இருக்கும் பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். நட்சத்திர பொருத்தமும் எளிய முறையில் திருமணமும் போதுமானது. சிறு ஊனமுடையவர் சம்மதம். பெட்டி எண் : 11263

* Alliance for Bombay based Tamil Mudaliar, Non-vegetarian professionally qualified 35/175/9000, Innocent divorcee without encumberance and liabilities from broadminded Mudaliar, Pillai girl below 31. Subsects acceptable. details horoscope invited to Box No. 11264

• தெலுங்கு பிராமின் (முலகநாடு) பாரத்வாஜா, திருவோணம், 6' உயரம், வயது 29, M.Com., B.G.L. தமிழ்நாடு அரசில் ஆடிட் இன்ஸ்பெக்டர் வரனுக்கு மத்திய (அ) மாநில அரசு பணியில் உள்ள 26 வயதுக்குள் பெண்கள் மட்டும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11265

* Tamil Iyer, Brahacharnam, Moudgalya Moolam Boy employed Central Public Sector undertaking clean habits. D.E.E.E (AMIE) 27/170/3400 invites alliance from Pious soft natured religious understanding and domestically well trained girls. employed preferred, not must. Reply with full particulars and horoscope to Box No. 11266

• வயது 35, எம்.ஏ., ரூ. 4000/- உயரம் 5'.8" நல்ல வேலையிலுள்ள ஜாபாலி/மிருகசீரிஷம் மணமகனுக்கு வடகலை/தென்கலை பிரிவு 24 முதல் 30 வயதுக்குள், சிவப்பான, அழகான, பட்டதாரி மணமகள் தேவை. தந்தை சௌராஷ்ட்ரா பிராமணாள்/தாயார் தமிழ் வடகலை ஐயங்கார். பெட்டி எண் : 11267

• வடமாள், கௌண்டின்ய, திருவாதிரை 31/7000/M.Sc., M.Ed., PGDCA, முதுகலைப் பட்டதாரி ஆசிரியராக வேலை பார்க்கும் சொந்த வீடுள்ள ஒரே அழகான, நல்ல குணமுள்ள பையனுக்கு தகுந்த வேலை பார்க்கும்/பார்க்காத மணமகள் தேவை. பெட்டி எண் : 11268

• வடமாள் ஐயர் ஹரித கோத்திரம், புனர்பூசம், சம்பளம் ரூ. 7000/- மதராஸில் அரசாங்க கம்பெனியில் வேலை செய்யும் விவாகரத்து பெற்றவருக்கு 40 வயதுக்கு மேல் வேலையிலோ அல்லது வேலையில்லாத பெண்கள் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11269

* Wanted employed girls in Bank/Insurance/Central Govt. for smart, fair, graduate good looking, Brahacharanam, 35, Uthiram, Tamil Iyer boy employed in Bank at Alwaye, Ernakulam. Contact to Box No. 11270

• வடகலை, வாதூல கோத்திரம், பூராடம், வயது 27, HDFC-ல் ரூ. 4300 வேலை பார்க்கும் பி.காம்., பட்டதாரி வரனுக்கு நல்ல உத்தியோகத் தில் உள்ள படித்த பெண் தேவை. பையனுக்கு 7-ல் செவ்வாய் (பரிகார செவ்வாய்) தோஷமில்லை. தென்கலையும் சம்மதம். பெட்டி எண் : 11271

• இந்து நாடார் M.Com., RBV, PG., கேரளா, புனலூர் தனியார் நிறுவனத்தில் ரூ. 2300/- சம்பளம் பெறும் ஒரே பையனுக்கு அதே இனத்தில் டிகிரி படித்த தென் பகுதியைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11272

• வடமாள், விசுவாமித்ர கோத்திரம், சதயம், 5'.6", பி.காம்., பட்டதாரி, மத்திய அரசு வேலை ரூ. 3000/- மராட்டிய மாநிலம் புனாவில் சொந்த வீடு, அம்மா அப்பாவுக்கு ஒரே பிள்ளை, வயது 27, திருமணமாகி 45 நாட்களில் பிரிந்து விட்ட ஐயர் பையனுக்கு தகுந்த மணமகள் தேவை. (உட்பிரிவுகள் சம்மதம்) ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11273

• சைவ வெள்ளாளப் பிள்ளை, வயது 28, ஐ.டி.ஐ. படித்து, ராணிப்பேட்டையில் பிரபல தனியார் கம்பெனியில் பணிபுரியும், சம்பளம் ரூ. 2500/- பெறும் மணமகனுக்கு, படித்து வேலையிலுள்ள அல்லது வேலையில் சேரும் வாய்ப்புள்ள அழகிய மணமகள் தேவை. ஜாதகத்துடன் விவரம் அளிக்கவும். பெட்டி எண் : 11274

* Affluent fair, good-looking graduate bride more than 22/150, fluent in english for fair Asaiva Pillai MBBS doctor, 28/168/10,000 with clean habits. Horoscope and caste no bar. send biodata to Box No. 11275

* Balija Naidu groom 25 Electrical graduate fair, tall, well placed in reputed private sector alliance invited from well placed family preferred bride graduate around 21 plese respond with horoscope to Box No. 11276

• கௌசிகம், வடமாள், கார்த்திகை, ரிஷப ராசி, B.Com., DEM, வயது 39, ஜோசியம், சுய தொழில் ஸ்கிரீன் பிரிண்டிங், மாத வருமானம் ரூ. 2000/- பிராமண பையனுக்கு வேலைக்குச் செல்லும் பட்டதாரி பெண் தேவை. பிரஹசரணம் என்ற பிரிவும் சம்மதம். இதில் விருப்பம் உள்ளவர்கள் ஜாதகம், குடும்ப விவரங்களுடன் எழுதவும். பெட்டி எண் : 11279

• இந்து ரெட்டியார், 26, 5'.8", பி.ஈ., 6000 ரூ பெறும் வசதியுள்ள மணமகனுக்கு நல்ல அழகுள்ள, பட்டப் படிப்பு படித்து (வேலையிருந்தால் பரவாயில்லை) இல்லாமலிருந்தாலும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11280

• காஜுலு பலிஜா 28/DEE./172 செ.மீ., மாநிறம், அசுவினி 1-ம் பாதம், தனியார் கம்பெனி ரூ. 2000/- மிக்க நல்ல பழக்க வழக்கங்கள் கொண்ட, Upper Middle Class பையனுக்கு தக்க மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 11281

* Non-Moudhgalya, Vadagalai, Fair, home-loving graduate girl below 25 for boy Aswini, very fair, 30/165 cm/EDP Executive Muscat visiting Madras Feb '95. Box No. 11282

* Vanniyarkula Kshathriyar (Padayachi) boy, aged 30, 5'.3", working in Insurance Company at Tirunelveli salary Rs. 3500/- p.m. alliance invited from same caste working or non-working girls. Box No. 11283

• நாயுடு, AMIE, 37 வயது, 162 செ.மீ., Own Business, Electronic, Electrical, and home-appliances, goods shop, சொந்த வீடு உள்ள மணமகனுக்கு, நாயுடு இனத்தைச் சேர்ந்த நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 11284

* Alliance invited from employed/un-employed girls below 28, from Mudaliar, Pillai, Chettiar (Veg) for well propertied Mudaliar boy 30, tall, very fair, handsome. employed at Railway Protection Force as constable/writer 2500/- (Cent. Govt) Apply with horoscope, early marriage.Also contact Phone No. 77456-Erode. Box No. 11285

• ஐயர், சோழியான், விஸ்வாமித்திர கோத்திரம், ஆயில்யம், ஆகஸ்ட் 64, 165 செ.மீ., B.Sc., PGDCA, Accountant (permanent), reputed firm, 3000, கோவை ஜில்லா வரனுக்கு படித்த குணமான ஐயர் பெண் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண் : 11286

• ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸ கோத்திரம், சித்திரை நட்சத்திரம், வயது 29, பி.ஏ. படித்து சென்னை யில் தனியார் கம்பெனியில் ரூ. 2500/- சம்பளம் வாங்கும் பையனுக்கு சென்னையில் வேலைக்குச் செல்லும் மணமகள் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11287

* Iyer, Vadamal, Bharathwajam, Aswini, B.Com., 5'.5", 35, 5000 Business Interior Decorator, furniture manufacture etc. seeks suitable alliance graduate 30 below respectabl family sub-sects acceptable. Detailss horoscope Phone : 4834218 to Box No. 11288

* Alliance invited from Govt/Bank employed girls for Tanjore Saiva Vellala Pillai boy of 29/160/2500/- State Govt., Poosam, same caste girls reploy with horoscope to Box No. 11289

* தஞ்சை சைவ வெள்ளாள பிள்ளை, வயது 30, உயரம் 5 அடி, பூரம், வசதியான குடும்பத்தைச் சேர்ந்தவர், சொந்த நிலங்களை கவனித்து வருகிறார். இவருக்கு இதே இனத்தைச் சேர்ந்த தஞ்சை, திருச்சி மாவட்டங்களைச் சேர்ந்த மணமகள் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 11290

* Wanted Non-Bharadwaja, Vadamal, preferably Palghat +2/graduate employed/unemployed girls under 26 years good-looking, fair complexion, well trained in domestic duties, for graduate boy 30 years, fair, tall, 172 cms, well employed with a hand-sum salary, Anusham Star, sun, moon, Khuja, Bhudha & Sukra in Vrichigam, Dhanur lagnam, Kethu in Dhanur, Sani in Makaram, Guru in Meenam, Ragu in Midhunam. Early marriage expected those parents interested. Contact : Mrs. Saraswathi, Plat No. 48, Main Road, Elango Nagar, Virugambakkam, Madras - 600 092.

* பம்பாய், எல்.ஐ.சி. டெவலப்மெண்ட் ஆபீஸர் மாத வருமானம் ரூ 10,000/- சொந்த வீடு, கார் வசதிகளுடன் கூடிய 29 வயது. திருநெல்வேலி தேவர் குலத்துப் பையனுக்கு, 5'.3"க்கு குறையாத உயரமும், 10வது வகுப்பு வரையாவது படிப்பும் அழகுடனும் கூடிய மணமகள் தேவை. (உட்பிரிவுகள் சம்மதம்) ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : Shri. Nataraja Thevar, A-18, Tulsi Parvathi, Opp : Kailash Nagar, Old Dombivli Road, Dombivli (West) - 421 202. Telephone : 0251-460416.

* Alliance invited for Boy Ashtasahasram/Koundinya Gothram/Anusham/29/B.Sc., MBA, 168, 6500/- Executive, Multinational concern, Madras from parents of girls below 24, well educated and employed preferred. Subsect no bar. Tel : 4839411. Contact : Mr. Umesh, 192/8, Sri Kalimagal Apartments, S.V. Lingam Salai, K.K. Nagar, Madras - 600 078.

* Alliance invited for Vellala Pillai Boy, Rohini Star, age 28, Height 5'.11", B.Com., own business in Bangalore seeks alliance graduate girls from good family, Send horoscope to G.M. Ganeshan, No. 24/3 Shivakrupa, 4th Cross, Papanna Block, Ganganagar, Bangalore - 560 032. Telephone : 3338239.

* எம்.காம்., வயது 27, உயரம் 175 செ.மீ., பிரபல தனியார் நிறுவனம், மாதம் ரூ. 4000/- நாயுடு, ஜாதி தடையில்லை, சொந்த வீடு, படித்த, அழகான, குடும்பப்பாங்கான பெண் தேவை. முகவரி : மா. தமிழ்செல்வம், தெ. 20, எம்.ஆர்.எம். அபார்ட்மெண்ட்ஸ், 7வது கிராஸ், ராம்நகர் தில்லைநகர் கிழக்கு, திருச்சி - 620 018.

* Alliance invited from graduate very fair, beautiful, domestically trained girls Iyer, Iyengar, Tamil speaking Madhwa, Marathi Rayar for Iyer Pooram 35, 179 cms Chartered Accountant looking younger very fair handsome Pious clean habits, well to do owning flat Bombay innocent divorcee unencumbered, no bar status, Contact Mr. Sivasankaran, A6 Mira, 2nd Floor, 21st Road, Chembur, Bombay - 400 071.

*Iyer, Brahacharanam, Kousikam, Pooram, 29/168cms, 2500/- Central Govt. wanted graduate employed girl, central, LIC, Public Sector. Subsect acceptable. Contact: M. Ramaswamy, 167, Sayee Nagar, IInd St, Madras - 600 092.

* சைவ வேளாளர், வயது 31, தனியார் துறை, மாதம் ரூ. 2500/- வருமானம் (எம்.ஏ. எம்.பில்.) மணமகனுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த மணமகள் தேவை. முகவரி : எஸ். குமார ராஜா, தெ. 20, நேதாஜிதெரு, அன்னை இந்திரா நகர், வேளச்சேரி, சென்னை - 42.

* Seek educated bride for D.E.E. Engineer 29/175/ 5000/- working in Larsen & Toubro Maravar/Nair Tamil parentage Indian Orgin Srilankan permanently settled in India. Caste no bar. Contact : C. Ram, 6/13, IndiraNagar, Sholinghur - 631 102, N.A.A. Dt.

* Vadakalai, Athreya, 28 years, M.A., 167 cms, 2000 p.m. needs graduate employed bride. Contact : Sri. R. Kuppuswamy Iyengar, 15, Kalaignar Road, Srinivasa Nagar, Perunkalathur. Pin - 600 063.

* சைவ வெள்ளாள மணமகனுக்கு டி.எம்.ஈ. முதல் வகுப்பு, வயது 27, பரணி, சென்னை பாடியில் சொந்தமாக 5 வருடமாக மெஷின் ஷாப் நடத்துதல் மாத வருமானம் 3000/- இதே இனத்தைச் சேர்ந்த உத்தியோகத்தில் உள்ள என்ஜினியரிங் டிப்ளமோ முடித்த/என்ஜினியரிங் தொழில் துறையில் ஈடுபட்டுள்ள பெற்றோருடைய பெண் தேவை. முகவரி : ப. வைத்திய நாதன், 143, வடக்கு வீதி, திருவையாறு - 613 204.

* செங்குந்த முதலியார், பூசம், 29 வயது, சிவந்த நிறம், 5'.5", டெக்ஸ்டைல்ஸ் மற்றும் ஃபைனான்ஸ் மாதம் ரூ. 7000/- முதலியார் வகுப்பைச் சேர்ந்த (இயன்றால் கோவை மாவட்டம்) மணமகள் தேவை. முகவரி : P. வஜ்ரவேலு, 21ஏ, பூபதி நகர், அயனாவரம், சென்னை - 23.

* Alliance invited for Iyer, Koundinyam, Anusham, 33, 170 cms, graduate, Rs. 5000/- TVS Group at RAMPUR (U.P.) contact : P.C. Dhandapani, Aishwarya Avenue, 50/4, T.M. Maistry Street, Vannanthurai, Madras - 600 041.

* வடமாள், பாரத்வாஜ கோத்திரம், புனர்பூசம், 31 வயது, பி.எஸ்ஸி., மத்திய அரசுப் பணி, நாசிக் கரன்சிநோட் பிரஸில் வேலை பார்க்கும் பையனுக்கு பட்டதாரி பெண் தேவை. பிரஹசரணம் சம்மதம். ஜாதகம் விவரத்துடன் அனுப்ப வேண்டிய முகவரி : M.S. Sethuraman, Type II B-10, I.S.P. Quarters, Gorewadi, Nasik Road, P.O. 422101. Maharashtra State.

* Alliance invited from employed Iyer girl Govt. undertakings/corporations, public sectors for Vathima, Kousiga, Revathi, 5'.6", fair, B.Com., 29 years Govt. Madras, Rs. 3500/- having Govt. quarters. Subsect no bar. Reply to : R. Balu, D-Block No.13, Foreshore Estate, Madras - 6 00 028.

* கார்காத்த வெள்ளாளர், வக்கீல், வயது 32, 180 செ.மீ., மணமகனுக்கு டிரான்ஸ்பர் செய்யக் கூடிய, நிரந்தர அரசு அல்லது இதர அலுவல் புரியும் மணமகள் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். ஜாதகம் இதர விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். முகவரி : P. பாண்டித்துரை (அட்வகேட்), 120, பஜார் சாலை, சைதாப்பேட்டை, சென்னை - 15. போன் : 457794.

* மணமகள் வயது 34, (06.02.60) ரோஹிணி, 180 செ.மீ., Adm. Asst. Diploma, Nederlands Citizen, நற்பண்பு, உயர்சைவ வேளாள முதலியார், பிள்ளை, வன்னியர் குலத் தொடர்புள்ள குடும்பம். அழகிய உடற்கட்டமைப்பு, உயரம், கலாரசனை,

அன்பு, நேர்மையுடன் சிக்கனமாகவும், நீண்ட கூந்தலுடனும் உள்ள பெண் விரும்பத்தக்கவர். வரதட்சணை தேவையில்லை. மனப் பொருத்தமே பிரதானமென்பதால், மணமகன் நேரடியாகவும் விண்ணப்பிக்கலாம். முதற்கடிதம் முழு விவரத்துடன் அனுப்பவும். முகவரி : G. S. Maniam, Verbeeten Str-31A, 4812XH Breda, Nederland.

• Alliance invited from parents of fair, good-looking Brahmin girls for a self employed Palghat bachelor boy. Brahacharanam, Kettai, Garga Gothram, 165, 31 years horescope agreement obligatory. Apply with horoscope and details of family background. Contact : Shri. V.V. Viswanatha Iyer, Vadakkencherry Village, P.O. Vadakkencherry, Palkkad, Kerala State, Pin : 678 683.

• Alliance invited from parents of fair good-looking graduate Brahmin girls for a self employed Palghat bachelor boy. Brahacharanam, Swathy, Garga Gothram, 175, 32 years horoscope agreement obligatory. Apply with horoscope and details of family background. Contact : Shri. V. V. Viswanatha Iyer, Vadakkencherry Village, P.O. Vadakkencherry, Palakkad, Kerala State, Pin : 678 683.

• கைக்கோள முதலியார், 34 வயது, B.Sc., B.E.H., Dip. in L.W. சிவப்பு, அழகு, சொந்த வீடு, அச்சக அதிபர் எவ்வித கெட்ட பழக்கமுமில்லாத மணமகனுக்கு அதே இன (உட்பிரிவுகள் செவ்வாய் தோஷம் சம்மதம்) கவர்ன்மெண்ட், செகண்டரி கிரேடு டீச்சர், வொர்க் அல்லது வசதியான குடும்பத்திலிருந்து, மணமகள் தேவை. கோவை, பெரியார் மாவட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு முன்னுரிமை. முகவரி : K. பாலசுந்தரம், 62-B, சீனிவாச வீதி, உடுமலைப்பேட்டை - 642 126.

• ஆயிரவைசிய நகரம், வயது 29, உயரம் 165, சொந்த ஜவுளிக் கடை, சொந்த வீடு நிலம் உள்ள, நல்ல வசதியுள்ள மணமகனுக்கு அழகும், படிப்பும் உள்ள நல்ல குடும்பப்பாங்கான மணமகள் தேவை. முகவரி : S. Gunasekaran, Sri Roopam Silks, Opp. Nataraja Theatre, Elampillai - 637 502. Salem District. Phone : 0427-491789.

• வல்லியர் செட்டியார், 46, பி.யு.சி. 155 செ.மீ., 60 கிலோ, பிஸினஸ், 8000/- வகுப்பைச் சேர்ந்த மையனுக்கு அதே இனத்தில் மணமகள் தேவை. முகவரி : திரு. அய்யப்பன், C/o வெற்றி ஏஜென்ஸீஸ், 271, பேப்பர் மில்ஸ் ரோடு, பெரம்பூர் - 600 011.

• ஐயர், வடமாள், பாரத்வாஜ கோத்திரம், வயது 27, எஸ்.எஸ்.எல்.சி. சொந்த வீடு, நல்ல வசதி, ஒரே பிள்ளை, இந்த வரனுக்கு எஸ்.எஸ். எல்.சிக்குள் படித்த, வேலைக்குச் செல்லாத, நடுத்தரக் குடும்பத்தில் நல்ல குணமும், சிறந்த குடும்ப நிர்வாகமும், அழகும், சிவந்த நிறமும் உள்ள மணமகள் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி : எஸ். கணேசன், 14/4 ரங்கப்ப மேஸ்திரி தெரு, அயனாவரம், சென்னை - 600 023.

• வடமாள், கௌசிகம், ஆயில்யம், எஸ்.எஸ். எல்.சி., 32, 170, 2000 Pvt. Construction Firm செவ்வாய் தோஷமுள்ள வரனுக்கு, பட்டதாரி மற்றும் வேலையில்லாத செவ்வாய் தோஷமுள்ள பெண் ஜாதகங்கள் வரவேற்கப்படுகின்றன. முகவரி : ஆர். கல்யாணராமன், 14, காமகோடி தெரு, ராம்நகர், அம்பத்தூர், சென்னை - 600 053.

• சௌராஷ்டிரா, பி.எஸ்ஸி., 29, ரூ.5000/- அழகும் அனுபவமுள்ள கிழக்கிந்திய நிறுவனங்களின் உரிமையாளருக்கு வேலையில் உள்ள குடும்பப் பாங்கான அழகுடன் சௌராஷ்டிர மணமகள் ஜாதகத்துடன் எழுதவும். முகவரி : பாப்புலர் கன்சல்டன்ஸி, சூர்யா ஆடியோ விஷன், பழனியம்மாள் காம்ப்ளக்ஸ், 106/7, பிரகாசம் வீதி, ஈரோடு - 638 001.

• Mudaliar boy, age 38, B.Com., CAIIB, Nationalised Bank, Clerk, 6400/- Pooratathi seeks graduate well employed girls send horoscope & family details to R. Vijayakumar, No. 47, 48th Street, Ashok Nagar, Madras - 60 083. (week days after 6.00 p.m. only).

• Alliance invited from government employed South Indian girls working in Delhi for Iyer Boy Brahacharanam star Visakam, Thullam Rasi 33 years, 3500/- Public Limited, non-graduate. Contact with horoscope Mr. Krishnaswami, 9, Deeshidar Stores, New Street, Lalgudi - 621 601.

• Thenkalai Iyengar, Viswamitra, Pooradam, M.A./36/1600 Steno employed in private firm seeks educated employed Brahmin bride. Contact with horoscope to Sri. P. Sitaraman Plot No. 9 B Macmillan Colony, Nanganallur, Madras - 61.

• Vadama, Koundinya Moolam B.Com., 30, 167 fair good personality having property employed in Private Company, Calcutta decent income seeks fair graduate employed bride, send horoscope. no demands details contact : Sri. S.Rajaraman, 17, M.M. Avenue, Conjeevaram - 631 501.

• Tamil Viswakarma (goldsmith) Public Sector, Bangalore 27, M.Com., 5'.9", 3500 seeking employed graduates working in PSUS, Banks, State Govt. willing to settle in Bangalore on transfer around 24 years Contact : V.R. Chandramohan, 62, I Floor, Lakshmana Mudaliar Street, Bangalore - 560 001.

• வடமாள், ஸ்ரீவத்ஸம், 33 வயது, ரூ. 2000/- மாத வருமானம், தனியார் கம்பெனியில் நிரந்தர வேலையிலுள்ளவருக்கு வேலைக்குச் செல்லும், ஐயர் மணமகள் தேவை. முகவரி : Shri. K. Rammohan, No. 10, 8th Street, Nanganallur, Madras - 600 061.

• வெள்ளாள பிள்ளை, துலா, ஸ்வாதி, வீடியோ, துணிக்கடை வியாபாரம் அவருடைய (37 வயதுக்கு மேலான தோற்றமும், முடி குறைவான, தீய பழக்கம் ஏதுமில்லாத மணமகனுக்கு எளிய குடும்பத்தைச் சேர்ந்த மணமகள் தேவை. வரதட்சணை தேவையில்லை. ஜாதிபேதமில்லை. முகவரி : என். ராமநாதன், 368, கபாலீஸ்வரர் நகர், நீலாங்கரை, சென்னை - 600 041.

• Vadama, Srivatsam, SSLC, Bharani, business, 33, Rs.3000/- 5'.4", seeks employed girl, apply with bio-data & horoscope to Gowri Sridharan, 23B Sowcar Street, Ilango Nagar, Madras - 600 053.

• Iyer, Brahacharanam, Srivatsam, Bharani, 33 years, SSLC, own Hosiery business at Tiruppur Rs. 4000 seeks bride from middle class family. sub-sect no bar. simple marriage. Contact : N.V. Iyer, C-302, Pratik Apartments, Ramachandra Nagar - 3 Thane (West) - 400 604. Tel : (022) 5336678.

• Kerala Iyer, Vadama, Srivatsam, Visakam, 33, 178, Doctorate, life sciene, America, delaware, employed, H,Visa. similar/professionally qualified states based Iyer girls preferrd. Mr. Krishnier, B-16, Satyasheel, Chembur, Bombay - 400 089. Tel : 5521191

தொடர்ச்சி 184-ஆம் பக்கம்

கதவைத் தட்டும் சத்தம் கேட்டு அலமு விழித்துக் கொண்டாள். போர்வையை அகற்றிவிட்டு எழுந்தாள். அப்பா மூலையில் தூங்கிக் கொண்டிருந்தார்.

"டேய் வைத்தி..."

ராதா வாத்தியாரின் குரல்தான்.

அவசரமாகக் கதவைத் திறந்தாள்.

குறுந்தாடியுடன் ராதா சாஸ்திரி நின்றார். அவருடைய ஸ்தூல சரீரத்திற்கு ஒவ்வாத மோபட் நிறுத்தப்பட்டிருந்தது.

"டேய் வைத்தி, இன்னுமா தூக்கம் எழுந்திருடா முண்டம்."

சாஸ்திரிகளிடம் எப்போதும் அதிகாரி த்வனிதான். அப்பா சுருட்டிக் கொண்டு எழுந்தார்.

"வாங்கோ, காலங்காத்தாலே யார் ஆத்திலே...."

# கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன்



"மாரட்பல்லி நாரயணன் மாமி ராத்திரி மண்டையப் போட்டு விட்டார். மள மளன்னு போய் காரியத்தைப் பாரு. நான் சந்திர மவுளியாத்து புண்யாகவசனம் முடிச்சுண்டு வர்ரேன்....!"

"எல்லாரும் வந்தாச்சா?"

"கடைசிப் பொண்ணு மட்டும்தான் பாக்கி. பெங்களூர் பிளேன்ல 9 மணிக்கு வர்ராளாம். மசமசன்னு புகையிலையை குதப்பிக்கிண்டு நிக்காம போய்ச் சேரு. இந்தா பணம் மூங்கில் சமானுக்கு."

"மாமா காப்பி சாப்பிடறேளா?" அலமு உபசாரம்.

"இப்பதான் ஸுப்ரபாதம் பாடியிருக்கு. எனக்கு நேரமில்லை...."

ராதா வாத்யார் குரல் ஓய்ந்தது. மோபட், சாஸ்திரிகளைத் தூக்க முடியாமல் முனகிய படி முன்னேறியது.

வைத்தி வெற்றிலைச் செல்லம் எனப் படும் பிஸ்கட் டப்பாவைத் திறந்து சீவலைப் போட்டுக் கொண்டார். முதல் போணி அது தான்.

அலமுவிற்கு இந்த அசிங்கம் கண்டு ஆத்திரம் வந்தது. அவருடைய அழுக்கு வேட்டி, மூன்று நாட்கள் ரோம வளர்ச்சி முகத்தில். எதுக்காக இந்த அவலத் தோற்றம்.

"காப்பியோட தோசை வாக்கட்டுமா? காரியம் முடிய எத்தனை நாழியாகுமோ?"

"போகும் போது பழையதை கரைச்சு சாப்பிட்டுப் போறேன்... போதும்....!"

சாவு என்ற ஈமச்சடங்கை எடுத்துக் கொண்டால் ராதா சாஸ்திரிகள்தான் நிர்வகிக்கும் உயர் அதிகாரி. சூத்திரதாரி. அவரது தர்ப்பையும் மந்திரமும் செத்த உடலின் ஆத்மாவிற்கு சிவலோகத்திற்கு வழி காட்டு கின்றன. வைத்தி அவருக்கு சிற்றேவல் புரியும் புரோகித அடுக்கில் நான்காம் வர்ண ஊழியன். அதற்கென்று ஒரு சவுண்டி முகம். ஓர் அழுக்குத் தோற்றம்.

அலமுவுக்குக் கோபம் கோபமாக வரும் எதற்காக அப்பா போயும் போயும் இந்தத்

**சுபஸ்ரீ**

தொழிலை மேற்கொண்டார்? பள்ளிப் படிப்பில் மனம் பற்றிடாதவன்தான் இப்போது வேத பாட சாலைக்குப் போகிறான். அதைப் பாதியில் விட்டு விட்டு புரோகிதத்தில் ருசி கண்டு இறங்கி விடுகிறார்கள். வைதீகத் துறைக்குக் கொஞ்சமாவது மதிப்பு இருக்கு. பொருளாதாரம் பலவீனமாக இருந்தாலும் பாடைக்குத் தோள்கொடுத்து பதிமூன்று நாட்கள் காரியத்திற்குக் கைகொடுத்து அந்த ஆன்ம விடுதலைக்கு உழைக்கும் 'ஒருத்த'னுக்கு சமூகத்தின் அலட்சிய நோக்குதான். நெற்றியில் எழுதி ஒட்டி இருக்கும் வறுமை. ஆனால் இந்த நடக்கும் பிணம் இல்லாவிட்டால் செத்த பிணத்திற்கு சாயுஜ்ய பதவி கிடைக் காது.

சமையற்காரன், பரிமாறுபவனுக்குக் கூட சமூகத்தில் ஒரு அந்தஸ்து இருக்கிறது. அடுப் படியில் வேகிற உடல். ஆனால் சாவுச் சடங் குக்கு முகம் கோணாமல் கரம் நீட்டும் வைத் திகளுக்கு 'நீயும் ஒரு மனிதனா' என்று கிரகஸ்தர்களின் நீசப் பார்வை! தெருவிலே காகிதம் பொறுக்கும் கோணிப் பையன் மாதிரி, 'எழவு' வைத்திகளும் ஒரு 'டிராப்-அவுட்'கள்.

கான்ஸரால் செத்துப் போன அப்பாவின்

பிணத்தை தொடக் கூசும், ஆஸ்திக்குரிய பிள்ளை. குளிப்பாட்டப்பட்ட சடலம் சொத சொத என்ற நீரில் கிடப்பதை இரு கை கொடுத்து லாகவமாகத் தூக்கி, பாடையில் வைக்கிற வைத்தி ஒரு அத்வைதி. பிணத்தின் பிணியை நினைத்து முகம் சுளிக்க முடியுமா?

அலமுவுக்கு 27 வயசாச்சு. அவள் பத்தாவது படிக்கும் போது அம்மா செத்துப் போனாள். பிறகு கல்வி தொடரவில்லை. ஓசி வாங்கிப் படிக்கின்ற தமிழ்ப் பத்திரிகைகளும் திரையருகே கடைசிக் கட்டண டிக்கட்டில் பார்க்கிற சினிமாக்களும்தான். எதிர் வீட்டுச் சொக்கநாதன் பொண்சாதியே 'அலமு இன்னைக்கு அபூர்வமா தமிழ்ப்படம்' என்று அழைத்து விடுவாள். சின்னத் திரை அவள் சந்தோஷங்களில் ஒன்று.

வைத்தி இருக்கிற செகந்திராபாத் ரெஜிமண்ட்டல் பஜார் ஒரு தமிழ்நாட்டு கிராமம் மாதிரி. சொக்கநாதன் வட ஆற்காடு முதலியார். சென்னையிலிருந்து நிஜாம் பாதுகாப்புக்கு வந்த ரெஜிமென்ட் சிப்பாய்களின் சந்ததி. இப்போது தெலுங்கு கலந்த கொச்சைத் தமிழ் பேசும் திராவிட இனம், அங்கு அதிகம். மதம் மாறிய கிறிஸ்துவ குடும்பங்களும் ஓரளவு உண்டு. ஒரே வீட்டிற்குள் மூன்று நாலு பகுதி இருக்கும். காமன் கக்கூஸ், பொதுக் குழாய்! சுகாதார சூழ்நிலை எப்படி இருந்தாலும் குறைந்த வாடகையும், ரயில்வே ஸ்டேஷனுக்கு அண்மையும் அந்த பஸ்திக்கு ஒரு மவுசு அளித்தன.

வைத்தி செத்த காரியங்கள் முடித்துக் கொண்டு அயர்ந்து ஓய்ந்து வரும் போதெல்லாம் வரவேற்பது வாசலில் கயிற்றுக் கட்டிலில் துயில் கொள்ளும் சொக்கநாதன்தான். இரு பையன்களுக்குக் கல்யாணமாகி மருமகள்கள் வந்த பிறகு சொக்கனின் அம்சதூளிகா மஞ்சம் திறந்தவெளி கயிற்றுக் கட்டில்தான். இரவு பத்து மணிக்கு மேல் அடுத்த சந்தில் இருக்கும் சாராயக் கடைக்குப் போய் இரண்டு மில்லி ஊத்திக் கொண்டு வந்தால் தான் ஒர்க்ஷாப் உழைப்பு வலியெல்லாம் போகும்.

"என்ன ஓய் வைத்தி, இன்னைக்கு எங்க மட்டை?" வைத்தி கால் அலம்பி உள்ளே வரும்போது சொக்கநாதன் கேட்பார்.

"டிராஜடி கேஸய்யா. மல்காஜ்கிரியிலே 30 வயதுப் பையன் ஸ்கூட்டர் விபத்து ஏற்பட்டு குடல் வெளியிலே வந்ததாம். அப்போலோவில் ஒரு மாசம் கிடந்தான். போயிட்டான். லக்ஷ ரூபாய் செலவழிஞ்சது என்ன புண்ணியம்! பாவம் பொண்சாதி இருக்காய்யா!"

"இந்த 13 நாளும் நீர் புகுந்தடிச்சு பணம் தட்டிடுவீர். மனுஷன் செத்தால் உமக்கு யோகம்."

"எனக்கு என்னய்யா லாபம் எல்லாம் சாஸ்திரிகள் அடிச்சிட்டுப் போவாரு. எனக்குச் சில்லறைதான். உமக்கு என்னய்யா, ரயில்வே ஒர்க் ஷாப்பிலே 'பஞ்ச்' அடிச்சிட்டு செய்யாத வேலைக்குப் போனஸ் வாங்குற அதிர்ஷ்டசாலி...."

வைத்தி குளிக்கிற ஓசை கேட்டு அலமு அரை குறை தூக்கத்தில் எழுந்து வருவாள். "நீ படுத்துக்க குட்டி, நானே எடுத்துப் போட்டு சாப்பிடறேன்..." ஒரு பரிவு இருக்கும். வெற்றிலை செல்லத்தட்டுடன் சொக்கநாதன் அருகே கடப்பைக்கல் தளத்தில் அமர்ந்து ஊர்க்கதை பேசிவிட்டுத்தான் வைத்தி படுக்கைக்கு வருவார். சில சமயம் முதலியார் தலைகாணிக்கு அடியில் 'மருந்து' பாட்டிலில் ஏதாவது சரக்கு மிச்சம் இருந்தால் வைத்தி பங்கு கொள்வார் பிணத்தோடு போராடுகிற வேலைக்கும் இதுதான் மாற்று.

"முதல்லே ஓம் பொண்ணுக்கு வழி பாரய்யா. சாவுக்கு உழைச்சு ஓம் மனசும் செத்துப் போச்சு. அதுக்கு வயசாச்சிலே..." என்று முதலியார் தூண்டுவார்.

'இந்தப் பொண்ணுக்கு எப்படி கல்யாணம் பண்ணப் போறேனோ' என்ற குற்ற



இப்பொழுது அனேகமாக எல்லா வீடுகளிலும் கேபிள் கனெக்ஷன் உள்ளது. பாதியில் கேபிள் டி.வி.யை 'ஆன்', செய்தால், என்ன படம் என்று தெரியாமலேயே இறுதிவரை, ஒருவித தவிப்புடன் பார்க்க வேண்டி உள்ளது. இதனை தவிர்க்க வீடியோ கேஸட் தயாரிப்பாளர்கள் நடுநடுவில் படத்தின் பெயரை அறிவிக்கலாமே!

– ஜெயா.

# புகழ்பெற்ற ஜோதிஷர், மந்திர சாஸ்திர நிபுணர் பண்டித காழியூர் ம.பத்மனாபன்



காழியூர்
ம. பத்மனாபன்

ஸத்யமேவ ஜயதே

பிரபல ஜோதிஷர் (பண்டித காழியூர் ம. பத்மனாபன்) காழியூர் ஸ்ரீனிவாசாச்சாரியாரின் மூத்த புதல்வரும், அவரால் ஜோதிஷ மந்திர சாஸ்திரங்களில் 45 வருட காலம் நன்கு தேர்ச்சியும், ஆசீர்வாதமும் பெற்றவரால் கீழ்க்கண்ட மகத்தான சக்தி வாய்ந்த யந்திரங்கள் சக்கரங்கள் தயாரிக்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| மஹாசுதர்சன யந்திரம் | (வெள்ளியில்) | ரூ.175/- |
| ஹனுமத் கவசம் | " | ரூ.175/- |
| ஸரஸ்வதி கவசம் | " | ரூ.175/- |
| மஹாலக்ஷ்மி கவசம் | " | ரூ.175/- |
| தனாகர்ஷண யந்திரம் | " | ரூ.300/- |
| லக்ஷ்மிநரஸிம்ம கவசம் | " | ரூ.200/- |
| மஹாலக்ஷ்மி சக்ரம் | " | ரூ.400/- |
| மஹாசுதர்சன சக்ரம் | " | ரூ.400/- |

இவை தவிர இன்னும் அநேகவிதமான யந்திரங்களும் கவசங்களும் விசேஷ பூஜா க்ரமப்படிக்கு தயாரித்து அனுப்பப்படும்.
வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்புத் தொகையையும்.D.D (Bank Draft) மூலம் அனுப்ப வேண்டும். தபால் செலவு தனி ரூ.50/-
கேட்லாக்கும் அனுப்பப்படும்.

மற்றும் சர்வாரிஷ்ட நிவாரிணி விபூதி ரூ.30.00; க்ஷேம ஸம்ரக்ஷணி குங்குமம் ரூ.30.00; விஜய தனாகர்ஷணி மூலிகை ரூ.25.00; வசீகரண அஞ்சனம் ரூ.25.00; சதாமூலிகா தூபம் ரூ.35.00.



எனது தந்தையார் அடியேனுக்கு மந்த்ரோபதேசம் செய்யும் காட்சி.

| | |
|---|---|
| கம்ப்யூட்டர் ஜாதகம் தமிழில் | [illegible] |
| கம்ப்யூட்டர் ஜாதகம் ஆங்கிலத்தில் | ரூ. 40.00 |
| ஆயுள் பலனுடன் | ...ரூ.175.00 |
| (ஜனன வருஷம், மாதம், தேதி, நேரம், ஊர் தேவை) | |
| ஜாதகத்தின் பொதுபலன்களை நேரில் சொல்வதற்கு | ... ரூ.35.00 |
| முகூர்த்தம் அல்லது விவாஹப் பொருத்தம் | ... ரூ.35.00 |
| விவரித்து எழுத | |
| ஆரூடம் 3 கேள்விகளுக்கு | ... ரூ. 25.00 |

## முக்கிய கவனிப்பு :

தபால் மூலம் வரும் எல்லா கடிதங்களும் வெகு கண்டிப்பாக பரம ரகசியமாக வைக்கப்படுகின்றன. எனவே எவரும் எம்மாதிரியான ஆந்திரிக ரகசிய விஷயங்களைப் பற்றியும் பயமின்றி எழுதலாம். மற்றும் இதர விஷயங்களுக்கு மேற்கண்ட விலாசத்திற்கு எழுதவும்.

வீட்டில் கிரக தோஷம், திருஷ்டி தோஷம், சல்லியம், வாஸ்து தோஷம், சங்கா தோஷம் மற்றும் எந்த விதமான தோஷங்களும் பாதியாமல் இருப்பதற்கு சுதர்சன ஹோமம், மஹா சுதர்ஸன சக்கரம், பிரதிஷ்டை செய்து தரப்படும். உள்ளூர் வாசிகளுக்கு மட்டும் செய்யப்படும். விவரம் வேண்டுவோர் நேரிலோ, தபால் மூலமாகவோ தொடர்பு கொள்ளலாம். சுபமஸ்து!

வேண்டுவோர்
கடிதத் தொடர்பு கொண்டு
விபரம் அறிந்து
பணம் அனுப்பி
சகல நன்மைகளும்
அடைவீர்களாக.

பிரபல ஜோதிஷர்
பண்டித காழியூர்
ம. பத்மனாபன்
"தபோநிதி"
நெ : 5, வித்யோதயா
முதல் மெயின் தெரு,
தபால் பெட்டி
எண் : 1411,
தி. நகர்,
மதறாஸ் - 600 017,
தென் இந்தியா
Phone : 8263814

சென்ற இதழில் ஒரு வாசகி இட்லியை டிசைனாக செய்யலாம் என்று குறிப்பிட்டிருந்தார். சாதத்தையும் அவ்வாறு செய்யலாம். சாதத்தை ஓரளவு கெட்டியாக பிசைந்து கொண்டு (எந்த சாதமானாலும் பரவாயில்லை) டிசைன் கிண்ணங்களில் அழுக்கி தட்டில் அப்படியே கவிழ்த்து விட வேண்டும். சாதம் உருக்குலையாமல் அப்படியே இருக்கும். கிண்ணத்தைத் தனியே எடுத்து விடலாம். சாதம் சாப்பிடாத குழந்தைகளுக்கு இவ்வாறு செய்து சாப்பிட வைக்கலாமே. ஏனெனில் அனுபவம் பேசுகிறது.

- பி. ஜானகி



மனப்பான்மை மேலோங்கும் வைத்திக்கு. தொழில் முறையால் பிராமண ஜாதியானா லும் கீழ் மட்டத்திலிருக்கும் தன் பெண்ணை எவன் கைப்பற்றுவான்? 30 வருடங்களுக்கு முன்பு தன் கல்யாணம் நடப்பதற்கே என்ன பாடு பட வேண்டி இருந்தது. 'புரோகிதன்' என்று ராதா சாஸ்திரிகள் ஸர்டிபிகேட்டை நம்பி அந்தத் தெலுங்கு ஏழை வைதிக பிராம ணன் பெண் கொடுத்தார். மகராசி அவளும் போய்ச் சேர்ந்தாள்.

அலமு 15 வயசிலிருந்தே காதலிக்கத் தொடங்கி விட்டாள். முதலில் எம்.ஜி..ஆர் படங்களாகத்தான் சேகரித்து வைத்திருந்தாள். பிறகு கமலஹாசனை வரித்தாள். ரஜனிக்கு ஏங்கினாள். விஜயகாந்த் கருப்பு என்றாலும் ஆக்ஷன் ஹீரோவை விரும்பினாள். சத்யராஜ் எம். ஜி. ஆர் ஸ்டைல் என்றாலும் ஏதோ வில்லத்தனம் இருந்தது: வேண்டாம். சரத் குமார் கூட அந்தக் கணக்குதான். பிரபு ஸ்தூல சரீரம் என்றாலும் கவர்ச்சி இருந்தது. குஷ்புவிடம் கொஞ்சுவது பிடிக்கவில்லை. தற்சமயம் பிரசாந்துதான் இளமையோடு இருக்கிறான். அவன்தான் அவளது ஹீரோ வைகாசி பிறந்தாலும் அலமுவுக்குக் கணவன் என்னவோ கிடைக்கப் போவதில்லை. அவ ளுக்கு அப்பா பேரில், அவரது தொழில் பேரில் கோபம் கோபமாக வரும்.

சமைக்க ஆரம்பித்தாள். வடாம் வறுக்கலாம் என்று இரும்புச் சட்டியை எடுத்தாள். அதைப் பார்க்கும் போதெல்லாம் அவளுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வரும். அந்த இரும்புச் சட்டியில் எண்ணெயை ஊற்றி கிரகஸ்தன் தன் முக நிழலைப் பார்த்து பிராமணனுக்குத் தானம் செய்தால் அவன் தோஷம் போகுமாம். இதைக் கையேந்தி வாங்க அப்பா! திரும்பிப் பார்க்காமல் போக வேண்டுமாம்! வெள்ளிச் சொம்பு, வேட்டி தானம் வாங்க-சாஸ்திரிகள்.

'அப்பா இருக்காரா' என்று கேட்டுக் கொண்டே உள்ளே வருகிறதே ஒரு அசடு. பெயர் பிச்சுமணி. இரண்டு கையும் பிராக்கட் மாதிரி வளைஞ்சு இருக்கும். மாயவரத்துத் தெருப்புழுதியில் அடிபட்டு பிழைப்புக்கு இங்கே வந்திருக்கிற இளைஞன். அப்பாவுக்கு உதவி. சங்கர் மந்திர் கட்டிப் போட்டிருக்கிற கோனேரி அபர காரிய மண்டபத்தில் எப் போதும் காணலாம்.

"சரி அவாத்திலே இருக்காரான்னு பார்க் கிறேன்..."

"எந்த வீடு?" சொக்கநாதன் மனைவி ஒருநாள் ரகஸியத்தை உடைத்தாள். "உங்க அப்பா ஏதோ ஒரு தெலுங்கச்சியுடன் தொடர்பு வச்சிருக்காராம்!" வருகிற வருமா னத்தில் இது வேற?

"27 வயதில் மலையா ஒரு பொண்ணு நிக்கிது. இவருக்குச் சின்ன வீடு கேட்குது. நீங்கதான் அந்த மனுஷனைக் கண்டிச்சு வையுங்களேன்" என்று சொக்கன் மனைவி கணவனிடம் முறையிடுவாள்.

"இது அவங்க சொந்த விஸயம்" முதலி யார் ஒதுங்கி விடுவார்.

"ஏண்டி நம்ம பிச்சு எப்படி?"

அப்பாவின் எண்ணம் அலமுவுக்குப் புரிந்தது. 27 வருடமாக இந்த அப்பாவின் வாழ்க்கையை, அவலத்தை, இழிவைக் கண் டாகி விட்டது. இதே மாதிரி இன்னொரு குழியில் தான் சமாதியாகத் தயாராக இல்லை. பிச்சு உள்ளே வந்தாலும் சட்டிப்புகை வாடை அடிக்கிறது!

அலமுவுக்கு அடுத்த வீடு ராமுலுவுடை யது. "எங்கப்பா நிஜாமுக்கு டிரைவர். ரோல்ஸ் ராய்ஸ் இவரு ஓட்டினாத்தான் நிஜாம் உக்காரு வாரு. ஒரு தடவை உடம்பு சரியில்லேன்னு ஒரு வாரம் போகலே. நிஜாமு ப்ரோகிராம் எல்லாம் ரத்து செய்திட்டாரு. இந்த ஸர்டிபி கேட் பாரு..." என்று பழம் பெருமை பேசுகிற ராமுலு. போஸ்டல் இலாகாவில் வேலை.

அவர் பையன்தான் கோபாலு. அத்லெ டிக். ரயில்வேயில் யாரையோ பிடித்து விளை யாட்டு கோட்டாவில் வேலை வாங்கிக்

கொடுத்துவிட்டார், நாயுடு. தமிழ்ப் பத்திரி கைகளை அவனிடமிருந்து பெற்று வந்து படிப்பாள் அலமு. வழவழ என்ற இங்கிலீஷ், சினி பத்திரிகைகளை ஆதுரத்துடன் புரட்டு வாள்.

'இந்தக் கோபுலுவை கட்டிக்கிட்டா என்ன?' அலமு சீரியஸாகவே நினைக்கத் தொடங்கி விட்டாள். அது முதல் அவள் அவனிடம் நாணம் பொங்கவே பேசுவாள். கரிய நிறம்தான். ஆனால் விளையாட்டு வீரனின் கம்பீரம் உண்டு.

காலையில் கோலம் போடும்போது, அவன் டிராக் ஸூட்டில் ரயில்வே மைதானத் திற்குப் பருத்த ஷூவுடன் புறப்படும்போது நிமிர்ந்து பார்க்கச் சொல்லும். மனத்திலே கற்பனைக் கோலங்கள்.

அப்பாவிடம் சொன்னால் முடித்துக் கொடுப்பாரா?

"அப்பா மடிசார் மாமி செத்துப் போயிட்டா...."

"என்னிக்கி...."

"இந்த வாரம்...."

"யார் உபாத்தியாயம்" அவரது குறிக் கோள் மரணம். சாவு கிராக்கி.

"ஐயோ அப்பா, இது விகடன்லே வர்ர தொடர்கதை, ஊருக்கெல்லாம் நன்மை பண்ணினா. கடைசியிலே போயிட்டா..."

"போடி அசடு, கதையா?"

மடிசார் மாமி மாதிரி யாராவது இருந்தா தனக்குக் கலப்புத் திருமணம் முடிச்சுத் தர மாட்டாளா? அலமு ஏங்குவாள்.

நாயுடு வீட்டில் டி.வி. பார்க்கச் சென் றாள். கோபாலு இருக்கிறான் என்று தெரிந்து கொண்டுதான்.

ஸ்ரீமதி நாயுடு ஒரு தட்டில் பலகாரம் வைத்து அலமுவுக்குக் கொடுத்தாள். ஒத்தைக் கட்டை, பொண்ணு. சரியா பொங்குதோ சாப்பிடுதோ இல்லையோ என்று கொஞ்சம் அன்பும் பச்சாதாபத்துடன் உபசரிப்பு.

"என்னம்மா நீ, அது போய் நம்ம வீட்டு பண்டம் சாப்பிடுமா?"

'கேட்டது கோபாலுவா? அடப்பாவி, நீ இன்னும் அடிமட்டத்திலேயே இருக்கிறாயா? உங்கள் வீட்டுப் பண்டம் சாப்பிடக் கூடாத உயர் ஸ்தானத்திலா இருக்கிறேன். இந்த இழிவு மனப்பான்மையை விட்டு, எப்போது என் கைத்தலம் பற்றி, என்னை ஆளப்போகிறாய்?"

அலமு வீட்டிற்கு வந்து குமுறி அழுதாள்.

அப்படியும் இப்படியுமாக அலமு வீட்டு வாசலை 'குரு' வந்து தட்டினான்.

அலமுவுக்கு அதிர்ஷ்டம் என்றார்கள்.

கோபாலுதான் காரணகர்த்தா. ரயில்வே ஆபீசில் ஊழியர் நலம் பேணும் இன்ஸ்பெக் டர் குருராஜ். நல்ல கிரேடில் இருந்தான். முதல் மனைவி தலைப் பிரசவத்தில் மறைந்து விட்டாள். இரண்டாவது கல்யாணம் என்று இன்னொரு இளவயதுப் பெண்ணை வர தட்சணையுடன் தேடாமல் ஒரு ஏழைப் பெண்ணை எடுக்க முன் வந்தது, அவனது மனிதப் பண்புதான்.

இரண்டாம் தாரம் என்று அலமுவிற்குக் கொஞ்சம் கசப்பாகத்தான் இருந்தது. ஆனால் வயது குறைவு. சந்ததியும் இல்லை. நல்ல உத்யோகம். மனசு சமாளித்துக் கொண்டது. பிச்சுமணி வந்தால் 'ஏலே பாருடா எங்க ஆத்துக்காரர்' என்று சொல்ல வேண்டும். ஆனால் இந்தக் கோபாலு மேல கொஞ்சம் கோபம்தான். நான் எப்படி உளமாற நேசித் தேன். ஒருநாள் இந்தப் பருவப் பெண்ணின் கையைப் பற்றிக் கொண்டு 'நானும் உன்னை லவ் பண்றேன்' என்று சொல்லலியே! உனக்கு மைதான ஸிங்கின் டிராக் என்ற ஒருதலை நோக்குதானா. ஆனால் அவன் பார்த்து முடித்த வரன் என்பதில் ஒரு திருப்தி.

ஆனால் ஒன்று. இறுதியாக இந்தச் சவண்டிக் கொத்தன் சூழ்நிலையிலிருந்து புதிய பாதை. 'சாவுக்குக் கை கொடுப்போம்' என்கிற இந்த இனத்திற்கு எப்போது விடுதலை? காலத்தை ஒட்டி ஆபத்பாந்தவா ஆம்புலன்ஸ் வந்ததோ பாடையைத் தூக் கிண்டு நடக்கிற காட்சி போச்சோ! அப்பா தோளெல்லாம் எப்படிக் காய்ச்சுக் கிடக்கிறது. தென்னை மட்டை, சட்டி, கயிறு, மூங்கில் திமுட்டல் என்றே இழவுடன் ஒன்றிப்போன வாழ்க்கை. அதற்கு 'முழுக்கு' போட்டுவிட்டு

கேழ்வரகு மாவில் அடை செய்தாலும், தோசை செய்தாலும் குழந்தைகள் சில சமயங்களில் சாப்பிட விரும்புவதில்லை. காரணம் சிறிது நேரத்தில் தோசை ஆறி விடுவதால் மிருதுவாக இருப்பதில்லை. ஆகவே இனி கேழ்வரகு மாவு ஒரு கப் என்றால் ஒரு கப் மைதா மாவும் கலந்து சீரகம், மிளகு, உப்பும் போட்டு தோசை வார்த்துப் பாருங்கள். எவ்வளவு நேரம் ஆனாலும் மிருது வாகவே இருக்கும். தேங்காய் சட்னியுடன் என் குழந்தைகள் ஒரு பிடி பிடிக்கிறார்கள். நீங்களும் இன்றே செய்து பாருங்கள்.

- பப்புது



உளுத்தம், அப்பளத்தை 4 துண்டுகளாகக் கிழித்து (பச்சையாக) வெந்தயக் குழம்பு செய்யும் போது போடவும். குழம்பு மணமாகவும், ருசியாகவும் இருக்கும்.

- கீதாஞ்சலி



மேளம் கொட்டுகிற வசந்த உலகிற்குச் செல்ல லாம். ஓசி டிவியும் பழைய சோறும், இருண்ட குகை வீடும் பச்சாதாப பரிவுகளும் இனி இல்லை.

குருராஜிற்கு ரயில்வேயில் விடுதி கொடுத் திருந்தார்கள். இரண்டு அறை, சமையல் கட்டு, வராந்தா என்று. அது அவளுக்கு மாளிகையாகத் தெரிந்தது. விடுதலையாகிய சிட்டுக் குருவி போல அவள் மனசு சிறகடித் தது. மனைவி செத்து ஒரு வருடமாகிக் காய்ந்து கிடந்தவனின் உத்வேகம் வெள்ள மாகப் பிரவாகித்தது. 15 வருடங்களாக பூத்துப் பருவம் மலர்ந்து மணம் வீசி மனசிலே மத் தாப்பு வண்ணங்களை வளர்த்து, அது வாடத் தொடங்கிய நேரத்தில் கணவன் கரம் பற்றிய பெண்ணின் கற்பனை நிரம்பிய வேகம்!

மின் மணி அடிக்கும் இசையோசையைக் கேட்டு அலமு கதவைத் திறந்தாள். குரு ராஜுக்கு இடியோசை போல் ஒலித்தது.

வாசலில் ரயில்வே ஆம்புலன்ஸ் வந்து நின்றது. கூடவே ஆஸ்பத்திரி 'பாய்'.

"ஸார் அந்த பத்தாம் நம்பர் கேஸ் போயிடுச்சி."

அவசர அவசரமாக உடை உடுத்திக் கொண்டு குருராஜ் அவளிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டான்! 'எப்ப வருவேனோ? நீ சாப்பிட்டுக்க....' சிவப்பு கிராஸ் ஏந்திய வெள்ளை வாகனம் குருவுடன் புறப்பட் டது.

வாசலில் அலமு திகைத்து நின்றாள். அடுத்த வீட்டு அம்மணி வாசலில் நின்றாள். அலமு விசாரித்தாள். "இவருடைய சினேகி தங்க யாராவது செத்திட்டாங்களா?"

"இருக்காது ட்யூடிலே போயிருக்காரு?"

அலமுவிற்குப் புரியவில்லை.

"ஆபீஸ் வேலைன்னா இந்த வண்டி ஏன் வருது..."

"உனக்குச் சொல்லவில்லையா? உங்க வீட்டுக்காரர் லாலாகூடா ரயில்வே ஆசுபத் திரியிலே வெல்பேர் இன்ஸ்பெக்டர். ஊழியரோ, உறவினரோ, செத்துட்டா வார்டு பாய்ஸ் அதை எடுத்துப் பனி அறையிலே வச்சிடுவாங்க. குருதான் போயி அவங்க உறவினரைச் சந்தித்து, பாடி சார்ஜ் எடுத் துக்கணும்."

அலமுவுக்கு வயிறு கலங்கியது.

"அவுட் ஸ்டேஷன் ஊழியர்னா அந்த ஊருக்கு பாடியை எடுத்துக் கிட்டுப் போக விரும்புவாங்க, ஆஸ்பத்திரியிலே சவப்பெட்டி ரெடியா இருக்கும். அதிலே பாடியை பாக் பண்ணிடுவாங்க, ஸ்பாய் வாலாக்கள். ஸ்டே ஷன் மாஸ்டரை சந்திச்சு பிரேக் வேன்ல இடத்துக்கு ஏற்பாடு செய்யணும். பாடி இருக்கிற வேன் அசுகாதரம்னு வேற சாமான் ஏத்த மாட்டாங்க காலி பிரேக் வேன் கேட்கணும். உறவினருக்கு 4 பேருக்கு பாஸு, அட்வான்ஸ் ரூ 500 தந்து வண்டியேத்தி விட்டு வருவாரு. தாவு தீந்திடும், எப்ப முடியும்னு எப்ப வருவாருன்னு தெரி யாது."

"எப்படி உங்களுக்கு இவ்வளவு விவ ரம்..."

"போன வருஷம் வரைக்கும் எங்க வீட்டுக் காரர் ஆஸ்பத்திரி போஸ்டிலேதான் இருந் தாரு. பொழுது விடிஞ்சா ஒரு சாவுதான், எழவு பிடிச்ச வேலை."

அலமுவிற்கு யாரோ ரத்தத்தைப் பெரிய குழாய் வைத்து உடலிலிருந்து உறிஞ்சுவது போல இருந்தது. மயக்க நிலை.

கைப் பிடித்த கணவனும் தந்தையைப் போல! ஆனால் இடம்தான் வேறு.

மதியம் களைப்புடன் குரு திரும்பினான். காலை அலம்பிக் கொண்டு உள்ளே வந்தவன் முதல் வேலையாக பாத் ரூமில் குளிக்கச் சென்றான்.

குளியல் அறைக் குழாயின் சலசலப்பு அவள் உள்ளத்தில் வெந்நீராகக் கொட்டி யது.

அப்பாவும் இப்படித்தான் குளிப் பார்.



# ஷோ கேஸ் பொம்மைகள்

நம் வீட்டு ஷோ கேஸில் நாம் செய்த பொருட்களை வைத்து அழகு படுத்துவதில் கிடைக்கும் பெருமையே தனிதான். பென்குயின் பறவை, கட்-அவுட், அலங்கார பொம்மைகளை நாம் எளிதாகச் செய்யலாம்.

## பென்குயின் பறவை :

**தேவையான உபகரணங்கள்:**
முட்டைத் தோடு, கண் சொட்டு மருந்து பாட்டிலின் மூக்கு நீண்ட மூடி, கறுப்புத் துணி, ஃபெவிகால்.



**செய்முறை :**

முட்டையின் குறுகிய பகுதியை லேசாக உடைத்து முட்டைக் கருவை வெளியே எடுத்துவிடவும். சொட்டு மருந்து பாட்டிலின் மூடியின் ஓரத்தில் ஃபெவிகால் தடவி முட்டையின் உடைந்த பகுதி யில் வைத்து ஒட்டிவிடவும். மூடியின் மேல் கண்போல் இரண்டு புள்ளிகள் இந்தியன் இங்க் கொண்டு வைக்கவும். கறுப்புத் துணியை இறக் கைகள் போல் வெட்டி முட்டைத் தோடின் இரு பக்கங்களில் ஒட்டவும்.
ஒரு சிறு சதுர அட்டையில் பென்குயின் பாதங்கள் வரைந்து அதன் மேல் சிறிது



கொலு நெருங்கிவிட்டது சகோதரிகளே! காலியான ரீஃபில்களையும், ஸ்கெட்ச் பேனாக்களையும் வீசி எறியாதீர்கள். பூங்கா அமைக்கும்பொழுது வேலியாகவும், ரீஃபிலின் உச்சியில் கலர் டைமண்ட் பாசியைச்செருகி வைத்தால் வண்ண விளக்காகவும் பயன்படுத்தலாம்.

- பி. ஞானவி

ஃபெவிகால் தடவி முட்டையின் அடிப்பகுதியை ஒட்டவும்.

## கட் - அவுட்

**செய்முறை :**

உங்களுக்குப் பிடித்தமான விளையாட்டு வீரரின் வண்ணப்படத்தை முழு சைஸில் (கையில் கிரிக்கெட் பேட், டென்னிஸ் பந்து போன்றவற்றைப் பிடித்துக் கொண்டிருக்கும் மாடலில்) வெட்டி எடுத்துக் கொள்ளுங்கள். இதன் பின்பகுதியில் மெல்லிய கம்பி ஒன்றை 'செல்லோ டேப்' மூலம் ஒட்டி விடுங்கள். கம்பியின் கீழ் நுனியை லேசாக வளைத்து மண் நிரப்பப்பட்ட தீப்பெட்டியினுள் நுழைத்து ஷோ கேஸில் வைத்தால் மிக அழகாக இருக்கும்.

## அலங்கார பொம்மை

**செய்முறை :**

8 செ.மீ. விட்டம் கொண்ட வட்ட வடிவ அடிப்பாகம் கொண்ட ஒரு துணிப்பை தைத்துக் கொள்ளவும். பையின் உயரம் 12 செ.மீ இருக்கட்டும். அதனுள் மரக்கடையில் கிடைக்கும் மரத்தூளை நிரப்புங்கள். 15 முதல் 20 செ.மீ. உயரமுள்ள சாதாரண பிளாஸ்டிக் பொம்மை ஒன்றை வாங்கி, அதன் இடுப்புப் பகுதி வரை மரத்தூள் பைக்குள் நுழைத்து பையையும் பொம்மையையும் சேர்த்து இறுகக் கட்டவும்.

மரத்தூள் பை வெளியே தெரியாத அளவில் பொம்மையின் நிறத்திற்கேற்றாற் போல் சம்கி வைத்து அழகிய பாவாடை ஒன்று தைத்து பொம்மைக்கு உடுத்தி விடுங்கள். சாதாரண ஒரு ரூபாய் பொம்மை மிக அழகாகக் காட்சியளிக்கும்.

- சி. எஸ். ரோஜா

சப்பாத்தி செய்து மீந்து போய்விட்டால் என்னதான் நாம் மாற்று ஏற்பாடு செய்தாலும் அது பயனற்றுப் போகிறது. அதையே நான் சாதாரணமாக பேப்பரைக் கிழிப்பது போல் தாறுமாறாகக் கிழித்து எண்ணெயில் பொரித்து எடுத்தேன். பின்பு அதில் சிறிது உப்புப் பொடி காரப் பொடி சேர்த்தேன். புது வகையான "சப்பாத்தி சிப்ஸ்" ரெடி. குழந்தைகளுக்குக் காரப் பொடி சேர்க்காமலும் இருக்கலாம்.

- திருமதி லக்ஷ்மி சிவகுமார்





'ரோட்டரி இண்டர்நேஷனல்' என்ற அமைப்பின் மூலம் பலதரப்பட்ட மக்களைத் தேர்வு செய்து பல வெளிநாடுகளுக்கு அனுப்புகிறார்கள். அங்குள்ள கலாசாரத்தைப் புரிந்து கொள்ளவும், நமது கலாசாரத்தை வெளிநாட்டினருக்குப் புரியவைக்கவும் இது பெரிதும் உதவுகிறது. இதில் இந்த வருடம் திருமதி வித்யா ஸ்ரீனிவாசன், திருமதி ராதாராணி உட்பட நான்கு பேர் கொண்ட ஒரு டீம் கனடா நாட்டிற்குச் சென்று வந்துள்ளார்கள். அவர்கள் சொல்வது :-

**திருமதி வித்யா ஸ்ரீனிவாசன், எம்.ஏ.பி.எச்.டி., (பேராசிரியை, சமூகவியல், வைஷ்ணவா கல்லூரி.)**

என்னைத் தேர்வு செய்யக் காரணமாயிருந்தது நான் எழுதிய 'கைவிடப்பட்ட பெண்கள்' என்ற தலைப்பிலான ஆராய்ச்சிக் கட்டுரைதான். இதில் நான் 270 பெண்களைப் பேட்டி கண்டு ஆய்வு செய்திருந்தேன். இங்கு கைவிடப்பட்ட பெண்கள் அதிகமென்றால், கனடாவில் கைவிடப்பட்ட குழந்தைகள் அதிகம். அங்கு பெண்கள் தன் முன்னேற்றத் திற்குத்தான் முன்னுரிமை கொடுக்கிறார்கள். அதற்குக் குழந்தைகள் தடையாக இருக்குமானால் அந்தக் குழந்தைகளைத் தனியாக விட்டு விலகி விடு கிறார்கள். குழந்தைகள் அனாதை யாகி விடுகின்றன. அதே சமயத்தில் பெண்கள் ரொம்பவும் கஷ்டப்படுகிறார்கள். வீட்டை யும் கவனித்துக் கொண்டு வெளியிலும் பெரிய பொறுப்பை வகிக்கும் போது சமாளிக்க முடிவதில்லை. பெண்களுக்குச் சம உரிமை இருக்கிறது. அதனால்தானோ என்னவோ

# அயல்நாட்டில் அவதிப்படும் குழந்தைகள்

விவாகரத்துக்கள் அதிகமாக இருக்கின்றன. நம் நாட்டுப் பெண்களின் பொறுமை, தியாக உள்ளம் அங்கு இல்லை. இந்தியா என்றவுடன் அவர்களுக்கு அரசியல் சண்டையும், வரதட்சணைக் கொடுமையும்தான் நினைவுக்கு வருகிறது. பிறகு நம் பண்பாட்டை விளக்கியதும் புரிந்து கொண்டு வியந்தார்கள். நான் பேராசிரியையாகவும், அதே சமயத்தில் பொறுப்பான இல்லத்தரசியாகவும் இருக்கிறேன் என்பதை அவர்களால் நம்ப முடியவில்லை.

**திருமதி ராதாராணி, எம்.எஸ்ஸி., பி.எட்., (ஆசிரியை (பௌதிகம்), பக்த வத்சலம் வித்யாசரம்.)**

**நா**ன் தங்கியதெல்லாம் வயதான தம்பதிகளின் குடும்பத்தினருடன்தான். வயதானாலும் ஒவ்வொருவரும் துடிப்பாக, சுறுசுறுப்பாக இருக்கிறார்கள். யாரும் சும்மா இருப்பதில்லை. நாங்கள் சைவம் என்றதும் அவர்களுக்குக் கவலையாகி விட்டது எங்களை எப்படி உபசரிப்பதென்று. பிறகு எப்படியோ சமாளித்து எங்களுக்கு விருந்து படைத்துத் திக்கு முக்காட வைத்து விட்டார்கள். கனடா நாட்டு மக்கள் எதையும் சேவையாக செய்கிறார்கள். நம் நாட்டில் வியாபார மனம் அதிகம். அங்கு பெண்கள் மிகவும் சுதந்திரமாக இருக்கிறார்கள். இந்தச் சுதந்திரம் அவர்களின் மணமுறிவிற்குக் காரணமாகி விடுகிறது. குழந்தைகளின் நிலைதான் மிகப் பரிதாபமாக இருக்கிறது. வயதானவர்களின் மனநிலை நம் நாட்டு மக்களின் மனநிலையை ஒத்திருக்கிறது. ஆனால் இப்போதைய குழந்தைகள் எதிலும் சுதந்திரம் வேண்டுமென்கிறார்கள். ஆனால் அன்புக்கு ரொம்பவும் ஏங்குகிறார்கள். பெற்றோரின் அன்பு கிடைப்பதில்லை.

அங்கு லஞ்சம் போன்ற முறைகேடுகள் இல்லாததால் எல்லோருக்கும் எல்லா வசதியும் கிடைக்கிறது. பள்ளிப் படிப்பு எல்லோருக்கும் இலவசம். கிண்டர் கார்டனிலிருந்து ஒவ்வொரு வகுப்பறையிலும் ஒரு 'லைப்ரரியும்' 'கம்ப்யூட்டரும்' உண்டு. இவ்வளவு வசதிகள் இருந்தும் குழந்தைகளின் படிப்பின் தரம், நம் நாட்டின் தரத்தை விட குறைந்ததாகத்தான் இருக்கிறது. இதற்குக் காரணம் குழந்தைகளை கவனிக்கப் பெற்றோர்களுக்கு நேரம் இருப்பதில்லை.

கல்லூரிப் படிப்பிற்குச் செலவு அதிகம். பள்ளிப் படிப்பு முடிந்ததும் பெற்றோரை விட்டுப் பிரிந்து விடுகிறார்கள். அதனால் கல்லூரியில் படிக்க அவர்கள் உழைக்க வேண்டியிருக்கிறது. தொலைக்காட்சிப் படங்களாலும், அளவுக்கதிகமான சுதந்திரத்தாலும் வழி தவறிப் போகிறார்கள். ஆசியர்களின் புத்திக் கூர்மையை அவர்களால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை. இந்தப் பயணம் மூலம் நான் நிறைய விஷயங்களைக் கற்றுக் கொண்டேன். என் தன்னம்பிக்கை வளர்ந்திருக்கிறது. மக்களின் மனங்களைப் படிக்க முடிகிறது. வெளிநாட்டு மோகம் உள்ளவர்கள் தங்களை மாற்றிக் கொள்ள வேண்டும். எங்கேயும் பிரச்னைகள்தான். கலாசாரத்திற்குத் தகுந்தாற்போல் பிரச்னையின் தன்மை மாறுபடுகிறது. அவ்வளவுதான்.

**- புஷ்பா ரமணி**

*விசேஷ தினங்களில் அதிக அளவில் சீடை, முறுக்கு போன்ற மாவு பட்சணங்கள் செய்யும் போது -*

*மொத்தமாக வேண்டிய மாவை பிசைந்து வைத்துக் கொண்டால், நேரம் ஆக ஆக மாவு புளித்து பட்சணம் சிவந்து விடும். பிரிஜ் வசதி இருப்பவர்கள், மாவை ஃபிரிஜ்ஜில் வைத்து, அவ்வப்போது எடுத்துக் கொள்ளலாம்.*

*மற்றவர்கள் பிசைந்த மாவை சிறு சிறு பகுதிகளாக பிரித்து, பாலிதீன் பைகளில், பால் கவர் உள்பட, தனித் தனியாக போட்டு, நீர் புகாமல் வாயை இறுக சணலால் கட்டி விடுங்கள். வாயகன்ற பாத்திரத்தில் குளிர்ந்த நீரை வைத்து அதனுள் பைகளைப் போட்டு, மூடி வைத்து விடுங்கள். ஒரு பையிலுள்ளதை சுட்டு எடுத்ததும், அடுத்த பையில் உள்ளதை எடுத்துக் கொள்ளலாம். பாத்திரத்தில் வைக்கும் ஜலத்தில் சில ஐஸ் கட்டிகளை போட முடிந்தால் மேலும் நல்லது.*

*- எஸ். பட்டம்மா*



விஜயலட்சுமி - ஆறுமுகம்



ராணி - கண்ணன்



# மனைவி அதிகம் சம்பாதிப்பதா?

நண்பர் ஒருவருடன் பேசிக் கொண்டு இருந்த போது, 'என் மனைவியின் சம்பளம் என் சம்பளத்தை விட கூடிப் போனதாலே அவளை வேலைக்குப் போக வேணாம்னு ராஜினாமா செய்யச் சொல்லி வீட்டிலே இருக்க வைச்சிட்டேன்' என்று ஏதோ பெரிய சாம்ராஜ்யத்தை கைபற்றி விட்ட சந்தோஷத்தில் சொன்னார். நமக்கே பெரும் அதிர்ச்சி. நம் நண்பர் போல மற்ற ஆண்களும் இருப்பார்களா என்று பார்த்து விட ஆர்வம் உண்டாகி விட்டது. உடனே கணவன் மனைவி இருவரும் சம்பாதித்து வருகின்றவர்களாக தேடிச் சென்று பார்த்து, கணவனிடம், 'உங்கள் மனைவி சம்பாதிப்பது உங்கள் மனதில் பொறாமை உண்டாக்குகிறதா? உங்களுக்கு மனைவி நம்மை விட அதிகம் சம்பாதிக்கிறாளே என்ற தாழ்வு மனப்பான்மை இருக்கிறதா?' - என்ற கேள்விகளைக் கேட்டோம். மனைவியிடம், 'நீங்கள் அதிகம் சம்பாதிப்பதால் உங்கள் கணவரை மட்டமாக நினைக்கிறீர்களா? உங்கள் கணவர் உங்களை விட அதிகம் சம்பாதித்தே தீர வேண்டும் என்று நினைப்பதுண்டா?' என்று கேட்டோம் -

## பத்மா - ராமானுஜம் தம்பதிகள் :

"நான் டி.வி.எஸ்லே வேலை பார்க்கிறேன். என் மனைவி பத்மா பஞ்சாப் நேஷனல் பேங்க்லே வேலை பார்க்கறாங்க. என் படிப்பு பி.எஸ்ஸி., அவங்க படிப்பு எம்.எஸ்ஸி. என் சம்பளம் மூவாயிரத்தி நானூறு. அவங்க சம்பளம் ஆறாயிரம். நான் பொண்ணு பார்க்கப் போன போதே, 'என் வேலை, சம்பளம், படிப்பு பற்றித் தெரிஞ்சு பூரண சம்மதத்தோட தான் என்னைக் கல்யாணம் பண்ணிக்கப் போறீங்களான்னு மனைவிகிட்டே கேட்டேன். அவங்க பேச்சு, அடக்கம் எனக்கும் பிடிச்சுப் போய்தான் கல்யாணம் நடந்தது.

இதுவரை எங்களுக்குள்ள ஒரு சின்ன தகராறு, கருத்து பேதம்.. கூட வந்தது கிடையாது. என் மனைவி சம்பளம் எனக்குப்

பத்மா - ராமானுஜம்



ஷகீலா - ஜமீர்



பெருமையாகத்தான் இருக்கிறது. எனக்குத் தாழ்வுமனப்பான்மையும் நிச்சயம் கிடையாது. மனைவியை விட சம்பாதித்தால் குடும்பத்திற்கு, குழந்தைகளுக்கு உதவியாக இன்னும் இருக்குமே என்ற எண்ணம் வேண்டுமானால் உண்டு. சம்பளம் முழுவதையும் என் மனைவி கிட்டே தந்திடுவேன். அப்பப்ப செலவுக்கு வாங்கிப்பேன்.

## பத்மா :

"அவரும் நானும் சரிசமம் என்றே நினைக்கிறேன். மட்டமாக நினைத்தால் நான் நல்ல மனைவியாக இருக்க முடியாதே! என் கணவர் பதவி ஓய்வு பெறும் போது கூட என் சம்பளத்தில் பாதியைக் கூட வாங்கி விட முடியாது என்று தெரிந்துதான் திருமணம் செய்து கொண்டேன். அவர் பேசினால் நான் தலையாட்டுவேன். நான் பேசினால் அவர் தலையாட்டுவார். எங்கள் இனிய குடும்பத்தில் கேள்விகளால் பிளவு உண்டாக்கி விட முடியாது." (சிரிப்பு)

## டாக்டர். ஷகீலா -

## டாக்டர் ஜமீர் பாஷா :

"இது எங்க சொந்த வீடுதான். ஆனா நாங்க இருக்கறது திருச்சியில். தில்லை நகரில் ஷாநவாஸ் மருத்துவமனை வைச்சு நானும் என் மனைவியும் நல்ல பெயர் புகழுடன் மருத்துவசேவை செஞ்சிட்டு வரோம். அவள் சம்பாதிப்பதை பார்த்து எனக்குப் பொறாமை வந்ததே கிடையாது. என் வருமானம்... உன் வருமானம்... என் இடம்... உன் இடம்னு நாங்க பிரிச்சுப் பார்த்துகிட்டதே கிடையாது. ஈகோ பிராப்ளம் ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கிட்டா எப்படி வரும்? நாங்க ஒருவரை ஒருவர் நன்கு உணர்ந்தவங்க. நான் அளவுக்கு மீறி பல இரவுகள் தூங்காமல் மருத்துவ ஆராய்ச்சி செய்வதை அன்போடு அடக்கி என் உடல்நலனை பாதுகாக்க ஆலோசனை சொல்பவள்தான் என் அன்பு மனைவி."

## ஷகீலா :

"திருச்சியில் முதன் முதலாக ஐநூறு லேப்ரோஸ்கோபி ஆபரேஷன்களை வெற்றிகரமாக செய்திருக்கும் உயர்மட்ட சாதனையாளரை எப்படி நான் மட்டமாக நினைப்பேன்? என் கணவர் நிறைய சம்பாதித்து எங்கள் குழந்தைகள் படிப்பிற்கு செலவழிப்பதை விரும்ப மாட்டேனா?" (சிரிப்பு)

## கிருஷ்ணமூர்த்தி - ராஜலட்சுமி :

"என் மனைவி முதலில் எந்த வேலையும் பார்க்கவில்லை. நான் போட்டோகிராப் -



மோகன் - உஷா



கிருஷ்ணமூர்த்தி - ராஜலட்சுமி

என் மனைவி தங்கம்னா தங்கம். கல்யாணம் ஆனதும் நாட்டியத்துக்கு முழுக்குப் போடும்படியாச்சு. வாயைத்திறந்திருப்பாளா ? என்னைப் போல முரட்டுக் கணவனோடும், இரட்டை வால்களான இரண்டு பசங்களோடும் ஏழு வருஷம் குடித்தனம் பண்ணியும், அவளுக்குள் இருந்த கலையுணர்வு அழியவே இல்லை.

இப்பதான் கொஞ்ச நாள் முன்பு, வீட்டுக்கு எந்த வாஷிங்மெஷின் வாங்கலாம்னு பேசிக்கிட்டு இருந்தோம். அவளோ சர்வசாதாரணமா ஒனிடா வாங்கலாமேன்னுட்டா ! என்னோட இன்ஜினியர் புத்தி சும்மா இருக்குமா ? சும்மா பேரைக் கேட்டு மயங்கக் கூடாது. ''டெமான்ஸ்ட்ரேஷன் பண்ணிக் காட்டச் சொல்லு. அக்கு வேறா ஆணி வேறா அலசிப் பாரு. அப்புறமா முடிவு பண்ணு'' என்று சொன்னேன் அவளுக்கோ ஒரே ஆச்சரியம்.



4 -வழி நீர் சுழற்சி

இரண்டு நாளைக்கு அப்புறம், ஆபீஸ் விட்டு வர்ரேன். குழந்தைகள் நமட்டுச் சிரிப்பு சிரிக்கின்றன. என் மனைவியோ தன்னிச்சையாக பரத நாட்டிய நிகழ்ச்சி நடத்திண்டிருக்காள்.

ஆஹா ! என்ன ஒரு வரவேற்பு ! என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை !

உணர்ச்சி பூர்வமாக, அபிநயத்தோடு ஒனிடா வாஷிங் மெஷினின் செயல்திறன் பற்றி அவள் விளக்கிக்காட்டினதைக் காண

## ஒனிடா வாஷிங் மெஷின்...
## பரத நாட்டியத்திற்குத் தந்தது புனர்ஜென்மம்.



கண் கோடி வேண்டும்! ''உன்னத சலவைக்கென, இணையற்ற 4-வழி நீர் சுழற்சி'' இருப்பதை அவள் தன் கைகளை நாலாபுறமும் விதவிதமாக மின்னல் வேகத்தில் ஆட்டின விதம், அதற்கேற்ப அவள் பின்னால் முன்னும் பின்னும் அசைந்த விதம் அனைத்தையும் கண்கொட்டாமல் பார்த்தேன்!

வேறு எந்த மெஷினிலும் இல்லாத, அழுத்தமான சலவை, சாதாரண சலவை, மென்மையான சலவை இவற்றுக்குள் கண்கூடாகத்தெரியும் வித்தியாசம் - இதையும் அவள் தன் அழகிய விழிகளை உருட்டியும், விரல்களை மடக்கியும், கைகளில் முத்திரைகளைப் பிடித்தும் விளக்கிக் காட்டினாள்.

அழுத்தமான/சாதாரண/மென்மையான சலவை

பிறகு ஒனிடாவின் விசேஷ ஹெவி-ட்யூட்டி மோட்டாரின் கட்டுறுதியையும் அதன் பயனாக அது பல ஆண்டுகள் தொல்லை இன்றி இயங்குவது பற்றியும் விளக்கிச் சொல்வதற்காக அவள்தன் தலைப்பை இடுப்பில் செருகிக்கொண்டு உடம்பை முழுக்க வளைத்து முழு பரத நாட்டியமே ஆடிக்காட்டினாள்.

அப்படியே நான் சரணாகதி ஆகி விட்டேன்! ''வா, இப்போதே போய் ஒனிடா வாங்கி வந்து விடுவோம்'' என்றேன்.

அம்மாவும், குழந்தைகளும் உடனே களுக்கென சிரித்தனர்.

கச்சிதமான, அழகான பொருள் ஒன்று திரைச்சீலைக்குப் பின் மறைந்திருப்பதை அப்போதுதான் கவனித்தேன். ஆஹா! அவள் ஏற்கெனவே வாங்கி விட்டாள். நான் யூகித்திருக்கணும். என் ஆறு வயது மகள் திரைச்சீலையை நகர்த்தி உற்சாகம் பீறிட கூறினாள். ''பெண் விடுதலை!'' நானும் என் மனைவியை நேசத்தோடு பார்த்துக் கூறினேன் ''இனிமே உனக்கு நிறைய நேரம் கிடைக்கும். உன் பரத நாட்டியத்தை மீண்டும் நீ உயிர்ப்பிக்க முடியும் என தோன்றுகிறது...''



# ஒனிடா

வாஷிங் மெஷின்

Avenues OW 106 94

வீடியோகிராப் தொழில் பார்த்துக்கிட்டு இருந்தேன். என் மனைவி ரொம்ப கெட்டிக்காரி. நானும் ஏதாவது வேலை பார்த்து சம்பாதிக்கிறேன்னு கேட்டா. சரின்னு சம்மதிச்சேன். எங்க மூத்த பையன் வித்யா சங்கர் பெயரிலே 'வித்யா கல்யாண அரேன்ஜ்மெண்ட்ஸ்'னு திருமண பொறுப்புகளை முழுவதும் ஏற்று நடத்தித் தரும் தொழிலை செய்யத் துவங்கினா. பம்பரமா சுற்றிச் சுற்றி கடுமையா உழைத்தாள். நிறைய ஆர்டர்கள் வந்து குவிஞ்சது. என்னை விட என் மனைவி நிறைய சம்பாதிக்க ஆரம்பிச்சா. அதைப் பார்த்து நான் பொறாமைப்படவில்லை. குடும்பச் செலவுகளுக்கு அவ சம்பாத்தியம் பயன்பட்டதுக்கு சந்தோஷப்பட்டேன். என் தொழிலில் எனக்குக் கிடைக்காத பெருமை... புகழ் அவளுக்குக் கிடைச்சதை பார்த்து எனக்கு ஈகோ உண்டாகவில்லை. தாழ்வுமனப்பான்மை வரல்லை. மனைவியை ஆழமா நேசித்தால் இதெல்லாம் எப்படி வரும்? என் மனைவியை விட சம்பாதிச்சு குடும்பத்திற்கு, குழந்தைகளுக்கு உதவ அவளுடைய தொழிலில் நானும் சேர்ந்துகிட்டேன். இப்ப ஏழு வருஷமா எல்லா ஊர்களுக்கும் போய் கல்யாணங்களை நடத்திக் கொடுத்திட்டு வரோம். இப்ப அவ சம்பாத்தியம் என் சம்பாத்தியம்னு இல்லாமல் ரெண்டு பேரும் சேர்ந்தே சம்பாதிக்கிறோம்."

## ராஜீ :

"நான் அவரை விட சம்பாதிக்க ஆரம்பித்த போது அவரை மட்டமா நினைக்கவில்லை. அவரை விட அதிகமா சம்பாதிச்சுகிட்டே இருக்கணும்னு நினைக்கலை. காரணம் அவர் அனுமதி தந்ததால்தானே என்னாலே எதையும் செய்ய முடிந்தது. அவர் மறுத்திருந்தால் நான் வீட்டு உள்ளேயேதானே இருந்திருப்பேன். அவர்தான் எனக்கு வழிகாட்டி எல்லாமே."

## மோகன் - உஷா :

"நான் தனியார் கம்பெனி ஊழியர். என் மனைவி அரசு ஊழியர். நான் பி.காம்., என் மனைவி எம்.எஸ்ஸி., என்னை விட என் மனைவிக்கு சம்பளமும் ஜாஸ்தி. அறிவும் ஜாஸ்தி. இதைச் சொல்வதில் எந்த கௌரவக் குறைவும் இல்லை. பதவி... அறிவு.. படிப்பு இதெல்லாம் இறைவன் கொடுத்த வரம். 'நான்தான் எல்லாம் தெரிஞ்சவன்'னு கணவனோ, 'எனக்குத்தான் எல்லாம் தெரியும்'ன்னு மனைவியோ இருந்தால் அதுக்குப் பெயர் குடும்பமே இல்லை. தெய்வம் கொடுக்கற திறமைகளை வைச்சு உயர்ந்தவர், தாழ்ந்தவர்ன்னு பேசறதில் அர்த்தமே இல்லை. நானும் என் மனைவியும் ஒருத்தரை ஒருத்தர் அன்பால் அடக்கி ஆண்டு கொண்டு இருக்கிறோம். அதனால் எங்களுக்குள்ளே தாழ்வு மனப்பான்மைங்கற பிரச்னைக்கே இடமில்லை. நாடக அனுபவம் உள்ள நான் சினிமாவில் ஹீரோ ஆகி லட்சக்கணக்கில் சம்பாதித்து இருக்க முடியும். ஆனால் என் மனைவி எனக்கு அன்பால் தடை போட்டார். இருவரும் சம்பாதிக்கும் போது கிடைக்கும் பணத்தில் எளிய.. இனிய குடும்பம் நடத்தினால் போதும். பரபரப்பான சினிமா வாழ்க்கை வேண்டாம் என்றாள். என் மனைவிக்காக சினிமா வாய்ப்பையே வேண்டாம் என்று ஒதுக்கி அவள் மனதில் உயர்ந்த ஸ்தானம் பெற்று விட்டேன். அது போதும்."

## உஷா :

"என் கணவர் என்னை விட திறமைசாலி. அவரை மட்டமாக நினைப்பது என்னை நானே மட்டமாக நினைப்பது போல் ஆகிவிடும். வீட்டிற்குத் தேவையான அளவு அவரும் நானும் சம்பாதித்தால் போதும். பேராசைப்பட்டு குறுக்கு வழிகளில் பணம் தேடி அல்லல் பட நாங்கள் விரும்பவில்லை."

### தயாரிப்பாளர்களின் கவனத்திற்கு...

**கடுகு தாளிக்கும் கரண்டியின் மேல், ஒரு மூடியைப் பொருத்தி அதை கரண்டியின் கைப்பிடியில் 'ரிவிட்' செய்து விட வேண்டும். இப்படிச் செய்வதனால் கடுகு வெடிக்கும் போது தெறித்து வெளியே எண்ணெய் ஆகாமல் இருக்குமே.**



**- பிரேமா ராமநாதன்**

விறகு அடுப்புகளில், விசேஷ தினங்களில் சமையல் செய்ய நேரும் சமயங்களில், உங்களுக்கும், அடுப் பிற்கும் இடையில் ஒரு வாயகன்ற பாத்திரத்தில் நிறைய ஜலம் வைத்துக் கொள்ளுங்கள், வேலை செய்ய இடைஞ்சல் இல்லாத வகையில். மேலே அனல் அடிக்காது. அடுப்பின் வெக்கையை பாத் திரத்தில் உள்ள நீர் வாங்கிக் கொள்வதால், தண்ணீர் தான் சூடாகும். சூடானதும், வேறு குளிர்ந்த நீர் மாற்றி விடுங்கள்.

- எஸ். பட்டம்மா



## ராணி - கண்ணன் :

"நாங்க லவ்மேரேஜ் - காதல் திருமணம் செஞ்சுகிட்டவங்க. எங்க காதல் தூய்மையா னது. ஆழமானது. உறுதியானது. அதனால நீங்க கேட்கற கேள்விகள் எங்களுக்கு எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது. நான் மேலவாசி வீதியில் 'ஒடியன் டிரேடர்ஸ்'ன்கற ஸ்டேஷ னரி ஷாப் நடத்திட்டு வந்த போது அருகே ஒரு கம்பெனியில் வேலை பார்த்த ராணியை அடிக்கடி சந்திச்சு அது காதலாக மலர்ந்து இரு வீட்டார் சம்மதத்தோடு திருமணம் நடந்து என் காதல் ராணி என் இல்லத்து ராணி ஆகி, என் பிசினஸ் ராணி ஆகவும் உயர்ந்து விட்டாள்.

1985 ஆம் ஆண்டில் எங்கள் திருமணம் நடந்ததும் ஏற்கெனவே ஸ்டேஷனரி தொழில் அனுபவம் இருந்த என் மனைவியின் பொறுப் பில் கம்பெனியைத் தந்து விட்டு நான் எல்.ஐ.சி. ஏஜெண்ட் ஆகி விட்டேன். என் மனைவி என்னை விட சிறப்பாகச் செயல் பட்டு கம்பெனி பெயர்.. புகழை உயர்த்தி வியாபாரத்தைப் பெருக்கி லாபம் என்னை விட சம்பாதித்துக் காட்டி விட்டாள். நான் பூரித்துப் போய் விட்டேன். பொறாமை ஏன் வரப் போகிறது? குடும்பத்திற்குத் தேவை பணம். அதை யார் அதிகம் சம்பாதித்தால் என்ன? அதில் எப்படி ஈகோ.. கோக்கோ எல்லாம் வரும்?

## ராணி :

"அவரை நான் மட்டமா நினைக்கறதா? அவர் தந்த பதவி. அவர் தந்த உயர்வு. அவர் என்னிக்குமே என் ராஜாதான். கூஜா இல்லை. என்னை விட அவர் சம்பாதிச்சே காட்ட ணும்னு போட்டி வைக்க குடும்பம் விளை யாட்டு அரங்கம் இல்லையே. அவர் குறைவா சம்பாதிக்கட்டும்னு நான் நினைப்பேனா. எந்தப் பெண்ணும் குடும்ப வருமானம் குறை வாகவே இருக்கட்டும்னு நினைப்பாளா. ரெண்டு பேரும் தலை ஆட்டி சம்மதம் சொல்லி காதலர்கள் ஆகி தம்பதிகள் ஆன தாலே ரெண்டு பேருமே தலையாட்டி பொம் மைகள்தானே?"

## விஜயலட்சுமி - ஆறுமுகம் :

"நான் பிரைவேட் கம்பெனி குமாஸ்தா. என் மனைவி கார்ப்பரேஷன் ஸ்கூல் டீச்சர். என்னை விட அவங்களுக்கு சம்பளம் ஜாஸ்தி. ரொம்ப கெட்டிக்காரங்க. பள்ளிக்கூடத்திலே கடுமையான உழைப்பாளி. நல்ல டீச்சர்னு பெயர் வாங்கி இருக்காங்க. எங்க கம்பெனி யில் பிரமோஷன் வாய்ப்புக் குறைவு. இன்கிரி மெண்ட் ரொம்பக் குறைவு. ஆனா என் மனைவி திறமையாலே அவங்க சம்பளம் உயர்ந்துகிட்டே போகுது. அவங்க பெயரைச் சொல்லி அவங்க வீட்டுக்காரர்னு சொன் னால்தான் என்னைத் தெரியும். அந்த அளவு அவங்க புகழ் இருக்கு. அதுக்காக எல்லை யில்லா மகிழ்ச்சி அடையறேன். அவங்க என் னுள் ஒருவர். அவங்க சம்பளம்.. புகழ் எனக்கு நல்ல பெயரை சமுதாயத்தில் வாங்கித் தந்திருக்கு. அப்படி இருக்க அவங்க மேலே நான் பொறாமைப்பட சான்ஸே இல்லை."

## விஜயலட்சுமி :

"எல்லா வகையிலும் என் கணவர் என்னை விட உயர்ந்தவராகக் கருதுகிறேன். அவரை மதிக்கிறேன். பூஜிக்கிறேன். உங்கள் கேள்விகளுக்கு ஒரே பதில் இதுதான். நான் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக திகழும் புனிதமான ஆசிரியர் பணி செய்பவள். நான் தவறாக செயல்பட்டால் சமுதாயமே பாதை மாறி விடும். அதை முழுமையாக உணர்ந்து மற்றவர்களுக்கு முன் உதாரணமாக நல்ல மனைவியாக வாழ்ந்து வருகிறேன்."

பேட்டி, படங்கள் :
**விஜயா கண்ணன்**

# அந்தப் பெண்ணையுமா கொடுக்க முடியும்?

சென்ற வருடம் மயில் மயிலாகப் போட்ட பாவாடைகள் அறிமுகமாகி எங்கு பார்த்தாலும் திமிலோகப் பட்டது. சினிமா கதாநாயகிகள் கூட அதைக் கட்டிக் கொண்டு ஆட்டம் போட்டார்கள். அதுவும் எம்பிராய்டரிதான். அதே போல இப்போது எங்கே பார்த்தாலும் டிசைன் ப்ளவுஸ்களும், எம்பிராய்டரி ப்ளவுஸ்களும்தான் ஆட்சி செய்கின்றன. முன்பெல்லாம் அது யுவதிகளுக்கு மட்டும்தான் என்பது போய், இப்போது நடுத்தர வயதுப் பெண்கள், ஏன் வயதானவர்கள் கூட போட ஆரம்பித்து விட்டார்கள். அந்த அளவிற்குப் பெண்களைக் கவர்ந்து விட்டன இந்த பிரிண்டட் மற்றும் பூவேலைப்பாடு ரவிக்கைகள்.

சென்னையில் ரவிக்கைத் துணிகளில் எம்பிராய்டரி செய்பவர்கள் வீணா டெக்ஸ்டைல்தான். இவர்கள்தான் முன்பு மயில் பாவாடைகளையும் அறிமுகம் செய்து வைத்தார்கள். இவர்களுக்கென்ன பூவேலைப் பாட்டில் இவ்வளவு மோகம்? இதன் மனேஜிங் டைரக்டரான இளவரசன் —

"காலத்திற்கேற்ப, பொருட்களை வாங்குவோரின் ரசனைக்கேற்ப நாங்கள் மாறுகிறோம். அவ்வளவுதான். புடவைக்கு விளம்பரம் என்பது போய் இப்போது ரவிக்கைத் துணிகளுக்கும் விளம்பரம் செய்ய வேண்டியதாக இருக்கிறது. தற்போது பிரிண்டட் மற்றும் எம்ப்ராய்டரி ப்ளவுஸ்கள் நிறைய வரவேற்பைப் பெற்றிருக்கின்றன. எனவேதான் எம்பிராய்டரி செய்கின்ற மிஷினையே நாங்கள் வாங்கிவிட்டோம்" என்கிறார்.

"ஆனால் சாதாரண ரவிக்கைத் துணிகள் போல இல்லாமல் இவை சுருங்குகின்றன,





சாயம் போகின்றனவே....?"

"உண்மைதான். சாதாரண ரவிக்கைத் துணியில் போடப்படும் பிரிண்டுகள் எல்லாமே போலித் தோற்றம்தானே. துணிமேல் ஒட்டவைக்கப்படுபவை. எனவே அவை சாயம் போக வாய்ப்புகள் உண்டு. சாதாரணமாக எல்லா துணிகளுமே 3% லிருந்து 5% வரை சுருங்கத்தான் செய்கின்றன. இவை அவற்றின் இயல்பு...."

"இவை நனைத்தால் சுருங்கிப் போய் விடுமே என லூஸாகத் தைக்கிறோம். ஆனால் புதிதாக ஏதாவது ஃபங்ஷனுக்குப் போகும் போது போட்டுக் கொண்டு போக வேண்டியதாக இருக்கிறதே... இந்த மாதிரி லூஸாக போட கஷ்டமாக இருக்கிறதே..."

கம்பெனி டைரக்டர்களில் ஒருவரான புஷ்பா இளவரசன் சிரித்தார். "என்ன செய்வது? இவற்றை நாம் ஒரு ஃபேஷனாக, விசேஷமான சந்தர்ப்பங்களில் பயன்படுத்தக் கூடியவையாக உபயோகிக்கலாம். ஆனால் இவற்றை மிகப் பெரும்பாலோனர் வாங்குகிறார்கள் என்பதற்கு எங்களுடைய 'டர்ன் ஓவரே' சாட்சி. அதிக அளவு விற்பனை உயர்ந்து இருக்கிறது...."

"... அதனால்தான் இதன் அடுத்த கட்டமாக எம்ப்ராய்டரி புடவைகளை அறிமுகப் படுத்தலாம் என்று இருக்கிறோம்...."

"அப்படியா..."

"ஆமாம். இப்போதும் சுடிதாரிலும், புடவைகளிலும் பூவேலைப்பாடு செய்கிறார்கள். ஆனால் இவை கைகளால் செய்யப்படுவதால் நாட்கள் அதிகமாகும். நிறைய பூவேலைப்பாடுகளும் செய்ய முடியாது. இவற்றையெல்லாம் கணக்கிட்டு விலையை





நாம் என்னதான் ஜாக்கிரதையாக இருந்தாலும் மாதவிலக்கு நாட்களில் பாண்ட்டியில் சிறிது கறை ஏற்பட்டு விடுகிறது. வெளி நாட்டிலிருந்து வந்திருந்த எனது சகோதரி கொண்டு வந்திருந்த நாப்கினில் விங்ஸ் என்று ஒரு பகுதி இருந்தது. அது இருபுறமும் பாண்ட்டியின் பக்கவாட்டை மூடி கீழ்வரை (வெளிப்புறம்) வருவதால் (ஒட்டிக்கொள்வதால்) மிகவும் பாதுகாப்பாக இருக்கிறது. இதை நம் தயாரிப்பாளரும் தயாரித்தால் மிகவும் உபயோகமாக இருக்கும்.

- லலிதா

நிர்ணயிக்கும் போது எங்கேயோ போய்விடும். தவிரவும் மக்கள் வாங்குகின்ற எண்ணிக்கை அளவிற்கு உற்பத்தி செய்யவும் முடியாது. ஆனால் நாங்கள் இயந்திரங்களின் மூலமாகச் செய்யும் போது எங்களால் அதிக அளவிற்கு இதைச் சாதிக்க முடியும்..." என்கிறார்.

அவர்களின் தொழிற்சாலையைச் சுற்றிப் பார்த்த போது இது உண்மை என உணர முடிந்தது. இவர்கள் வெளியிலிருந்து துணிகளை வாங்கி வேலைப்பாடு செய்வதில்லை. துணிகளையும் இவர்களே தயாரிக்கிறார்கள். தயாரிக்கும் முறையும் சுவையானதுதான்.

வெளியிலிருந்து வாங்கப்படும் தரமான நூலிழைகளை முதலில் பல்வேறு இயந்திரங்களின் மூலமாக நெய்வதற்குப் பதப்படுத்துகிறார்க்ள். நூலிழைகளை பெரும் இயந்திரங்களின் மூலமாகக் கஞ்சி போட்டு பின்னுவதற்காக மேலிழை, கீழிழை எனப் பிரித்து....

என்ன, 'சின்னச் சின்ன இழை
பின்னி பின்னி வரும்- சித்திர
கைத்தறிச் சேலையடி!'

எனும் பாட்டு நினைவுக்கு வருகிறதா? அப்படித்தான், ஆனால் எனக்கு வேறு சந்தேகம் வந்தது. இந்த இடத்தில்தானே டூ பை டூ, ஷிபான், கேம்ப்ரிக் எல்லாம் பிரிக்கப்படும்? "ஆமாம்" என்றார் இளவரசன்.

"நூறு, அறுபது, நாற்பது 'கவுண்ட்' எனக் கேள்விப்பட்டு இருப்பீர்கள். இவற்றினைப் பல்வேறு விதமாக இணைத்துத் தயாரிக்கும் போது பல்வேறு விதமான துணிவகைகளைக் கொண்டு வரமுடியும். டூ பை டூ என்பது நூறு கவுண்ட் நூலிழைகள் இரண்டை எடுத்து ஒன்றுடன் ஒன்றை முறுக்கித் தயாரிப்பது. வார்ப்பிலும், 'வெப்'பிலும் போடுவோம். அதாவது இரண்டு நூறு இழைகளை முறுக்கி நீளமாகவும் வரும். குறுக்கே பாவு பின்னப்படுவதும் அதே இரண்டு நூறு இழைகளை முறுக்கித்தான். இதைக் கையில் எடுத்து அழுத்திக் கசக்கினீர்களானால் 'கரகர'வென சத்தம் வரும். இது சரியான குவாலிட்டி.

இதை விட மிருதுவாக சாஃப்டாக இருப்பது ஷிபான். இது நீளவாட்டில் காட்டன் இழையை வைத்துக் குறுக்கில் பாலியஸ்டர் இழையை வைத்து நெய்வது. நூறு கவுண்ட்களை இரண்டு புறத்திலும் வைத்து நெய்வது தான் 'கேம்பிரிக்'.

டூ பை டூ நீண்டு உழைக்கக் கூடியவை. மற்றவையும் நல்லவைதான். அவையும் நன்கு மார்க்கெட்டில் செல்கின்றன. ஆனால் இன்றைய உலகில் வருடக்கணக்கில் யாரும் ஒரே ரவிக்கையை வைத்துக் கொள்ள விரும்புவதில்லை."

இப்படி வெவ்வேறு விதமாகத் தயாராகும் இழைகள் கஞ்சியில் மூழ்கி ட்ரையரான பெரிய பெரிய உருளைகளில் காய்ந்து 'மொட மொட' வென உருளைகளில் சுற்றப்படுகின்றன. இவை மீண்டும் துணி நெய்யும் இயந்திரங்களில் மாற்றப்பட்டு துணியாக நெய்யப்படுகின்றன. ரவிக்கைத் துணிகள் மட்டுமல்லாமல் இவர்களுடைய வீனா வேஷ்டிகளும் பிரபலமானவைதான். அவையும் அங்கே நெய்யப்படுகின்றன. அது மட்டுமல்ல அங்கே எல்லா அரசியல் கட்சியும் கூடியிருக்கிறது. ஒரு பக்கம் தி.மு.க., இன்னொரு பக்கம் ம.தி.மு.க மற்றொரு பக்கம் அ.தி.மு.க. புரியவில்லையா? அந்தந்தக் கரை போட்ட வேஷ்டிகள் தான் நெய்யப்பட்டுக் கொண்டு இருக்கின்றன. ஒரே இடத்தில் இவற்றைப் பார்க்கும் போது வேடிக் கையாக இருந்தது.

சரி, இப்படி துணியாக மாற்றப்பட்ட பிறகு முதல் வேலை போட்ட கஞ்சியையெல்லாம் அகற்றுவதுதான். இதென்ன வேண்டாத வேலை? போட்டது திரும்பவும் எடுப்பது...

"இல்லை, நூலிழைகளுக்குக் கஞ்சி போட்டு காயவைப்பது என்பது சாதாரண வேலையில்லை. ஒரு குறிப்பிட்ட நேரத்தில், தட்பவெப்ப நிலையில்தான் கஞ்சி போட முடியும். அப்போதுதான் அதில் முழுமையாகக் கஞ்சி பிடிக்கும். அப்படி கஞ்சி தோய்க்கப்பட்டு காயவைக்கப்பட்டுத் தயாராகும் நூலிழைகளைத்தான் நெய்ய முடியும். துணி நெய்ய இந்தப் பக்குவ நிலை அவசியம் தேவை. அப்புறம் கலர் போட மற்றவற்றிற்கு இவை தேவை இல்லை. எனவேதான்



# காஞ்சி கோயில் மணியோசை, ஒலிக்கிறது அண்ணாநகரில்...

காஞ்சி கூட்டுறவு சொசைட்டிகளின்
பட்டுப் புடவைகள் வண்ணக் களஞ்சியமாய்
அண்ணாநகரில் குவிந்துள்ளது,

**"அதுவும் சொசைட்டி விலைக்கே"**

**கா**ஞ்சீபுரம், திருபுவனம், ஆரணி, சேலம் மற்றும் கோவை நகரங்களிலுள்ள சிறப்புபெற்ற நெசவாளர் கூட்டுறவு சொசைட்டிகளின், பாரம்பரியத்தின் மேன்மையையும், கைத்தறி அற்புதங்களையும் ஒருங்கிணைத்து தயாரித்த பட்டு சேலைகள், காட்டன் சேலைகள் மற்றும் இல்லத் துணிவகைகள், முழுவதும் ஏர்கண்டிஷன் செய்யப்பட்ட, அண்ணாநகர் ஷோரூமில் விற்பனைக்காக குவிக்கப்பட்டுள்ளன.

வாருங்கள்! தறியிலிருந்து நேரடியாக வரவழைக்கப்பட்ட, 100% தூய ஜரிகை பட்டு புடவைகளை சரியான விலைக்கே வாங்குங்கள்.



தமிழ்நாடு கைத்தறி கூட்டுறவு
மார்க்கெட்டிங் காம்ப்ளக்ஸ்
(முழுவதும் ஏர்-கண்டிஷன் வசதியுடன்) (தமிழக அரசு நிறுவனம்)
2-வது அவென்யூ அண்ணா நகர் பிளாசா,
(ஐயப்பன் கோவில் அருகில்)
அண்ணா நகர், சென்னை - 600 040.



வாருங்கள்:

காஞ்சி கோ-ஆபரேடிவ் சில்க்
(தமிழக அரசு நிறுவனம்)
உம்மிடியார்ஸ் ஷாப்பிங் சென்டர், எல்.ஐ.சி. பில்டிங் எதிரில்
811, அண்ணா சாலை, சென்னை - 600 002. போன்: 8522453

**கைக்கெட்டும் தூரத்தில் கடையிருக்க — காததூரம் ஏன் செல்ல வேண்டும்?**

கஞ்சியை அகற்றி விடுகிறோம்..." என்கிறார் புரொடக்ஷன் மானேஜர் ஏ. பாலசுப்ர மணியன்.

கஞ்சியை நீக்க பிரம்மாண்டமான இயந்திரங்களில் சுற்றி நீர், சோடா மற்றும் இரசாயனப் பொருட்கள் கலந்த கலவையில் 16 மணி நேரம் சுற்ற வைக்கிறார்கள். முழுமை யாகக் கஞ்சி நீக்கப்பட்ட துணி பிறகு எட்டு மணிநேரம் அது எந்த வண்ணம் பூணப் போகிறதோ அந்த வண்ண மிஷினில் சுற்று கிறது. இப்படிக் காயவைக்கப்படும் துணி பல்வேறு வகையான இயந்திரங்களில் பதப் படுத்தப்பட்டு 'ஃபைன் ஃபினிஷிங்' குடன் வெளி வருகிறது.

இதற்கப்புறம்தான் வருகிறது நம்முடைய எம்ப்ராய்டரி டிபார்ட்மெண்ட். இவற்றை யெல்லாம் எம்பிராய்டரி மாஸ்டர் எம். தர்ம லிங்கம் சுற்றிக் காட்டினார்.

"முதலில் நாங்கள் என்ன டிசைனைப் போட நினைக்கிறோமோ அவற்றை ஆறு மடங்கு பெரிதாகக் கிராஃப் பேப்பரில் போடு வோம். பிறகு அவற்றை இயந்திரத்தில் பொருத்தி வரைய வரைய பஞ்ச்சிங் கார்டாக அந்த டிசைன் மாறும். வேறொரு பக்கம் மாடலுக்குத் துணிகளில் டிசைன்களும் வரையப்படும். அவற்றில் ஏதேனும் கோளாறு கள் இருக்குமானால் அப்பொழுதே சரி செய்து விடுவோம்."

இந்த டிசைன்களை இவர்களே உரு வாக்குகிறார்களா? அல்லது வேறு எங்கிருந் தேனும் பெறுகிறார்களா?

"நாங்களேதான் உருவாக்குகிறோம். எங்க ளிடம் ஆர்டிஸ்டுகள் இருக்கிறார்கள். அவர் களின் கைத்திறனில் உருவாகுபவைதான் இந்த டிசைன்கள். ஆனால் வெளியார் சில டிசைன் களைக் கொடுத்துச் செய்யச் சொல்லும் போதும் செய்து தருகிறோம்..."

இப்படி பஞ்ச் கார்டுகளில் பதிக்கப்படும் டிசைன்கள் மாபெரும் இயந்திரங்களில் பொருத்தப்படுகின்றன. அவற்றில் துணிகள் இழுத்துப் பொருத்தப்பட்டு ஆயிரக்கணக் கான ஊசிகளின் மூலம் பூவேலைப்பாடு களைப் போடுவதைப் பார்க்க கண்கொள் ளாக் காட்சியாக இருக்கிறது. சாதாரணமாகப் பெண்களின் கைகள் ஒரு பூவைப் போட அரைமணி நேரம் எடுத்துக் கொள்வார்கள். ஆனால் இயந்திரங்களில் ஒரே நேரத்தில் ஆயிரக்கணக்கான பூக்கள் மலருகின்றன. இயந்திரங்கள் போட 'மறந்து போகும்' (அந்த இடத்தில் இருக்கும் ஊசி இயங்காமல் போகும் போது) பூக்களை பெண்கள் தையல் இயந்திரங் களின் மூலம் நிரப்புகிறார்கள்.

ரவிக்கைத் துணிகள் மட்டுமல்லாமல், உள்ளாடைகளில் தைக்கப்படும் லேஸ்கள், சிலர் மேலே அணிந்து கொள்ளும் வேலைப் பாடுகள் அமைந்த துணிகள், வெளிநாடுகளில் 'சூட்'டிற்கும், பர்னிச்சர்களுக்கும் போடப் படும் துணிகள் எனப்பலவற்றிலும் இந்த எம்பிராய்டரிகள் போடப்படுகின்றன.

வெறுமனே ஒரே ரவிக்கைகள் அணிவது நிறைய குறைந்து விட்டது என்றே தோன்று கிறது. அந்த அளவிற்கு பூவேலைப்பாடுகள் கொண்ட துணிகளுக்கு வரவேற்பு இருக்கிற தாம். இதனால்தான் இவற்றை ஏன் புடவை களில் செய்யக் கூடாது என புஷ்பாவிற்கும், இளவரசனுக்கும் தோன்றியிருக்கிறது. சுடி தாரிலும் இவற்றைப் பெருவாரியாக அறி முகப்படுத்த நினைத்திருக்கிறார்கள். அப்படி நெய்யப்பட்ட சுடிதார்களையும், புடவை களையும் காண்பித்தார்கள். பாலியஸ்டர் புடவைகளில் அவை 'காண்ட்ராஸ்ட்' கலரில் பின்னப்படும் போது அவை புடவைக்கே ஒரு அழகிய தோற்றத்தைக் கொடுக்கிறது.

"வரும் நாட்களில் எம்பிராய்டரி சுடிதார் களும், புடவைகளும் நல்ல வரவேற்பைப் பெறும் என திடமாகவே நம்புகிறோம்" என் கிறார்கள் இவர்கள்.

கடைசியாக ஒரு கேள்வி கேட்டேன்.

"ஏன் சார் விளம்பரங்களில் பல்வேறு வகையான மாடல்களில் ரவிக்கைகளை விளம்பரப்படுத்துகிறீர்கள். நீங்கள் மட்டு மில்லை, எல்லோரும்தான். உதாரணத்திற்கு ஒரு வட்ட அமைப்பில் சிறு சிறு நாடாக்களாக இணையும் அழகிய பின்புற டிசைன். அதன் கை அமைப்பும் அற்புதமாக இருக்கிறது. ஆனால் உங்களால் அது போல சோளிகளை சப்ளை செய்ய முடியாது இல்லையா? அப் புறம் ஏன் அப்படி விளம்பரப்படுத்துகிறீர்கள்? இது வாங்குபவர்களை ஏமாற்றத்துக்கு உள் ளாக்குமே?"

"நோநோ, அது அப்படியில்லை. எங்க ளிடம் வாங்கும் தரமான துணிகளைக் கொண்டு இந்த வடிவங்களில் ரவிக்கைகளைத் தைக்கலாம் என ஐடியா கொடுக்கிறோம். இது எப்படி அவர்களை ஏமாற்றத்துக்குள் ளாக்கும். இப்போ ஃபிரிஜ் விளம்பரம் செய் கிறார்கள், பக்கத்தில் ஒரு பெண் நிற்பது போல. ஃபிரிட்ஜ் வாங்குபவர், அந்தப் பெண் ணையும் கேட்டால் கொடுக்க முடியுமா? அங்கேயும் தகராறு... வீட்டிலும் தகராறு தான்..." என்றார் பலத்த சிரிப்புடன். எல் லோரும் சிரித்து விட்டோம்.

**— பவித்ரா.**

படங்கள் : **ராஜு.**

அட்டைப்பட உதவி :

**டி.வி. ஃபிலிம் ஃபார். வீணா.**

## 8

ப்ரியா பிரேக் போட்டு நிறுத்த, மகா மிரண்டு பார்க்க,

"ஒன்றுமில்லை! முந்தின தெருவிலே திரும்பி இருக்கணும்" என்றாள் ப்ரியா.

கார் பின்னுக்குச் சென்றது.

அந்தத் தெரு வலதுபுறம் வந்தது. அதில் திருப்பி, வீட்டு எண்களைப் பார்த்துச் சென்று ஒரு வீட்டின் முன் ப்ரியா காரை நிறுத்தினாள்.

இருவரும் இறங்கினார்கள்.

காம்பவுண்டு சுவர், முனகும் கேட்டைத் தள்ளி உள்ளே போனார்கள்.

உள்ளே தள்ளி வீடு.

இருபுறமும் பாதி பட்டுப் போன தோட்டம்.

முகத்தில் தயக்கத்தோடு ஏறினார்கள்.

உள்ளே யாரும் தெரியவில்லை. ஆனால் வீடு முழுதும் பளிச்சென்று வெளிச்சம் வியாபித்திருந்தது.

"ஸார்" என்றார்கள்.

உள்ளே வீட்டின் அந்தரத்துக்குள் ஏதோ சலசலப்பு கேட்டது.

மெலிதாக ஒரு பெண் நடையிட்டு அங்கே வந்தாள்.



‘‘மிஸ்டர் கல்யாணத்தைப் பார்க்க வேண்டும்!’’ என்றாள் ப்ரியா.

# ஸ்ரீவேணுகோபாலன்

அந்தப் பெண் முகத்தில் அப்படி ஒரு ஆச்சரியம் ஓடியது.

‘‘நீங்க யாரு?’’ என்று ஒரு கேள்வியைக் கேட்டு விட்டு ஏதோ மர்மத்தைப் பார்ப்பது போல் ஒரு பார்வை பார்த்தாள்.

இருவரும் அந்தப் பெண் எதிரே நாற்காலியில் அமர்ந்தார்கள்.

அவளுக்கு 26 அல்லது 27 இருக்கும். கண்ணில் வினாடி நேர மிரட்சி தெரிந்தது. அவள் உட்காரவில்லை. நின்றவாறு பதில் சொன்னாள். அவளது பார்வை அடிக்கடி உள்நோக்கிச் சென்றது.

‘‘மிஸ்டர் சபாரத்னம்னு ஒருத்தர் இங்கு இருக்காரா?’’ என்றாள் ப்ரியா.

பெண் உடனே பதில் சொல்லவில்லை. அவளிடம் ஏதோ ஒருவித அச்சம் இருப்பது போல் தோன்றியது.

ப்ரியாவை சற்று நேரம் பார்த்து விட்டு, ‘‘அவரை உங்களுக்குத் தெரியுமா?’’ என்று கேட்டாள்.

‘‘தெரியும்! ஆனா பார்த்த நினைவு இல்லை. எங்க லைப்ரரியிலே அடிக்கடி புத்தகம் எடுப்பாரு!’’

‘‘உமா லெண்டிங் லைப்ரரியா?’’

‘‘ஆமாம்!’’

பெண்ணுக்குக் கொஞ்சம் தயக்கம் குறைந்தது.

‘‘உங்களுக்கு அவரைப் பற்றித் தெரியாதா?’’ என்றாள் அந்தப் பெண்.

‘‘என்ன தெரியணும்?’’ என்றாள் ப்ரியா.

‘‘அவர் ஒரு மெடிகல் க்யூரியோ. ஒன்பது வருடம் நினைவு இல்லாமல் மயக்கத்திலே இருந்தாரு!’’

‘‘அப்படியா? எதுவும் தெரியாதே!’’

‘‘தெரியறதுக்கு சந்தர்ப்பம் இல்லை. அவர் ஒரு பிரைவேட் நர்ஸிங்ஹோமில் இருந்தார். இப்போ அவருக்கு நினைவு வந்துட்டுது. ஆறு மாசமா... சரியா இருக்கிறார்!’’

‘‘அவரை நாங்கள் பார்க்கலாமா?’’

‘‘பார்க்கவா?’’

‘‘ஏன் முடியாதா?’’

‘‘படுக்கையிலே படுத்துட்டு இருக்காரு. இப்போ அவருக்கு வயசு எழுபது...’’

‘‘ஓ! அதனாலே என்ன? என்னைப் பாத்தா புரிஞ்சுக்குவாரு!...’’

‘‘இருங்க... வரேன்...’’

அவள் விசுக்விசுக்கென்று உள்ளே போனாள்.

அவள் போனதும் ப்ரியாவின் முகம் கலக்கமாக இருந்தது.

‘‘ஏன் மேடம்! நீங்க நினைக்கிற ஆள் இவர் இல்லை போல் இருக்கே! வயசு இப்போ எழுபதுன்னு சொல்றாங்க! பத்து வருடத்துக்கும் முன்னாலே அறுபது இருந்திருக்கணும். இந்த மனிதர் அப்படி ஒரு



கடத்தல் பண்ணி பணமா கேட்டு கடிதம் போட்டிருப்பாரா!" என்றாள் ப்ரியா.

"ஆமாம்! எனக்கும் அதுதான் தோணுது... ஆனா..." என்று இழுத்தாள் ப்ரியா.

"உங்க லைப்ரரியிலேர்ந்து அந்த நாவலை இவரைத் தவிர பலர் எடுத்திருக்கலாமில்லே?"

"ஆமாம்... ஆனா இவர் பேர்தான் கடைசியா இருக்கு..."

"அது ஒரு ருசுவா?"

ப்ரியா மேலும் குழம்பினாள்.

இதற்குள் உள்ளே போன பெண் திரும்பி அதே விசுக் விசுக்கில் வந்தாள்.

"அவரைப் பாருங்க! ஆனா அவரிட்டே பேசாதீங்க!" என்று பெண் எச்சரித்தாள்.

எழுந்திருந்த ப்ரியா தயங்கினாள்.

"ஏன் பேசக் கூடாது?" என்றாள் மகா.

"பேசலாம்! ஆனா அவர் பேச முடியாது! இப்போ ஸ்பீச் தெரபி கொடுத்துக்கிட்டு வராங்க!"

அந்தப் பெண் திரும்பவும் விலகி முன்னால் போனாள்.

"பிரயோசனமில்லை! திரும்பி விடலாம்" என்றாள் ப்ரியா.

"வந்த வரைக்கும் பார்த்துட்டுப் போயிடுவோம்!" என்றாள் மகா.

முன்னால் போன பெண் திரும்பிப் பார்க்க, அவர்கள் பின்தொடர்ந்தார்கள்.

வரிசையாக அறைகள்.

அங்கங்கே சுவர் பிராக்கெட்டில் வெண்கலச் சிலைகள்! மரச் சிற்பங்கள்! பஞ்சலோக விளக்குகள்.

ஏதோ புராதானத்துக்குள் போவது போலிருந்தது. போகப் போக சந்தன ஊதுபத்தி வாசம் கம்மென்று மணம் பூத்தது.

குறிப்பிட்ட அறைக் கதவு வெறுமனே சாத்தி இருந்தது.

திறந்து அந்தப் பெண் உள்ளே போக அவர்களும் போனார்கள்.

மெல்லிய விளக்குகள் பட்டுப் போன்ற வெண்மையை அறை முழுதும் பரப்பி இருந்தது.

மிருதுவான மட்டிப்பால் புகை உள்ளே சின்னமாக ஒரு மூடுபனி போல் பரவியிருந்தது.

இடதுபுறம் சுவரில் பனிச்சென்று சான்னித்தியம் அடைந்தது போல் தேவி காயத்ரியின் பெரிய படம்!

முகம் வசீகரம் வீச, அவளது தலை பின்னால் சூரியன் தகதகத்து தன் கதிர்களை வீசி விட்டுக் கொண்டிருந்தான்.

ஒரு பெரிய ஆயிர இதழ் தாமரை அவளைத் தாங்கிக் கொண்டிருந்தது.

காயத்ரியின் நெற்றியில் மூன்றாவது கண் ஒரு குங்குமக் கீறல் போல் விழித்திருந்தது.

ரத்த வர்ணமான சிவந்த ஆடையில் உயிர் ததும்பும் வகையில் ஒளிர்ந்து கொண்டிருந்தாள் அவள்.

ப்ரியா மறுபுறம் திரும்பினாள்.

அங்கே வெள்ளை விரிப்புகள் விரித்த கட்டிலில், பின்புறம் தலையணைகள் கொடுத்து, தாங்கலாக உட்கார்ந்திருந்தார் ஒரு பெரியவர்!

நீளநீளக் கோடுகள் போட்ட சட்டை தரித்திருந்தார். தலை வழுக்கை விட்டு, இரு புறங்களிலும், வெள்ளி முளைகளாக உரோமங்கள்!

அவரைப் பார்த்ததுமே ப்ரியாவின் முகத்தில் ஏமாற்றம் ஓடியது. மகா அதைக் கவனித்தாள்.

இதற்குள் பெரியவர், புன்னகை ஒன்றை பொக்கையாக விடுவித்து அவர்கள் பக்கம் திரும்பி இருந்தார்.

ப்ரியாவை அவர் குறித்துப் பார்ப்பது சற்று வியப்பாக இருந்தது.

பக்கத்திலிருந்த நாற்காலிகளில் அந்தப் பெண் அவர்களை உட்கார்த்தினாள்.

"உன் பேர் என்னம்மா?" என்று மகா இப்போதுதான் அவளைக் கேட்டாள்.

"சாரதா!"

"இவருக்கு நீ உறவா?"

"இல்லை! இவருக்கு உதவியாக இருக்கிறேன்!"

பெரியவர் சபாரத்தினம் தம் பக்கத்தில் இருந்த நோட் புத்தகத்தை எடுத்தார். எழுதினார். நீட்டினார்.

"நீங்க உமா லெண்டிங் லைப்ரரியில் இருந்தவர்தானே?" என்று எழுதியிருந்தார்.

ப்ரியாவின் முகம் மலர்ந்தது.

"ஆமாம்"

காலையில் இட்லிக்குச் செய்த தேங்காய் சட்னி அதிகம் ஆகி விட்டால் கவலை வேண்டாம். அதை மதியம் தயார் செய்யும் குழம்புடன் கலந்து கொதிக்க விட்டால் ருசியாகவும் இருக்கும். தேங்காய் மிச்சப்படும்.

- பெ. நாகவல்லி



# நம்பிக்கை, சாதனை, வெற்றி ஆகியவை வாழ்வில் இடம் பெற... வழிகாட்டுகிறது எல்டிசி.



## ஃபிக்சட் டெபாசிட் & குமுலேடிவ் டெபாசிட் சேமிப்புக்குப் பாதுகாப்பான வாய்ப்புகள்

வாழ்க்கையில் எத்தனையோ சவால்கள் உங்களை எதிர்நோக்குகின்றன. அவற்றை நீங்கள் சந்திக்கும் அதே நேரத்தில் உங்கள் பணத்தை நிர்வகிக்கும் பொறுப்பை எல்டிசியிடம் விட்டு விடுங்கள். உங்கள் பணத்தின் வளர்ச்சிக்கும், உங்கள் முன்னேற்றத்துக்கும் உறுதுணையாக விளங்கும் இரண்டு டெபாசிட் திட்டங்களை எல்டிசி உங்களுக்கு அளிக்கிறது.

நீங்கள் வாழ்வில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியிலும் எல்டிசி தரும் பாதுகாப்பு உங்களை ஊக்குவிக்கிறது. எனவே, நீங்கள் நம்பிக்கையோடு முன்னேற முடியும்.

**எல்டிசி.** உங்கள் வெற்றிக்கு உறுதுணை.

உங்கள் வளமைக்கு வழிகாட்டும் ஐந்து வெவ்வேறு டெபாசிட் திட்டங்களை லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட் உங்களுக்கு அளிக்கிறது: ஃபிக்சட் டெபாசிட், குமுலேடிவ் டெபாசிட், ரொக்க சர்ட்டிஃபிகேட், ரெக்கரிங் டெபாசிட், பென்ஷனர் பெனிஃபிட் திட்டம். இவற்றின் மூலம் ஒவ்வொரு டெபாசிட்தாரரும் அடைபவை: சிறப்பான பலன்கள், தனிப்பட்ட சேவைகள்.

**1993-94**ல் எல்டிசியின் டெபாசிட்டுகள் ஒரே ஆண்டில் 100% வளர்ச்சியைப் பெற்றுள்ளதற்கு இவைதான் காரணம். இந்த வெற்றியினால் ஊக்குவிக்கப்பட்டு எல்டிசி மற்றுமொரு லட்சியத்தை நோக்கி முன்னேறுகிறது: 31 மார்ச் 1995 அன்று அடையத் திட்டமிட்டுள்ள டெபாசிட் இலக்கு ரூ.25 கோடி.

பி.ஜி. சரண்யன்
சேர்மன்

டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன!

**LTC லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

கார்ப்பொரேட் அலுவலகம்:
37/1, கதீட்ரல் சாலை,
ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரி எதிரில்
சென்னை 600 086.
தொ.பே: 8281826/8281930

கிளைகள்: சென்னை • அம்பத்தூர், போன்: 681860 • அண்ணா நகர், போன்: 6212047 • குரோம்பேட்டை, போன்: 401267 • கே.கே. நகர், போன்: 4833917 • மடிப்பாக்கம், போன்: 2346586 • நங்கநல்லூர், போன்: 2348593 & 2346066 • விருகம்பாக்கம், போன்: 4830846 • மேற்கு மாம்பலம், போன்: 4830150 • திருச்சி, போன்: 25323 • மதுரை, போன்: 30626 • கோயம்புத்தூர், போன்: 43576 • திருநெல்வேலி, போன்: 322073 • காரைக்குடி, போன்: 2023 • வேலூர், போன்: 21902 • பாண்டிச்சேரி, போன்: 31859 • பெங்களூர், போன்: 366433.

*எல்டிசி: உங்கள் வாழ்வின் வளமைக்கு பொன்னான பாதை.*

10.3.94 தேதியிட்ட தினந்தந்தி நாளிதழில் வெளியான 25.10.93 தேதியிட்ட சட்டபூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி.

ADWAVE/LTC/4728 TAM A



அடிக்கடி உபயோகப்படுத்திய டீ வடிகட்டி அடைத்துக் கொண்டிருக்கும். எவர்சில்வர் வடிகட்டியாக இருந்தால் நெருப்பில் சில நிமிடங்கள் காட்டிய பிறகு கழுவி விடவும். அடைப்பு நீங்க பளிச்சென்று இருக்கும்.

- கலாமூர்த்தி.

"என்ன விசேஷம்?"

இதைக் கையால் அபிநயித்தார்.

அதே நேரம் வாய் குழறிக் கேட்டது.

"நீங்க எங்க லைப்ரரி நாவல் நிறையப் படிப்பீங்க இல்லே?" என்றாள் ப்ரியா.

"ஆமாம்" (அபிநயம்).

"நிறைய க்ரைம் நாவல் உங்களுக்கும் பிடிக்கும் இல்லே?"

பெரியவர் சபாரத்தினம் முகத்தில் பெரிய ஆறு மாதச் சிரிப்பு திரண்டு வந்தது.

அதை முழுதுமாக முகத்தில் ஓட விடுமுன் வேறு ஒரு நினைவு அவரை ஆக்கிரமித்திருக்க வேண்டும்.

முகம் திடீரென்று ஒரு நிழலும் விட்டது.

ப்ரியா நிறுத்தினாள். மகா பெரியவரை உற்று கவனித்தாள்.

ப்ரியா தனது கையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்தாள். அதில்,

"இரவு நேரத்தில் இரு இளமைகள்" 'நாவலை கடைசியாகப் படித்தீர்கள் இல்லையா?' என்று எழுதினாள்.

தயக்கத்துடன் காட்டினாள்.

அந்தக் கேள்வியை நேரிடையாகக் கேட்க அவளிடம் தைரியமில்லை.

பெரியவர் அதைப் பார்த்தார். இரண்டு முறை அவர்களைப் பார்த்தார். காகிதத்தைத் திருப்பிக் கொடுத்தார்.

தனக்குத்தானே மூழ்குவது போல் தலை குனிந்தார். பேசவில்லை. அதற்கு முன் இருந்த உற்சாகம் அனைத்தும் அவரை விட்டுப் பறந்தது போல் தோன்றியது.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவர் எழுதினார்.

"ஏன் அதைப் பற்றி இப்போது கேட்கிறீர்கள்?"

"விஷயம் இருக்கு! விசாரணை செய்ய வந்திருக்கிறோம்.'' என்று நிறுத்தினாள் அவள்.

அவர் முகத்தைப்பார்த்து விட்டு, மேலே தொடர்ந்தாள்.

"உங்களுக்கு ஏதாவது தெரிஞ்சு இருக்கணுமே!" என்றாள்.

பெரியவர் இன்னும் யோசனையில் இருந்தார்.

ப்ரியாவுக்கு கொஞ்சம் தைரியம் ஏற்பட்டது.

அவரைப் பார்த்து, "37ஆம் பக்கம்!" என்றாள்.

சட்டென்று பெரியவர் தலையை நிமிர்த்தினார்.

அவரது ஆழ விழிகள் ஒளியிழந்து மங்கலாக அவளைப் பார்த்தன.

அதில் ஒரு 'பரிச்சய' உணர்ச்சி இருப்பதைப் ப்ரியா உணர்ந்தாள்.

பெரியவர் பிறகு விழியை மடக்கினார். யோசனையில் ஆழ்வது தெரிந்தது.

ப்ரியா அவரது நிசப்தத்தைக் கலைக்கவில்லை. விநாடிகள் ஓடின. மகா அங்கே நடப்பதை அதிசயமாகப் பார்த்தாள்.

நீண்ட யுகம் போல் நேரம் சென்ற பிறகு, பெரியவர் தம் கைகளால் நோட் புத்தகத்தைத் தேடினார்.

எழுத ஆரம்பித்தார். அடித்தார் எழுதினார். திக்கித் திக்கி எழுதினார்.

அவளிடம் நீட்டினார்.

"நீங்கள் வந்தது நல்லது. எனது கட்டில் மெத்தைக்கு அடியில் ஒரு நோட் புக் இருக்கிறது. நான் எழுதினது. சாரதாவுக்குத் தெரியாமல் அதை எடுத்துக் கொள்ளுங்கள்! படியுங்கள்! உங்களுக்கு வேண்டிய விஷயம் இருக்கிறதா பாருங்கள்! எனக்கும் உதவி புரியுங்கள்..."

ப்ரியா படித்தாள்.

மகாவிடம் கொடுத்தாள்.

மகா படித்து விட்டுத் திருப்பிக் கொடுத்தாள்.

பிறகு எழுந்து, சாரதாவை வெளியே அழைப்பது போல் ஜாடை காட்டினாள்.

மகா முன்னால் போக, சாரதா பின்னால் போனாள். அறையை விட்டு ஹாலுக்குப் போனார்கள்.

"இங்கே டாய்லெட் எங்கே இருக்கு?" என்று மகா கேட்டாள்.

"ஐயோ! அதுக்கு ஏன் வெளியிலே வந்திங்க? அவர் ரூமுக்குள்ளேயே இருக்கே!" என்றாள் சாரதா.

"அவர் ரூமிலே போகப் பிடிக்கலை..."

"வாங்க இப்படி!"

அவன் வேறு அறைக்குள் அழைத்துப் போனான்.

உள்ளே போனதும், "ஏம்மா இந்தப் பெரியவர் சரியாத்தானே இருக்கிறாரு?" என்று கேட்டாள் மகா.

"ஏன் அப்படிக் கேட்கறீங்க?"

"இல்லை புத்தி பேதலிச்சுப் போயிடுத்தோன்னு தோணுது?"

"ஏம்மா அப்படி! அவர் என்னவோ எழுதிக் காண்பிச்சாரே? என்ன எழுதினாரு?"

"அதைத்தான் புரிஞ்சுக்க முடியலை. கன்னாபின்னான்னு எழுதியிருக்காரு. அதனாலேதான் கேட்டேன். இங்கே எவ்வளவு நாளா வேலை பார்க்கறீங்க?"

"ஒரு வருஷம்."

"பெரியவருக்கு யாரும் சொந்தம் கிடையாதா?"

"யாரும் இல்லீங்க! ஒரு ஐயா மட்டும் அப்பப்போ வந்து பார்ப்பாரு!"

"யாரு அவர்?"

"தெரியாதுங்க ஒன்பது வருஷமா நர்சிங்ஹோமிலே இருந்தாரே அப்ப அந்த ஐயாதான் பணம் எல்லாம் செலவழிச்சாராம்!"

"பெரியவருக்கு இப்போ சாப்பாடு?"

"நான் செஞ்சு போடறேங்க. டாக்டர் தினம் வந்து கவனிக்கிறாரு! ஃபிஸியோ தெரபிஸ்ட் வராங்க. இன்னும் இரண்டு மூணு பேர் தினம் அவரை வந்து சோதிக்கறாங்க!"

"அவ்வளவுக்கும் அந்த ஐயாதான் செலவு பண்றாரா?"

"தெரியாது என்னவோ டி.ஆர்னு சொல்றாங்க!"

மகா பாத்ரூமுக்குள் போனாள்.

சாரதாவுடன் பேசியதெல்லாம் நேரத்தை ஓட்டுவதற்காகத்தான்.

இதற்குள் ப்ரியா அந்த நோட்டுக்கை பெரியவரது கட்டிலிலிருந்து எடுத்திருப்பாள் என்று தெரியும்.

பாத்ரூமிலும் சற்று நேரமாக்கி விட்டே, மகா வெளியில் வந்தாள்.

பிறகு சாரதாவுடன் பேசிக் கொண்டே, பெரியவர் அறைக்குள் சென்றாள்.

பெரியவர் தம் கண்களைத் துடைப்பதை திடீரென்று நிறுத்தினார்.

"அப்போ நான் வரேன்!" என்று ப்ரியா எழுந்தாள்.

பெரியவர் எங்கேயோ பார்த்துத் தலை ஆட்டினார்.

இருவரும் வெளியே வந்தார்கள்.

ஹாலைத் தாண்டியதும், அந்தப் பெண் சாரதா "மேடம்!" என்று குரல் கொடுத்து இருவரையும் நிறுத்தினாள்.

"என்ன?" என்றாள் மகா.

"நீங்க யார் வந்தீங்கன்னு இந்த டைரிலே எழுதிக் கொடுங்க! ஐயா கேட்பாரு!" என்றாள் சாரதா.

ப்ரியா தைரியமாகத் திரும்பினாள்.

"நாங்க சோஷியல் ஒர்க்கர்கள். பெரியவரைப் பார்த்து விட்டுப் போக வந்தோம்!" என்றாள்.

"இல்லேம்மா! என்னவோ லைப்ரரி, நாவல் அப்படீன்னு சொன்னீங்களே!"

"ணங்" என்று எதுவோ இதயத்தில் அடித்தது.

"பெரியவருக்கு நாவல் ரொம்பப் பிடிக்கும்! அதைப் பத்திப் பேசினோம். அவ்வளவுதான்!"

"சரிம்மா..." என்று இழுத்தாள் சாரதா. "எதுக்கும் டைரியிலே எழுதிடுங்க..." என்றாள்.

பொய்யாக இரண்டு பெயர்களை எழுதி 'சோஷியல் ஒர்க்கர்கள்' என்று குறிப்பிட்டாள் ப்ரியா.

காரில் அவசரமாக ஏறினார்கள்.

மகா திரும்பிப் பார்த்தாள்.

சாரதா அவர்கள் காரின் நம்பரைக் கவனிப்பது தெரிந்தது.

(தொடரும்)

உபயோகப்படுத்திய டீ இலைகள் ரோஜா செடிக்கு நல்ல உரம் என்று தெரியும். உங்கள் வரவேற்பறை சோபா, மற்றும் மேசை நாற்காலிகளுக்கு நல்ல வார்னிஷாகவும் இது உபயோகப்படும். உபயோகித்த டீ இலைகளை ஒரு வெள்ளைத் துணியில் முடிச்சாகக் கட்டி மர மேசை நாற்காலிகள் மேல் தேய்த்தால் அவை பளபளவென்று இருக்கும்.

- கலாமூர்த்தி





• சிவாஜி வணங்கிய ஜெய்பவானி!

**மங்கையர் மலரும் வி.ஜி.பி. கோல்டன் பீச்சும் நடத்திய சுற்றுலா போட்டியில் பரிசு பெற்ற கட்டுரைகள்.**

# மணமக்களை 'ஹனிமூன்' அனுப்பும் பெற்றோர்களே!

மஹாராஷ்டிரா மாநிலத்தில், பூனே நகரின் அருகில் அமைந் துள்ள "பஞ்ச்கனி" என்னும் அற்புதமான மலைவாசஸ்தலம் சென்றோம்.

சென்னையிலிருந்து காலை 7 மணிக்குப் புறப்படும் சென்னை - பாம்பே எக்ஸ்பிரஸில் ஏறி மறுநாள் அதிகாலை 4 மணிக்கு பூனே. அங்கிருந்து 7 மணியளவில் ஜெம்பீ பேருந்தில் 3 மணி நேரம் பயணம் செய்தால் 10 மணிக்குப் பஞ்ச்கனி. மலைப் பாதையிலேயே சென்ற அந்த 3 மணி நேரப் பயணம் எங்கள் பயணக் களைப்பை அடியோடு நீக்கியது. கடல் மட்டத்திலிருந்து சுமார் 5000 அடி உயரத்தில் அமைந்துள்ள இவ்வழகிய ஊர், மிகுந்த குளிரும் இல்லாமல், வெப்பமும் இல்லாமல் இதமான தட்ப வெப்ப நிலை கொண்டு விளங்குகிறது.

பஞ்ச்கனியின் ஹைலைட் டேபிள் லாண்ட் எனப்படும் மலை முகடுகள். மலை முகடு கூராக இல்லாமல் இயற்கையாகவே சமதளமாக அமைந்துள்ளது இயற்கையன்






னையின் இனிய அற்புதம். இவ்விதம் 5 டேபிள்கள் அமைந்துள்ளதால் இவ்விடம் பஞ்ச்கனி (பாஞ்ச் - ஐந்து, கனி - டேபிள்) என்றழைக்கப்படுகிறது. மேலும் சிட்னி பாய்ண்ட், பார்ஸி பாய்ண்ட் போன்ற இடங்களிலிருந்து பார்க்கும் பள்ளத்தாக்குக் காட்சிகள் நம் உள்ளத்தைக் கொள்ளை அடிக்கின்றன. மலை வழியாகவே ஏறி டேபிள்-லாண்ட் செல்வதும் ஓர் இனிய அனுபவம்.

மறுநாள், பஞ்ச்கனிக்கு அருகில், சுமார் 25 கி.மீ. தொலைவில் உள்ள மஹாபலேஷ்வருக்குச் சென்றோம். அங்கு சுமார் 12 இடங்களிலிருந்து, அழகிய, கொள்ளை அழகு கொட்டிக் கிடக்கும் பள்ளத்தாக்குக் காட்சிகளைக் காணலாம். இயற்கையன்னையின் மடியில் புதைந்து கிடக்கும் ரகசியங்கள் தான் எத்தனை! எத்தனை!! மேலும் அங்கு அமைந்துள்ள ஐந்து நதிகளின் முகத்துவாரம் அமைந்துள்ள பஞ்ச்-கங்கா கோவில் மற்றும் சிவன் கோவில் முதலியவை காணத் திகட்டாதவை. குழந்தைகளை மகிழ்வூட்ட ஏரியில் படகுப் பயணமும் உண்டு.

அங்கிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ளது "பிரதாப்கட்" என்னும் சிவாஜியின் கோட்டை. 400 படிகள் ஏறிச் சென்றால், அழகிய பூங்காவின் நடுவில், சத்ரபதி சிவாஜியே நம்முன் நிற்பது போல கம்பீரமான சிலை வானளாவி நிற்கிறது. மேல் மூச்சு வாங்க மேலேறும் போது, எதிரில் இறங்கி வந்த 30 வயது பெண்மணி தான் பாதியிலேயே ஏற முடியாமல் திரும்பி வருவதாகக் கூறி வயிற்றில் புளியைக் கரைத்தது மறக்க முடியாத ஒன்று. போகும் வழியில் பவானியம்மன் கோவிலை உளமார கண்டு வணங்கலாம்.

பஞ்ச்கனியை விட்டுப் பிரிய மனமில்லாமல் பிரிந்து பூனே வந்தடைந்தோம். அங்கும் பார்ப்பதற்குகந்த இடங்களைப் பார்த்து விட்டு சென்னை வந்தடைந்தோம்.

இந்தியத் தாய் தனக்குள் புதைத்து வைத்திருக்கும் ஏராளமான இயற்கைச் செல்வங்களில் ஒன்றை கண் நிறைய, மனம் நிறைய அள்ளிக் கொண்டு வந்தது வாழ்வின் மகிழ்ச்சிகளில் ஒன்று.

**- அனுராதா வாசுதேவன், திருச்சி - 8.**

## அதே "மஹா பலேஷ்வர்" - "பஞ்ச்கனி".

எங்களது பம்பாய் மாநகர நெருக்கடியிலிருந்து விடுபட்டு சுற்றுலா செல்வதற்கு அருமையான இடம் "மஹாபலேஷ்வர்". 247 கிலோ மீட்டர் தொலைவிலுள்ளது. 4500 அடி கடலுக்கு மேலே அமைந்துள்ளது. இயற்கை எழில் கொஞ்சும் அழகான மலைப் பிரதேசம்.

பம்பாயிலிருந்து நிறைய பஸ்கள் செல்கின்றன. ஆறு மணி நேரப் பயணம். காரில்



• டேபிள்-லேண்ட்




நான்கு மணி நேரத்தில் சென்றுவிடலாம்.

இங்கே பிரசித்தி பெற்ற இடம் பெரிய சிவன் கோவில். இங்கிருக்கும் நந்தியின் வாயி லிருந்து விழும் குளிர்ந்த நீர் அமிர்தமாக இருக்கும். வருடம் முழுவதும் வற்றாதது. சிவ லிங்க பீடத்தைச் சுற்றி நீர்க் குமிழ்கள் தோன்றி உத்திராட்ச மாலை வடிவில், வருடம் முழு வதும் வற்றாது காட்சி தருவது காண வேண்டி யது. பாண்டவர்கள் காலத்தில் இருந்து உள்ளது. இந்த நீர் யமுனை, சரஸ்வதி, கோதாவரி நதிகளிலிருந்து வருவதாக ஐதீகம். அருகேயிருக்கும் "பஞ்ச கங்கா" கோவிலும் பார்க்க வேண்டிய ஒன்றாகும்.

"வென்னா ஏரியில்" அருமையாகப் படகு சவாரி போகலாம்.

"ஊசி முனைப் பாயிண்ட்"ஐ எதிர்ப் புறமிருந்து படமெடுத்தால் யானையின் தும் பிக்கை போலக் காட்சி தரும்.

"எதிரொலிக்கும் பாயிண்ட்"ல் பேசி னால், ஏழுமுறை எதிரொலிக்கும். "லென் லைட்" பாயிண்ட், "ஆர்தர்சீட்" பாயிண்ட் பார்க்க வேண்டிய இடங்கள்.

- **ஆர். மீனலதா, பம்பாய் - 28.**

## நாம் விருந்தினர்களாகப் போகும் போது.

நான் என் கணவருடன் அந்தமானுக்கு சுற்றுலா சென்றிருந்த போது, அங்கு என் கணவரின் பள்ளி நண்பரைச் சந்தித்தோம். அவர் அங்கு வெட்டினரி டாக்டராக இருப்ப தாகவும், மறுநாள் தன்னுடைய வீட்டிற்கு வரும்படியும், அவரே வந்து மறுநாள் நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலிலிருந்து அழைத்துச் செல்வதாகவும் கூறினார். அவர் மனைவி அங்கு அலுவலகத்தில் வேலை பார்ப்பவர். இரவு தன் மனைவியிடம் அவர் விஷயத்தைக் கூற, தன்னுடைய அலுவலகத்தில் மறுநாள் ஆடிட்டிங் இருப்பதாகவும், தன்னால் இருக்க முடியாததையும் கூறியிருக்கிறாள். அவரும் மறு நாள் காலையில் தன்னுடைய கம்பௌண் டரிடம் தன்னுடைய நிலைமையைக் கூறி, அன்று மதிய உணவு அவர்கள் வீட்டில் இருந்து தயாரித்து எடுத்து வரும்படி கூறியிருக் கிறார். அவரும் அதற்குச் சம்மதித்து வீட்டிற்கு வந்து தன்னுடைய மனைவியிடம் விஷயம் கூற, அவள் தன்னைக் கலந்து ஆலோசிக் காமல் எப்படி சம்மதித்தீர்கள் என்று கூறி, வாக்குவாதம் முற்றி, கோவித்துக் கொண்டு தன் தாயார் வீட்டிற்குச் சென்று விட்டாள். இந்த விஷயம் எல்லாம் எங்களுக்குப் பின் னால்தான் தெரிந்தது.

மறுநாள் காலையில் பதினோரு மணிக்கு இவர் நண்பர், தன் காரை எடுத்துக் கொண்டு நாங்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து எங்களை அழைத்துச் சென்று தன் மனைவி வீட்டில் இல்லாததற்கு மன்னிப்புக் கேட்டார். பிறகு கம்பௌண்டர் ரொம்ப நேரமாக வராதது கண்டு அவர் வீட்டிற்குச் சென்றால் அங்கு அவர் மும்முரமாக சமையல் செய்து கொண்டு இருந்தார்!

ஒருவழியாக நானே சமையலை முடித்து அங்கேயே எல்லோரும் சாப்பிட்டுவிட்டு நாங்கள் தங்கியிருந்த இடத்திற்கு வந்துவிட் டோம்.

சில யோசனைகள்

1. படித்த பெண்ணாக இருந்தாலும், சாதாரண பெண்ணாக இருந்தாலும் தன் னைக் கலந்து ஆலோசிக்காமல் யாரையும் விருந்தினராக அழைப்பதை எந்தப் பெண் ணும் விரும்புவதில்லை.

2. நாம் விருந்தினராகப் போகும் போது, அது உள்ளூராக இருந்தால் முதலிலேயே சென்று சாதாரணமாக அவர்களுடன் பேசி நாம் வருவதைப் பற்றி அவர்களுடைய சௌகரியத்தை அறிதல் வேண்டும். பிறகு செல்லுதல் வேண்டும்.

வெளியூராக இருந்தால் கடிதத்தின் மூலம் நாம் வருவதைப் பற்றி வீட்டில் உள்ள அனைவருக்கும் பொதுவாகத் தெரியப்படுத்தி அவர்களுடைய பதில் கடிதத்தை நாம் எதிர்ப்பார்ப்பதையும் பணிவன்புடன் தெரியப்படுத்தியும், அவர்களிடம் சௌகரிய மான தேதியையும் தெரியப்படுத்துமாறு கேட்டு அவர்களையும் நம்முடைய வீட்டிற்கு விருந்தினர்களாக அழைப்பது மிகவும் முக்கியம்.

3. நாம் நண்பர்களை விருந்தினர்களாக அழைக்க நினைத்தால் வீட்டில் உள்ள அனை வரையும் கலந்து ஆலோசித்த பின் அழைக்க வேண்டும்.

- **பி.கே. மீனாட்சி ராவ், சென்னை - 34.**

இருபத்திரண்டு வருடங்களுக்கு முன்

திருப்பதி, திருத்தணி சென்றுவிட்டு, சென்னைக்குச் சுற்றுலாவாக நான்கு குழந்தைகளுடன் வந்தோம். வந்து இறங்கியவுடன் என் கணவர், என்னை அழைத்து இந்த ஊரில் "பிக்பாக்கெட் அதிகம். ஆகையால் நீ தனியாக வைத்திருக்கும் பணத்தை தந்து விடு. நானே எல்லாவற்றையும் வைத்துக் கொள்கிறேன்" என்று வாங்கிக் கொண்டு விட்டார்.

மெரினா பீச் செல்ல பஸ்ஸுக்கு நின்ற நேரம் மாலை 5 மணி. கூட்டத்திற்குக் கேட்கவா வேண்டும்? 5 பஸ்களை விட்டு விட்டோம். 6 வது பஸ் வந்தது. இதையும் விட்டு விட்டால், திருவல்லிக்கேணி சென்று திரும்பி, இரவு வண்டிக்குப் புறப்படுவது கஷ்டம். ஆகையால் எப்படியும் இதில் ஏறி விடுவது என்று நாங்கள் தீர்மானித்து, நான் பெரியவனையும், கடைசிப் பையனையும் பிடித்துக் கொண்டு முண்டியடித்து பஸ்ஸில் ஏறி விட்டேன். இவர் இன்னொரு பிள்ளையையும், பெண்ணையும் பிடித்துக் கொண்டு ஏறுவதற்கு முன் பஸ் புறப்பட்டு விட்டது. உடனே இவர், 'நீங்கள் கடைசி ஸ்டாப்பில் இறங்கி விடுங்கள். நாங்கள் அடுத்த பஸ்ஸில் வந்து விடுகிறோம்' என்று கத்த, இதற்குள் பஸ் இரண்டு, மூன்று ஸ்டாப் தாண்டி விட்டது. கண்டக்டர் ஒவ்வொருவராக டிக்கெட் கேட்டுவர, என் பிள்ளை, 'அம்மா, நம்மிடம் பணம் இல்லையே, என்னம்மா செய்வது?' என்று கேட்க, நான் முழிக்க, கண்டக்டர் எங்களை கீழே இறக்கி விட்டார்.

இப்போதைய சென்னை வாசியான எனக்கு, அன்று சென்னை முன்பின் தெரியாது. திக்கு திசை தெரியவில்லை. அழுகை வந்து விடும் நிலை. ஆனால் என் பெரிய பையன், "அம்மா, கவலைப்படாதே, நான் பஸ் வந்த ரூட்டைப் பார்த்துக் கொண்டே வந்தேன். நாம் மூவரும் பழையபடி நடந்தே எக்மோர் சென்று விடுவோம். தைரியமாக வா" என்று சொல்ல, மூவரும் நடந்தே பழைய இடத்திற்கு வந்து சேர்ந்தோம். அதற்குள் அங்கிருந்து என் கணவர் மற்ற குழந்தைகளுடன் சென்று விட்டிருக்கிறார். நாங்கள் யோசித்து, எப்படி இருந்தாலும் இவர் இங்கு தான் வருவார், என்று தீர்மானித்து, அங்கேயே நின்றிருந்தோம்.

இதற்குள் இவர் மற்ற இரு குழந்தைகளுடன் பஸ் ஏறிச் செல்ல, பஸ் சோதனையாக திருவல்லிக்கேணி அருகில் செல்லும் போதுதான் இவரிடம் டிக்கெட் கேட்டிருக்கிறார்கள். வழக்கம் போல் இவர் மூன்று 'புல்', மூன்று 'ஆப்' என்று சொல்லி பணம் எடுக்கும் போதுதான், அடாடா, அவனிடம் பணமே இல்லையே, என்ன ஆயிற்றோ தெரியவில்லையே என்று பதறிப்போய் அடுத்த ஸ்டாப்பில் இறங்கி (திருவல்லிக்கேணியே வந்து விட்டது) பஸ் பிடித்து, (வழியெல்லாம் கவனித்துக் கொண்டே) நேராக 'எக்மோர்' வந்து சேர்ந்து, அங்கு நாங்கள் பத்திரமாக இருப்பதைக் கண்டு, எல்லோரும் பதற்றம் நீங்கி, பெரியவனைப் பாராட்ட, இவர் உடனே என்னிடம், என் பெரிய பையனிடம் தனித்தனியாகக் கொஞ்சம் பணம் தர, ஒரே ரகளைதான்.

குழந்தைகளெல்லாம் பெரியவர்களாகி விட்ட இப்பொழுதும், எங்காவது சுற்றுலா செல்லும் சமயத்தில், அந்தப் பழைய சுவையான (ஆனால் அப்போதைக்கு அது மிகவும் திண்டாட்டமான) நிகழ்ச்சியை நினைக்காமல் இருப்பதே இல்லை.

**- சாந்தா சேஷன், சென்னை -83.**

ஒருமுறை உ.பியிலுள்ள நைனிடால் என்னும் இடத்தில் ஒரு தேனிலவு தம்பதிகளை சந்தித்தது மறக்க முடியாத அனுபவம்.

இயற்கையாகவே மலைகள் சூழப்பட்ட ஏரிகள் ரோஜாத் தோட்டங்கள், என்று அழகு கொஞ்சும் இடம் நைனிடால். (எவரெஸ்ட் வியூ என்னும் மலை உச்சிக்குச் செல்ல குதிரையில்தான் போக வேண்டும். குதிரைகளை வாடகைக்குத் தரும் உ.பி. வாலாக்களுடன் பேரம் பேசிக் கொண்டிருந்த போது தான் அந்த இளம் தம்பதிகளைப் பார்த்தோம். காதிலும், மூக்கிலும் ஜொலிக்கும் வைரங்கள், மெருகு குலையாத நகைகள், புதிய மஞ்சள் சரடு, பட்டுப் புடவை; அவனை அணைத்தபடி கையில் கங்கணத்துடன் அவள்; இது போதாதா அவர்கள் தென்னகத்திலிருந்து வந்திருக்கும் தேனிலவுத் தம்பதிகள் என்று புரிந்து கொள்ள!

தயக்கத்துடன் எங்களிடம் வந்து 'நீங்கள் தமிழர்கள்தானே' என்று அவன் கேட்க, (என் முகத்திலும் 'மதராசி' என்று எழுதியிருக்கே!) ஹிந்தி தெரியாமல் அவர்கள் தவிப்பதைப் புரிந்து கொண்டு உதவலாமென்று விசாரித்தோம். அவ்வளவுதான் பாஷை தெரியாமல் இரண்டே பெட்டிக்கு



# MAKE YOUR OWN 'SHAKE'



The Shake with the twist

Now real fun and real milk come together in one delicious swirl. And that's the twist. The shake is New Santosa Milkshake powder. Real spray-dried milk packed with calcium, protein and vitamins. In three lip-smacking flavours – strawberry, mango and pista. Whip up with chilled water and crushed ice in a mixer. Pour straight into a tall glass. Schlurp! Now go ahead and have another round!




Santosa
MILK SHAKE POWDER

Sold at all Arun Ice Cream parlours and selected stores in Tamil Nadu.

Ogilvy&Mather 3502

# இந்த ஆலமரத்துக்கும் ஒரு நிதி நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்?



சக்தி பைனான்ஸ் – வங்கிகளுக்கு

இணையான பாதுகாப்பு

சின்னஞ் சிறிய விதை. அது முளைவிட்டு வலுவாக வேரூன்றி மாபெரும் ஆலமரமாக வளர்ந்து விடுகிறது. பரந்து விரிந்த கிளைகள். அவற்றிலிருந்து கீழிறங்கி பூமியில் பதியும் விழுதுகள். ஆலமரம் நீண்ட காலத்துக்கு நிலைத்து நின்று அதனடியில் வருகிறவர்களுக் கெல்லாம் நிழல் தருகிறது.

சக்தி பைனான்ஸும் அப்படித்தான். உங்களுடைய சேமிப்புக்கு அதிக பாதுகாப்பு அளிக்கிறது. உங்கள் நலனில் அக்கறை கொண்டு உங்கள் டெபாசிட்டுகளுக்கு நீங்கள் அதிக வருமானம் பெற வகை செய்கிறது. ஸ்திரத்தன்மையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

சக்தி நிறுவனங்களின் எண்ணிக்கை 20. மொத்த ஆண்டு வர்த்தகம் ரூ. 700 கோடி. 1.5 லட்சம் டெபாசிட்தாரர்கள் மிகுந்த நம்பிக்கையோடு வைத்திருக்கும் டெபாசிட் தொகை ரூ. 150 கோடி. நாடு முழுவதும் 37 கிளைகள். 25 சேமிப்புமையங்கள். பரவலாகப் பாதுகாப்புப் பெட்டகங்கள்.

சக்தி பைனான்ஸ் ஒவ்வொரு வாடிக்கையாளரின் தேவையையும் பூர்த்தி செய்வதில் தனிப்பட்ட கவனம் செலுத்துகிறது. அதற்காகவே அவர்களின் தேவைகளைப் புரிந்து கொண்டு பல புதுமையான திட்டங்களை முதன் முதலாக அறிமுகப் படுத்திய



சிறப்பையும் பெற்றுள்ளது. அது மட்டுமல்ல. இத்தகைய திட்டங்களைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி விரைவாகச் செயல் படுத்துவதிலும் முன்னோடியாகத் திகழ்கிறது.

உங்கள் சேமிப்புகளை சக்தி பைனான்ஸில் டெபாசிட் செய்யுங்கள். நிம்மதி பெறுங்கள்.



# சக்தி
## பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம் :
475 டாக்டர் நஞ்சப்பா சாலை கோயம்புத்தூர். 641018.
தொலைபேசி எண் :
231471/231472/231473/234174



ஜவுளி குடோன் இருக்கும் பகுதிகளில், பேல் சுற்றி வந்த வண்ண வண்ண டேப்புகளை ரோடில் எறிந்து இருப்பார்கள். அழகிய வண்ணங்களைத் தேர்ந்தெடுத்து, ஓலையில் பின்னுவது போல், கூடை பின்னலாம். பார்க்க அழகாக இருக்கும், எளிதில் பின்னி விடலாம். நல்ல விலைக்கு விற்றும் விடலாம்.

- ஆர். உஷா

50- ரூபாய் கேட்க, தெரியாமல் முழித்தது. டால்டாவில் மிதக்கும் ஆலுமட்டர் கோஷ்தாவை ஜீரணிக்க முடியாமல் அவஸ்தைப்பட்டது, இட்லியும், தயிரும் எங்கே கிடைக்கும்? என்று தேடி அலைவதையும் 2 பேருமே எங்களிடம் அழாத குறையாகக் கொட்டித் தீர்த்தார்கள்.

நாங்கள் தங்கிய ஹோட்டலுக்கு அழைத்துச் சென்று விவரங்களை விசாரித்துத் தெரிந்து கொண்டோம். நல்ல வசதியான குடும்பத்தைச் சேர்ந்த பெண் அவள். மாயவரம் எல்லையைக் கூட தாண்டியது இல்லை. தஞ்சையில் வேலை பார்க்கும் பட்டதாரி (அனுபவமில்லாத!) அவன் ஒரு வாரம் முன்பு திருமணமாகி, பர்ஸ் பிதுங்க பணத்துடன் தேனிலவுக்குப் பெற்றவர்களால் அனுப்பப்பட்டவர்கள். அது சரி பக்கத்திலிருக்கும், ஊட்டி., மைசூர் என்று போகாமல் வடக்கே வந்ததின் காரணம், பெண்ணின் தகப்பனார் தானாம்! அவர்கள் ஊரில் யாருமே அனுப்பாத ஹனிமூன் இடம் இதுதானாம்! எங்களுக்கு அவர்களைப் பார்க்க பரிதாபமாக இருந்தது. தேனிலவை இவர்கள் தண்டனையாக அனுபவிக்க அனுப்பப்பட்டவர்களா என்ன? மொழியிலிருந்து எல்லாமே வேறுபட்ட சூழ்நிலை, குளிருக்குக்கூட ஸ்வெட்டர், ஷால் எதுவும் இல்லை. கையில் ரொக்கம் இருந்தால் எதையும் சாதிக்கலாம் என்று அனுப்பிய அவர்களின் பெற்றோர்களின் மேல் கோபம்தான் வந்தது. பணம் இருந்தால் எதையும் வாங்கலாம் சரி, ஆனால் 'அனுபவம்' இது எங்கே, என்ன விலைக்குக் கிடைக்கும்?

முதலில் 2 பேருக்கும் நகைகளையும், பணத்தையும் பத்திரப்படுத்த சொல்லிக் கொடுத்த பிறகுதான் எங்களுக்கு நிம்மதியாக இருந்தது. அப்புறம் என்ன... நம்மூர் இட்லி, தோசை கிடைக்கும் மலையாளி ஹோட்டலுக்கு அழைத்துப் போனது, போட்டிங்கி விருந்து, குதிரைச் சவாரி வரை பேரம் பேசி அனுப்பியது. பூரி உடையாமல் பானிபூரி சாப்பிட கற்றுக் கொடுத்தது, பரிசுப் பொருட்கள் வாங்க கடைகடையாக ஏறி இறங்கியது... இப்படி ஒரு வாரம் போனதே தெரியவில்லை.

பணக்கார பெற்றோர்களுக்கு ஒரு வேண்டுகோள், பணமிருந்தால் எதையும் வாங்கலாம். ஆமாம் ஆபத்தையும் கூடத்தான்! தினசரிகள், டிவியில் எவ்வளவோ நிகழ்ச்சிகளை படித்து, பார்த்தும் கூட அலட்சியமாக இருக்காதீர்கள். தகுந்த ஏற்பாடுகள், தேவையான பாதுகாப்பு, அறிவுரைகளுடன் உலகத்தின் எந்தப் பகுதிக்கு வேண்டுமானாலும் உங்கள் இளசுகளை தேனிலவுக்கு அனுப்புங்கள்.

- லட்சுமி ஸ்ரீனிவாஸ், சென்னை - 89.

நான் கல்லூரியில் படிக்கும்போது மாது என்பவரைக் காதலித்தேன். எனது கல்லூரி படிப்பு முடிந்து விட்டது ஆனால் அவருக்கு முடியவில்லை. அவருடைய முகவரி வாங்கிவிட்டு என்னுடைய முகவரியைக் கொடுத்து விட்டு வந்தேன். அதன் பிறகு நான் சரியாகச் சாப்பிடாமல் பழகாமல் இருந்தது பற்றி என் பெற்றோருக்கு ஒரே கவலை. என் அம்மா அப்பா இருவரும் சென்னை செல்லலாம் என்று முடிவு செய்தார்கள். முதலில் நான் வரவில்லை என்று சொன்னேன். அதற்கு, 'உனக்காகத்தான் இந்த முடிவுக்கு வந்தோம். நீ வரவில்லை என்றால் என்ன அர்த்தம்' என்றார்கள். சரி என்று அரை மனத்துடன் சென்றேன். முதலில் மகாபலிபுரம் சென்று விட்டு கோல்டன் பீச்சுக்குச் சென்றோம். அப்பொழுது எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்க இஷ்டம் இல்லாமல் பார்த்துக் கொண்டு இருந்தேன். என்ன ஆச்சர்யம்! அப்பொழுது அங்கே என்னுடைய மாது யாரையும் சிரிக்க வைக்க முடியாத மனிதரைப் பார்த்துக் கொண்டு இருந்தார்! எனக்கோ அளவு கடந்த மகிழ்ச்சி.

என் சந்தோஷ முகத்தைப் பார்த்து என் பெற்றோர்கள் ஆச்சர்யம் அடைந்தார்கள். அதே சமயம் அவரும் என்னைப் பார்த்து விட்டார். உடனே அம்மா அப்பாவிடம் என்னோடு படித்தவர் என்று அறிமுகம் செய்தேன். அப்பொழுது அவருடன் அவர் தங்கை அப்பா அம்மா எல்லோரும் வந்திருந்தார்கள். இரண்டு குடும்பங்களும் ஒன்றாகச் சேர்ந்தன. கோல்டன் பீச் இப்படியாக எங்கள் காதலை வெற்றியடையச் செய்தது.

- சி. தீபா, பவானி - 1.

## மேஷ ராசி :

அசுவினி, பரணி, கிருத்திகை 1 - ஆம் பாதம்.

மாதத்தின் முதலிரண்டு வாரங்களில் எல்லாத் துறையினர்க்கும் ஏற்றதொரு சூழ்நிலை உருவாகியுள்ளது. திருமணத்திற்குரிய கோட்சார பலம் நவம்பர் வரை நன்கு அமைந்திருப்பதால், இருசாராரின் மனப்பொருத்தம் திருப்தியாக இருந்தாலே போதும். திருமணம் கைகூடிவரும். அவசியமற்ற தோஷங்கள், மூல நட்சத்திரம் என்றெல்லாம் மன உளைச்சலுடன், ஜாதகப் பொருத்தம் சரியில்லை என, நற்குணமும் வசதியும் படைத்திருந்த இடங்களை ஒதுக்குவதற்கு முன் நல்ல அனுபவம் பெற்ற ஜோதிடர்களை நாடி ஒரு முடிவு எடுப்பது நல்லது. மற்றபடி மாதத்தின் முற்பகுதியில் சூரியனும் பிற்பகுதியில் அங்காரகனும், உடல் நலக்குறைவு, எதிர்பார்த்த இடத்தில் ஏமாற்றம், கவனக்குறைவால் திருடர் மூலம் பொருளிழப்பு போன்றவைகளை ஏற்படுத்த வாய்ப்பு உள்ளது. எனினும் குருவின் பார்வையும் சனீஸ்வரன் நிலையும் நன்கு அமைந்திருப்பதால், நாமும் சற்று எச்சரிக்கையுடன் இருந்தாலே போதும். ஒரு சிலருக்கு வேலையில் மாற்றம் ஏற்படும். அல்லது அத்தகைய நிலையை நீங்களே கூட விரும்பி கேட்கலாம். அல்லது இது விஷயத்தில் மாதத்தின் முற்பகுதியில் உங்கள் சகோதரர் மூலமும், பிற்பகுதியில் தந்தை வழி உறவினராலும் உதவி கிடைக்கும். சமூக சேவையாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் சுறுசுறுப்பான மாதமாக இருக்கும். சிந்தனையைச் சிதற விடாமல் கந்தனை வேண்டுங்கள். சுபநிகழ்ச்சிகள் நடந்தே தீரும்.

# இந்த மாதம் எப்படி?




## ரிஷப ராசி :

கிருத்திகை 2, 3, 4 - ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 -ஆம் பாதங்கள்.

சூரிய சஞ்சாரம் சரியாக அமையவில்லை. எனவே அரசுப் பணியில் உள்ளவர்களும், அரசியல் வாதிகளும் எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டிய காலம். ராகுவைத் தவிர 6ம் இடத்தில் உள்ள மற்ற கிரகங்களும் மனத்திற்கு நிம்மதியைத் தரும் நிலையில் இல்லை. குறிப்பாக எவரேனும் மனச்சிதைவு எனும் நிலைக்கு ஆட்பட்டிருந்தால் மருத்துவர் கூறியுள்ள மருந்தைத் தவறாமல் உபயோகிப்பது நல்லது. கோபம், தாபம், விரக்தி இவைகளுக்கு ஆளாகாமல் இருக்க மற்றவர்களுடன் சகஜமாகப் பழகுவது ஓரளவுக்கு மனத்தில் உள்ள விரக்தியைப் போக்கடிக்கும். எத்துறையில் உள்ளவர்களுக்கும் தசாபுக்தி சரியாக அமைந்திருந்தால் மருமகள், மாமியார் என்ற நிலையில் இருப்பவர்கள் ஒருவரையொருவர் அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. இதுபோலவே உயர்பதவியில் இருப்பவர்களும் மற்றவர்களை அரவணைத்துச் செல்ல வேண்டிய நிலை. கேது அத்தகைய விரயஸ்தானத்தில் இருப்பதால் பதவிக்குப் பங்கம், தனவிரயம் என ஏதோ ஒருவிதத்தில் சிரமம் இருக்கும். அக்டோபர் முடிய இந்த நிலை உண்டு. ஸ்ரீசுதர்ஸன ஹோமம் ஒன்றை நடத்தலாம். வசதியும் வாய்ப்பும் இல்லாதவர்கள், அருகம்புல்லால் ஆற்றங்கரை அண்ணலான ஆனைமுகத்தோனுக்கும், செம்பருத்தி மலர்களால் செந்திலாண்டவனுக்கும் அர்ச்சனை செய்தாலே போதும். வரம் தரவில்லை என்றாலும் துன்பம் வராமல் தடுத்து நிம்மதியைக் கொடுப்பார்கள்.

## மிதுன ராசி :

மிருகசீரிஷம் 3, 4 - ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர்பூசம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மாத ஆரம்பத்தில் அங்காரகனைத் தவிர மற்ற அனைத்துக் கிரகங்களும் ஏதாவது ஒரு விதத்தில் எதிர்பார்க்கும் பலனைத் தருவார்கள். பதவி உயர்வு உண்டு. திருமண நிகழ்ச்சியும் நடக்கும் அல்லது நிச்சயம் செய்யப்படும். வேண்டிய இடத்திற்கு மாற்றமும் உண்டு. எதிலும் ஏமாற மாட்டீர்கள். குடும்பத்தில் சுமுகமான, சுகமான உறவு நிலை நீடிக்கும். ஒரு புனித யாத்திரைக்கும் இடம் உண்டு. ஆனால் பிற்பகுதியில் சற்று மனச் சஞ்சலம் உண்டாகும். தாய்வழி வரவேண்டிய வீடு, நிலம் சம்பந்தமானதொரு பிரச்னை தோன்றலாம். நீதி மன்றத்தை நாடாமல் உறவு முறையிலேயே, ஆனால் எழுத்து மூலமாகத் தீர்த்துக் கொள்வது நல்லது. இல்லையேல் விவகாரம் இராவணனுக்கு முன் அமர்ந்த ஆஞ்சநேயரின் வாலுக்கு ஒப்பாகிவிடும். புது ஜீவன் ஒன்று குடும்பத்தில் பிறக்கும். அதனால் சில பிரச்னைகள் தீர்ந்து சமாதானம் நிலவும். எந்த ஒரு புது முயற்சியையும் மாதத்தின் முற்பகுதியிலேயே செய்வது நல்லது. பிற்பகுதியில் இராசிநாதனின் நிலை சரியில்லை. சுக்கிரனும் சுகமளிக்கும் நிலையில் இல்லை. தசாபுத்தி பலமாக நடப்பவர்களுக்கு இக்கோட்சாரப் பலன் மாறான நிலையை உண்டாக்கலாம். கோட்சாரத்திற்கு ஏற்ப நல்ல தெசை நடப்பவர்களுக்கு நல்ல நிலையையே காட்டுகிறது.

## கடக ராசி :

புனர்பூசம் 4 - ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.

மாதத்தின் பிற்பகுதியில் புதனும், சுக்கிரனும், சூரியனும் உதவும் நிலையில் இருப்பதைக் கவனிக்க வேண்டும். கோட்சாரப் பலன் எழுதும்போது சாதாரணமாக ஆட்சியில், உச்சத்தில் உள்ள கிரகங்கள் நன்மையைச் செய்யாவிட்டாலும் வேதனை தர மாட்டார்கள் என்பர். முற்பகுதியில் விரயமும் பிற்பகுதியில் நீச்சமும் கொண்டுள்ள செவ்வாய் சில சோதனைகளைத் தரலாம். அது பிரயாணம், மருத்துவச் செலவு மூலம் எழும் பொருளாதார நெருக்கடி காரணமாகவும் ஏற்படலாம். அக்டோபருக்குப் பின் நடக்க இருக்கின்ற ஒரு சுபச் செலவிற்கு இந்த மாதத்திலேயே சில அறிகுறிகள் தெரியும். மாதம்பூராவுமே புதன் உதவலாம். அதனால் ஏதோ ஒரு விதத்தில் தனலாபம் அல்லது ஏற்கனவே வர வேண்டிய பெரிய தொகை வருவதற்கான சூழ்நிலை உருவாகும். ஆனால் அரசியல் துறையில் இருப்பவர்களுக்கு நெருக்கடி தருகின்ற காலகட்டம். எனினும் பிற்பகுதியில் அதுவே ஆதாயம் தருவதற்கும் காரணமாக அமையலாம். பாம்புக் கிரகங்களுக்குரிய பரிகாரம் செய்வது நல்லது. வசதி இல்லாதவர்கள் முறையே ராகுவுக்கும் கேதுவுக்கும் மந்தாரை, செவ்வரளி மலர்களால் அர்ச்சித்துப் புளியோதரை நிவேதனம் செய்து சேவிக்கலாம். நவக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்துள்ள எந்தக் கோயிலிலும் இதைச் செய்யலாம். கடலிலோ ஆற்றிலோ ஸ்நானம் செய்யும் போது கூட முதற்பகுதியில் தென்மேற்கு திசை நோக்கியும், பிற்பகுதியில் வடமேற்கு நோக்கியும் நின்று முறையே ராகு கேதுக்களை வணங்கி நீராடுவதுடன், கடைசியாகக் கிழக்குதிசையில் உள்ள சூரியனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு கரையேறினால் நல்லது நடக்கும். இது துயரக் கடலிருந்தும் வெளிவர உதவுமே.

தேங்காய்ப்பால் எடுக்க துருவிய தேங்காயை அரைக்கும்போது வெதுவெதுப்பான நீரைவிட்டு அரைத்தால் பாலை முழுமையாகப் பெற முடியும்.

- ஜி. இந்திரா



## சிம்ம ராசி :

மகம், பூரம், உத்திரம் 1 - ஆம் பாதம்.

மாதத்தின் முற்பகுதி பலவிதத்திலும் பயன்தரக்கூடிய நிலை. இது எத்துறையினர்க்கும் எப்பாலர்களுக்கும் பொருந்தும். சூரியன் ஆட்சியில் இருக்கும் அதே சமயம் புதன் உச்சம், சுக்கிரன் 3 ல் ஆட்சி என்கின்ற நிலை. எனவே நற்பலன்கள் கூடுதலாகும் காலகட்டம். புது முயற்சி, புதுப்பட ஆரம்பம், திருமணம் கைகூடி வருதல், பதவி உயர்வு என பட்டியலிட்டுக் காட்டலாம். என்றாலும், மாதத்தின் பிற்பகுதி சற்று மாறான பலனையே தரத்தக்க சூழ்நிலை ஏற்படுவதைக் கண்டு எச்சரிக்கையுடன் செயல்பட வேண்டியது அவசியம். குறிப்பாக ஆட்சியில் உயர் பதவியில் உள்ளவர்கள் அவர்கள் எக்கட்சியைச்

# Cricket, kites & computers!



Tomorrow is around the corner. With big demands. Will your son be ready to face them? Strengthen him with hope for the future and start a long term savings plan with **Dhandapani**. Give him that little extra for a headstart with confidence. It's not for nothing the world has trusted us for decades!

*For more details, call our office or any leading broker.*

UPGRADED
FA+
BY CRISIL




Finance and Investments Ltd.

Regd. Office: 141, Linghi Chetty Street, **Madras** 600 001
Admn. Office: 645, Mount Road, II Floor, **Madras** 600 006
**Tel:** 8268285, 8259264, 8251242, 8284280

WW/DFIL/006/94

**DECADES OF TRUST, A GLOWING TOMORROW.**

**BANGALORE:** 26/6, N.R. Road Cross, Bangalore 560 002. **COCHIN:** 41/406, Chittur Road, Ernakulam, Cochin 682 035 **COIMBATORE:** 391, Bharathiyar Road, New Siddha Pudur, Coimbatore 641 044 **CUDDAPAH:** 7/153-3B, N.G.O. Colony, Cuddapah 516 002 **MADRAS:** 22, Aryagowder Road, First Floor, West Mambalam, Madras 600 033 **MADURAI:** 69, Dhanappa Mudali St. Madurai 625 001 **SALEM:** Opp. to Indian Bank, Five Roads Junction Main Road, Salem 636 004 **TRICHY:** B-13, Basement, Chitra Complex, Chintamani, Trichy 620 002

This is in continuation of our statutory Ad appeared in *News Today* & *Vernacular* on 19/5/94

சேர்ந்தவர்களானாலும் நிதானம் தவறாமல் இருப்பது அவசியம். அரசுப் பணியில் உள்ள வர்களுக்கும் இது பொருந்தும். அரசுப் பணி யைச் சார்ந்த செயலர்கள், தனியார்த் துறை யில் உள்ள உயர்மட்ட நிர்வாகிகள் ஆகிய அனைவருடைய பதவிகளுக்கும் பங்கம் ஏற்படுத்த குருவின் சஞ்சாரம் ஒரு காரணமாக அமையலாம். எனவே இதற்குப் பரிகாரமாக ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்தோத்திரம், ஆதித்ய ஹிருதய ஸ்தோத்திரம் இவற்றை ஸ்வர சப்தத்துடன் அக்ஷர சுத்தமாகக் கனீரெனச் சொல்லக் கூடிய வேதவித்துக்களை வீட்டிற்கு அழைத்து காலை அல்லது மாலையில் பாராயணம் செய்யச் சொல்லி, அவர்களுக்குரிய சன்மானத்தை அளித்து ஆசி பெறுதல் ஒன்றே சிறந்த பரிகாரம். வசதி இல்லாதவர்கள் விஷ்ணு புராணத்தைப் படிக்கலாம்.

## கன்னி ராசி :

உத்திரம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 - ஆம் பாதங்கள்.

ஸர்ப்பக்கிரகங்களின் சஞ்சாரம் உகந்த நிலையில் இல்லை. அதனால் ஏமாறுதல், கவ னக்குறைவால் பொருளிழப்பு நம்பத்தகாத வர்களை நம்பி நாணயத்தை இழத்தல், மதுப் பழக்கம் உள்ளவர்களின் உடல் நலக்குறைவு என ஏதோ ஒன்றினால் மன உளைச்சல் உண்டாகலாம். ஆனால் 2 ல் உள்ள குருவும் சுக்கிரனும் உதவும் நிலையிலேயே இருப்ப துடன் எத்தகைய நிலையிலும் துணை நின்று காப்பார்கள். மாதத்தின் முற்பகுதியில் அங்கா ரகனும் சூரியனும் கூட உதவக்கூடிய நிலை. இதனால் சுங்க இலாகா காவல்துறை ஆகிய வற்றில் பணிபுரிவர்க்குப் பாராட்டும் பரிசும் கிடைக்கும். நடிப்புத்துறையினர்க்கு நல்ல தொரு சூழ்நிலை உருவாகியுள்ளது. எனவே புது ஒப்பந்தங்களுக்குரிய முயற்சியை எடுக்க லாம். ஆட்சியில் 6 ல் உள்ள சனி தொழிலில் மேன்மையைக் கொடுப்பார். தனலாபம் ஏற்படும். ஆயினும் கன்னி இராசிக்காரர்கள் எண்ணியதை முடிக்க முடியாமல் போவ தற்குக் காரணம் இவர்களில் சிலர் மதுப் பழக்கத்திற்கு ஆளாகி தன் வாழ்க்கையைத் தானே கெடுத்துக் கொள்வதே. எனவே அதை மாற்றுவது நல்லது. அதன்பின் அவர்களின் முன்னேற்றத்தை எந்தக் கிரகத்தாலும் தடுக்க முடியாது.

## துலா ராசி :

சித்திரை 3, 4 - ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 - ஆம் பாதங்கள்.



கூட்டு செய்வதற்காக பாசிப் பருப்பைக் குக்க ரில் வேக வைக்கும்போது நன்றாகக் குழைந்து விடுவதுண்டு. இப்படிக் குழைந்து போகாமல் பருப்பு இதழ் இதழாக இருக்க ஒரு மூடி போட்ட டிபன் பாக்ஸில் பருப்பைப் போட்டு திட்டமாக நீர் ஊற்றிச் சிறிது உப்பு சேர்த்து மூடி குக்கரில் வைத்தால் பருப்பு குழையாது.

- எஸ். விஜயா சீனிவாசன்

மாதத்தின் முதல் மூன்று வாரங்களுக்கு ஆட்சியில் உள்ள சுக்கிரன் உங்கள் முயற்சி களில் ஒன்றிற்கு வெற்றியைத் தேடித் தந்து மன நிம்மதியைத் தருவார். இப்படி எழுது வதற்கு மாறாக நடக்கிறது எனில் உங்கள் ஜாதகக் கட்டத்தில் சந்திரன் உள்ள இடம் அல்லது நடக்கும் தசாபுத்திகளினால் ஏற்படும் முரண்பாடுகளே காரணமாகும். சரியாகக் கணிக்கப்பட்ட ஜாதகர்களுக்குக் கோட்சார மும் தசாபுத்திகளும் முறைப்படி பலனைத் தரும் என்பதில் ஐயமில்லை. பதவி உயர்வுக் கும், விரும்பிய இடமாற்றத்திற்கும் ஏற்ற சூழ் நிலை உண்டு. முயற்சிதான் செய்யுங்களேன். மற்றபடி சூரியனால் அரசாங்க நன்மை ஒன்று கிடைக்கும். ஆனால் அலைச்சல் மிக்க மாதமாக அமையும். வயிறும், கண்ணும் பாதிக்கப்பட்டுச் சரியாகும். எரிபொருள் துறையினர்க்கு ஏற்றம் தரும் மாதம்தான். அதற்கு ஏற்ப உங்கள் திட்டத்தை மாற்றிச் செயல் புரிவது நல்லது. அம்பாளுக்கு அர்ச் சனை செய்யுங்கள். மதுரைப் பக்கம் இருப்ப வர்கள் புதன் சஞ்சாரத்தால் ஏற்படும் பலன் கள் உங்களுக்கு ஏற்றவகையில் நடக்க அருள் மிகு சொக்கநாதருக்கும் அவர் மனம் மகிழ வீற்றிருக்கும் மீனாட்சிக்கும் அர்ச்சனை செய் யுங்கள். எல்லாம் நல்லபடி நடக்கும்.

## விருச்சிக ராசி :

விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

12 - ம் இடத்தில் ஒரு கிரகக் கூட்டமே அமர்ந்து உங்களுக்குப் பலவிதத்திலும் விரயம், சோதனை இவைகளை ஏற்படுத்த எண்ணினா லும், மாதத்தின் முதற்பகுதியில் உச்ச புதனும் பிற்பகுதியில் ஆட்சியில் உள்ள சூரியனும் இன்னும் பல மாதங்கள் கேதுவும் பக்கபல மாக நின்று உங்களுக்கு நற்பயனையே அளிக்க இருக்கிறார்கள். சுக்கிரனும், குருவும், சுபவிர யம் ஒன்றை ஏற்படுத்துவார்கள். கிரகப் பிரவே

சமோ, திருமணமோ கூட நடக்கலாம். மாமனார் வீட்டுச் சீதனம் கிடைக்கலாம். மற்றபடி அன்றாடப் பணியில் பாதிப்பு இல்லை. ஒரு புனித யாத்திரை மேற் கொள்ளுவீர்கள். அது எதிர்பாராமல் அமையும். உங்களுக்கு ஒவ்வாத, உங்களது அந்தஸ்துக்கு மாறான, அதே சமயம் நேர்மையாகச் செய்யக் கூடிய தொழில் ஒன்றில், ஓரிரு கூட்டாளிகளுடன் நீங்கள் ஈடுபடத்தக்கச் சூழ்நிலை உருவாகும். அதில் பங்கேற்பதால் இலாபம் உண்டு.

## தனுசு ராசி :

மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.

இலாபகரமான மாதம். குரு உங்கள் ஜனன ஜாதகத்தில் ஆட்சியிலிருந்து, சுக்கிரனும் உச்சம் பெற்று அவனது தசையும் நடக்குமானால் இந்த மாதத்தில் நீங்கள் தொட்டது துலங்கும். நினைத்தது நடக்கும். நீங்கள் நடிப்புத் துறையைச் சார்ந்தவரானால் கொடி கட்டிப் பறப்பீர்கள். வியாபாரியானால் மண்ணும் பொன்னாகும். எழுத்தாளரானால் சாகித்திய அகடாமி விருதை அடையத் தக்கதொரு இலக்கியத்தைப் படைப்பீர்கள். அரசியல்வாதியானால் அமைச்சரவையில் இடம் பிடிப்பீர்கள். மாணவர்களானால் வகுப்பில் முதலிடம்தான். குடும்பத் தலைவியானால் குடும்பத்தில் குதூகலம் நிரம்பி வழியும். இப்படி எத்துறையினர்க்கும் ஏற்றம் தரும் மாதம். ஆயினும் 5 ல் உள்ள கேதுவும் 7 ல் உள்ள அங்காரகனும் திருமண விஷயத்தில் தடங்கலை உண்டாக்கலாம். சூரியனும் செவ்வாயும் கேதுவும் சரியாகச் சஞ்சரிக்காததால் தசாபுக்தி சரியில்லாதவர்கள், கணபதி ஹோமம், நவக்கிர ஹோமம் இவைகளை நடத்திடலாம். கெடுக்கும் கிரகங்களின் வேகத்தைக் கட்டுப் படுத்தினால் அரசபோகத்தை அடையலாம். ஸ்ரீ பாம்பன் சுவாமிகளின் ஸ்ரீஷண்முக கவசம் கைகொடுக்கலாம்.

## மகர ராசி :

உத்திராடம் 2, 3, 4 - ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 - ஆம் பாதங்கள்.

தேவ குருவும், அசுர குருவும் சேர்ந்தே சோதித்தாலும் மாதத்தின் முற்பகுதியில் தாங்கிக் கொள்ளும் மன ஆற்றலை அங்காரகனும் பிற்பகுதியில் புதனும் தர இருக்கிறார்கள். அதனால் பிரச்னைகளைச் சமாளிப்பதில் உற்ற சகோதரனும், மற்றும் தாய்மாமன் வகையும் உதவுவார்கள். நட்பும் கை கொடுக்கும். அதனால் இதுவரை தீர்க்கப்படாத பிரச்னை ஒன்று சுமுகமாகத் தீரும். தசாபுக்தி சரியான நிலையில் உள்ளவர்களுக்கு இந்த கோட்சாரத்தினால் பாதிப்பு இல்லை. மற்றவர்கள் பொறுமையுடன் பிரச்னைகளை அணுகுவது நல்லது. அலுவலகப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகளின் கெடுபிடியால் மனஉளைச்சல் உண்டாகலாம். அரசியல்வாதிகளானால் பதவியை இழக்க நேரிடும். எனவே இந்த நேரத்தில் ஒதுங்க வேண்டிய நிலையில் ஒதுங்கியும், பதுங்கியும் இருப்பது நல்லது. ஏனெனில் 10 ல் உள்ள கிரகக் கூட்டம் அத்தகைய நிலையில் உள்ளன. உடல் நிலை பாதிக்கப்பட்டவர்கள் ஆஞ்சநேயரைக் குறித்த ஸ்தோத்திரங்களைப் பாராயணம் செய்யுங்கள். பசுவிற்கு ஒரு பிடி பசும்புல், நாய்க்கு ஒரு பிடி அன்னம், இறைவனுக்கு இரண்டொரு பச்சிலைகள், 'இன்சொல் கூறல்' எனும் திருமூலரின் 'யாவர்க்கும் எளியவாம்' எனும் பாடலைப் பொருளுணர்ந்து படித்து; அதற்கேற்ப நடந்து கொள்வது என்பது, பரிகாரங்களில் தலையாய பரிகாரமாகும்.

## கும்ப ராசி :

அவிட்டம் 3, 4 - ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 - ஆம் பாதங்கள்.

மாதத்தின் முற்பகுதியில் புதனால் ஒரு ஆதாயம் உண்டு. அது பிறந்த வீட்டிலிருந்து கிடைக்கும் சீதனமாகவும் இருக்கலாம். அல்லது செய்யுந்தொழிலில் திடீர் லாபமும் ஏற்படலாம். நகை வாங்கும் யோகம் உண்டு. புத்திரர்களால் சுகம் உண்டு. விளையாட்டு வீரர்களுக்கு வெற்றி ஏற்படும். எல்லாவற்றிற்கும் மேலாக தேவ குருவும், அசுர குருவும் சுபநிகழ்ச்சிக்குரிய சூழ்நிலையை உண்டாக்குவார்கள். "நீங்களும் இப்படியே சென்ற குரு பெயர்ச்சியிலிருந்து எழுதி வருகிறீர்கள். நாங்களும்தான் விடாமல் அலைகிறோம். ஆனால் கழுத்தில் ஏறவில்லை தாலி. சொல்லு

---

**வேப்பிலையா? தூக்க இலையா?**

பனாரஸ் இந்து பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆய்வாளர்கள் வேப்பிலையைப் பற்றி ஓர் உண்மையைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். வேப்பிலையைக் கடித்து மெல்லுவதன் மூலம் கவலைகள் தீருகின்றன. காம்போஸ் மாத்திரைகள் சாப்பிடாமலே நல்ல தூக்கம் வருமாம்.

ஆதாரம் : தி டெலிகிராஃப் பத்திரிகை; தகவல் : பத்மினி



ரயிலில் நீண்ட தூரம் பயணம் செய்யும் பொழுது, கையில் சாப்பிடச் சப்பாத்தி கொண்டு சென்றால்தான் சௌகர்யமாக இருக்கும். சப்பாத்தி சிறிது நேரம் ஆனால் காய்ந்து போய்விடும். அது அப்படிக் காயாமல் இருக்க சப்பாத்தியை அடுக்கி அதன் மேல் துணியை வைத்து பேப்பர் சுருட்டுவது போல் சுருட்டி அதை பாலிதீன் கவரில் வைத்துக் கொண்டு சென்றால் சாப்பிட பஞ்சு போன்று இருக்கும்.

– ஆர். வத்ஸலா



யும், பஜ்ஜியும் காலி" எனக் கூறும் படியான நிலை சிலருக்கு இருக்கத்தான் செய்யும். மாதத்தின் பிற்பகுதியில் செவ்வாய் தோஷமுள்ள பெண்ணிற்கோ ஆணுக்கோ கட்டாயம் திருமணம் கைகூடி வரலாம். மற்றபடி தொழிலில் இருந்த தேக்கம் நீங்கும். விரும்பிய இடத்திற்கு மாற்றம் வரும். புத்திர பாக்கியம் உண்டு. 7½ சனி என்றாலும் குருவின் பார்வை போதுமே. தசாபுக்தி சரியில்லாதவர்களுக்குச் சற்று சோதனைகள் கூடுதலாக ஏற்படலாம். சரியாக இருப்பவர்களுக்குப் பிரச்னைகளுக்கு இடமில்லை. சூரிய நமஸ்காரமும் சனீஸ்வரனுக்கு "நீலாஞ்சன" எனத் தொடங்கும் ஸ்ரீவியாசரின் நவக்கிரக ஸ்தோத்திரத்தில் வரும் ஸ்லோகத்தையும் படிப்பது பயன் தரும்.

## மீன ராசி :

பூரட்டாதி 4 - ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.

மாதத்தின் முற்பகுதியில் சூரியனும் பிற்பகுதியில் புதனும் கீர்த்தியையும் தன இலாபத்தையும் தர இருக்கிறார்கள். மாதம் புராவும் தாம்பத்ய உறவிலும் பொருளாதார நிலையிலும் சிக்கலில்லாத நிலை உண்டு. இசை அல்லது வாத்திய சங்கீதம் இவற்றில் ஈடுபட்டுள்ள கலைஞர்களுக்கு வெளிநாடு சென்று திறமையைக் காட்டும் அளவிற்கு வசதியும் வாய்ப்பும் உண்டு. இதுவரை இருந்த சிக்கல்களும் சிரமங்களும் படிப்படியாகக் குறையும். புதன் 8 க்கு வரும்போது குழந்தைகளின் படிப்பில் முன்னேற்றத்தைத் தருவார். உங்கள் சகோதரரால், இந்த இராசியில் பிறந்துள்ள உங்கள் குழந்தை களுக்கு எதிர் பாராத உதவி கிடைக்கும். ஏனைய கிரகங்கள் அனைத்தும் சிரமங்களைத் தரும் சூழ்நிலையில் உலாவருவதால், ஆலங்குடி, திருநாகேஸ்வரம், திருநள்ளாறு ஆகிய ஸ்தல யாத்திரையை மேற்கொண்டு ஆங்காங்கே தரிசனம், அர்ச்சனை செய்யலாம். வசதி இல்லாதவர்கள் நவக்கிரக கோயிலுக்குச் சென்று நவநாயகர்களை மானஸீகமாக மனதில் நினைத்துப் பிரார்த்தனை செய்யலாம். "எதிலும் தெய்வம், எங்கும் அவன் கருணை உள்ளது' என நினைப்பவர்கள் சிறுசிறு சிரமங்களைப் பற்றிய கவலையே கொள்ள மாட்டார்கள். வியாழ பகவானுக்கு வீட்டிலேயே வியாழன் தோறும் காலை அல்லது மாலையில் விளக்கேற்றலாம்.

## எங்களுக்குச் சுதந்திரம் வேண்டாமா?

அப்பொழுது இந்தியா முழுவதும் தனி நபர் சத்தியாக்கிரகம் நடந்து கொண்டிருந்தது. சேலத்தில் சத்தியாக்கிரகிகளுக்கு ஆதரவாக ஊர்வலம் ஒன்று நடைபெற்றது. அதில் கலந்து கொண்ட ஒரு சிறுவன் தலைவர்களை வாழ்த்தி மற்றவர்களையும் உற்சாகப்படுத்தி வருவதை, கெடுபிடி மிகுந்த காவல் துறை அதிகாரி ஒருவர் பார்த்தார். அவனைப் பிடித்து விசாரிக்க ஆரம்பித்தார். அவன் கிராமத்திலிருந்து உயர்நிலைப் படிப்புக்காக சேலம் வந்து தனது சகோதரியின் வீட்டில் தங்கிப் படிப்பதை அறிந்தார். அந்தச் சிறுவனிடம் அவன் அணிந்திருந்த பூணூலைக் காட்டி, "பிராமணப் பையனாக இருக்கிறாய்,



மைதா மாவினால் ஒட்டுவதற்குப் பசை செய்யும்போது அதனுடன் துளி மயில் துத்தத்தைச் சேர்த்தால் மாவை எலி சாப்பிடாது. மயில் துத்தம் மளிகைக் கடைகளில் கிடைக்கும்.

– என். பங்கஜம்

ஏதோ படிப்பு, வேதம், மந்திரம் என்பதை விட்டு உனக்கெதற்கு இந்த அரசியல், சுதந்திரம், கோஷம் எல்லாம்?" என்று கேட்டார். அதிகாரியின் அதட்டலுக்கும், மிரட்டலுக்கும் சற்றும் சளைக்காமல் அந்த மாணவன் அவரைப்பார்த்துத் துணிவுடன், "ஏன் சார், அப்படின்னா பிராம்மணர்களுக்கு சுதந்திரம் வேண்டாமா?" என்று திருப்பிக் கேட்டான். அந்த மாணவர் பிற்காலத்தில் அரசியலுக்காகத் தன் படிப்பைத் துறந்து அரசியல் போராட்டங்களில் ஈடுபட்டார். இன்று சுதந்திரத் தியாகிகளுக்குரிய ஓய்வூதியத்தைப் பெறும் அவர், தமது 75 வயதிலும், தியாகிகள் கூட்டம் எங்கு நடந்தாலும் அங்குசென்று, தியாகிகள் தேசபக்தியை மக்களிடம் வளர்க்க வேண்டும் என்று கூறுபவர்களில் ஒருவராகத் திகழ்கிறார். இவ்வாறு மாணவப் பருவத்திலிருந்து வயோதிகம் வரை, சுதந்திர உணர்வு, தன்னம்பிக்கை, தைரியம் ஆகியவைகளைக் கொண்டு ஒருவர் விளங்க, அவர் பிறந்த நேரத்தில் அமைந்த கிரக அமைப்புக்களே காரணமாகும். அத்தகைய அமைப்பை ஒருவரது உள்ளங்கையில் உள்ள ரேகைகளைக் கொண்டும் தீர்மானிக்கலாம்.

ஒருவரது ஜாதகத்தில் லக்கினத்திக்கு 8 இல் குருவும், 2 ல் சனியும் 10 ல் ராகுவும் 12 இல் சூரியனும் அமர்ந்து இலக்கினாதிபதி ஆட்சியிலும் புதன், செவ்வாய் இவர்களுடன் இருந்தால் மேற்காணும் விதத்தில் தன்னம்பிக்கை, சுதந்திர உணர்வு, தைரியம், தியாக மனப்பான்மை ஏற்படும். உள்ளங்கையில் ஆயுள், புத்திரேகைகள் ஆரம்பத்தில் ஒரு குறிப்பிட்ட புள்ளியிலிருந்து ஆரம்பிக்கலாம். படத்தில் உள்ளதுபோல் (s) இடைவெளி விட்டு ஆரம்பித்திருக்க வேண்டும். அதேசமயம் சிறந்த தொரு குருமேடும், அதன் மேல் ஒரு முக்கோணம் போன்ற உருவமும் அமைந்திருக்க வேண்டும். அத்துடன் சுக்கிர மேட்டில் வலை போன்ற ரேகைகளின் (G) அமைப்பும் செவ்வாய் மேட்டிலும், புதன் மேட்டிலும் சிறுசிறு நேர்க்கோடுகள் (L) அமைந்திருக்க வேண்டும். சனிமேட்டில் விதிரேகை முடியும் இடத்தில் வலைகுறிகளுடன் இருக்க வேண்டும். அவ்வாறு இருப்பின் குருவால் தன்னம்பிக்கையும், செவ்வாயால் தைரியமும், சுக்கிர மேட்டமைப்பால் குடும்பப் பாசத்திற்கு அதிக முக்கியத்துவம் தராத நிலையும் ஏற்படும். சனி மேட்டமைப்பால் சிறைவாசத்திற்கும் அஞ்சாத நெஞ்சம் உண்டு என்பதையும் அறியலாம்.

எனவே ஒரு ஆண் அல்லது பெண்ணின் உள்ளங்கைகளில் மேற்குறித்த அமைப்புக்கள் இருந்தால், அவர்கள் குடும்பத்தில் அவர்களிடம் மட்டும் நியாய உணர்வும், எடுத்ததைச் சாதிக்கும் ஆற்றலும் அதிகம் இருப்பதைக் காணலாம். சிறுவர்கள் கையில் இந்த கைய ரேகைகளும், ஜாதக அமைப்பு மேலே கூறப்பட்ட நிலையிலும் அமைந்திருந்தால் அப்படிப்பட்டவர்களை (Political Science) அரசியல் விஞ்ஞானம் எடுக் கும்படியோ அல்லது இராணுவப் பள்ளி களில் சேரும் படியோ ஏற்பாடு செய்தால் பிற்காலத்தில் அவர்கள் அரசியலில் ஒரு பெருந்தலைவராகவோ, அல்லது காவல், சுங்கத்துறைகளில் பெரியதொரு அதிகாரியாகவோ ஆகக் கூடிய வாய்ப்பு கிடைக்கும்.

- ஜெயலட்சுமி கிருஷ்ணன்





# வார விடுமுறையில் சுகம் தரு

## தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகமும், தென்னக இரயில்வே

தென்னக இரயில்வேயின் ஒத்துழைப்புடன் அதிவேக இரயில்களில் சிறப்பான முன் பதிவு வசதிகள்.

தமிழ்நாடு ஓட்டல்களில் உறுதி செய்யப்பட்ட தங்குமிடம் மற்றும் உணவு வசதிகள்.

குளிர்மிகு ம
உற்சாகமூட்டும்
சரணாலயங்கள்,
புண்ணியஸ்தலா
பெருமை பேசும்
கூட கோபுரங்க

### கோவை - ஊட்டி - முதுமலை சுற்றுலா

நீலகிரி எக்ஸ்பிரஸ்

சென்னை சென்ட்ரல்

வெள்ளி இரவு 9.05 மணிக்கு புறப்பட்டு, திங்கள் காலை 5.55 மணிக்கு வந்து சேரும்.

சென்னை, கோயம்புத்தூர், ஊட்டி - குன்னூர் சிம்ஸ் பூங்கா - தொட்டபெட்டா - ஊட்டி படகுப் பயணம் - பொட்டானிகல் பூங்கா, மருதமலை, முதுமலை.

**கட்டணம் ரூ.750**

வெள்ளிக்கிழமை தோறும் சுற்றுலா உண்டு.



### மதுரை - கொடைக்கானல் - பழனி சுற்றுலா

முத்து நகர் எக்ஸ்பிரஸ்

சென்னை எழும்பூர்

வெள்ளி மாலை 6.00 மணிக்குப் புறப்பட்டு திங்கள் காலை 8.15 மணிக்கு வந்து சேரும்.

சென்னை, மதுரை - மீனாட்சி ஆலயம் - திருமலை நாயக்கர் மகால் - அழகர் கோவில், திருப்பரங்குன்றம், கொடைக் கானல், பழனி.

**கட்டணம் ரூ.850**

வெள்ளிக்கிழமை தோறும் சுற்றுலா உண்டு.



### திருச்சி -
### சமய

மலைக்கோட்டை
சென்னை எழும்
வெள்ளி இரவு
புறப்பட்டு திங்கள்
வந்து சேரும்.
சென்னை, திரு
திருவானைக்காவ
சமயபுரம், தஞ்சாவ

**கட்டணம் ரூ.**

ஒவ்வொரு மாதமு
சுற்றுலா உண்டு.



- ★ இரயில்வே விதிமுறைப்படி 5-12 வயது வரம்பில் உள்ள குழந்தைகளுக்கு மட்டும் இரயில் கட்டணத்தில் சலுகை உண்டு.
- ★ ஒரு குழுவாகச் சுற்றுலா செல்ல விரும்புகிறவர்களுக்கு, வேண்டுகோளுக்கு ஏற்ப சுற்றுலா அமைத்துத் தரப்படும்.
- ★ இந்தக் கட்டணத்தில் உணவுச் செலவு அடங்காது.
- ★ அரசு ஊழியர்கள் மற்றும் அரசு நிறுவன ஊழியர்கள் இந்தச் சுற்றுலா திட்டம் மூலம் LTC சலுகை பெறலாம்.
- ★ ஜூன் முதல் இந்த சுற்றுலாத் திட்டம் நடைமுறைக்கு வந்துள்ளது.

மேலும் விபரங்களுக்கும், முன் பதிவுக்கும் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:



**தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் லிமிடெட்,**

143, அண்ணா சாலை, சென்னை 600 002.

தொலைபேசி : 830390, 830498

Tlx.: MS 041-7575 Fax: 91-44-830380

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் டிக்கெட் கவுண்டர்கள்:

சென்னை சென்ட்ரல் - 563351, சென்னை எழும்பூர் - 8252165

அல்லது தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் விற்பனை ஏஜெண்டுகள்

## இரயில் பயண சுற்றுலாக்கள் !

### ...ணந்து மகிழ்வூட்ட உங்களை இருகரம் கூப்பி வரவேற்கிறது

...ஸ்தலங்கள், ... விலங்கு ...ரவச மூட்டும் ... கலாச்சாரப் ... மாளிகைகள்,

**வெ**ள்ளி இரவு தொடங்கி, திங்கள் காலை வரை குதூகலமூட்டும் சுற்றுலா மையங்கள்.

**மு**ன்கூட்டியே திட்டமிடப்பட்ட தெளிவான சுற்றுலா! அரிய வாய்ப்பு! தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சி கழகத்தின் அன்பளிப்பு! தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகத்தின் மகத்தான சுற்றுலா திட்டங்கள்.

**...சாவூர் - ...லா**

... மணிக்குப் ... 5.30 மணிக்கு

... ஸ்ரீரங்கம், ...க்கோட்டை -

...வது வாரத்தில்



**ஏற்காடு - ஹொகனேக்கல் - தாரமங்கலம் சுற்றுலா**

ஏற்காடு எக்ஸ்பிரஸ்

சென்னை சென்ட்ரல்

வெள்ளி இரவு 10.45 மணிக்கு புறப்பட்டு திங்கள் காலை 5.30 மணிக்கு வந்து சேரும்.

சென்னை, சேலம், ஏற்காடு - ஹொகனேக்கல் - சுந்தாஸ்ரமம் - தாரமங்கலம் - மேட்டூர் அணை - கோட்டை மாரியம்மன் கோவில்.

**கட்டணம் ரூ.750**

ஒவ்வொரு மாதமும் முதல் வாரத்தில் சுற்றுலா உண்டு.



**இராமேஸ்வரம் சுற்றுலா**

சேது எக்ஸ்பிரஸ்

சென்னை எழும்பூர்

வெள்ளி மாலை 5.20 மணிக்கு புறப்பட்டு திங்கள் காலை 6.20 மணிக்கு வந்து சேரும்.

சென்னை, இராமேஸ்வரம் - இராமேஸ்வரம் சமுத்திர ஸ்நானம் - இராமநாத சுவாமி கோவில், திருப்புலாணி, தேவிப்பட்டணம், மண்டபம்.

**கட்டணம் ரூ.800**

ஒவ்வொரு மாதமும் இரண்டாவது வாரத்தில் சுற்றுலா உண்டு.



**...மையான அரிய வாய்ப்பு !**

...ன் வசதிக்கேற்ப சொகுசு பேருந்து மற்றும் இரயிலில் ...ணம் செய்யலாம். பல இடங்களை குறுகிய காலத்தில் ...டுகளிக்க தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் உதவுகிறது.



**...ழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் ...ரிக்கும் சுற்றுலா திட்டங்களுக்கு விற்பனை ...வர்கள் தேவை. விண்ணப்பிக்கவும்**



DIPR/D/S/94



சிவாவின் விழிகள் வைரக் கற்கள் போல் பளிரென்று மின்னிக் கொண்டிருந்தன. முகம் பூராவும் மகிழ்ச்சி பரவியிருந்தது அப்பொழுது.

கண்கொட்டாமல் அவனையே பார்த்தாள் ரஞ்சனா.

"ரஞ்சி, ஒரு வாரத்துக்குள் பணம் ஏற்பாடு செய்து அனுப்புகிறேன் என்று எழுதி விடட்டுமா. காலேஜ் நாட்களில் சில்லறை கொண்டு வர மறந்துட்டாக் கூட, 'நடந்து போலாண்டா சிவா'ம்பானே தவிர எனக்கும் சேர்த்து டிக்கெட் எடுன்னு சொல்லவே மாட்டான். அப்படிப்பட்டவன் உதவி செய்ய முடியுமான்னு கேட்டிருக்கான்னா என்ன அவசரமோ..."

அவன் பேசப் பேச அவள் கோபம் உச்ச நிலைக்குப் போய் விட்டது.

ஏற்கெனவே நேற்று வந்த அந்தக் கடிதத்தைப் படித்ததிலிருந்து நெஞ்சு பூராவும் பரவிய எரிச்சல் இன்னும் குறையவில்லை.

"இப்படி ஒரு ஏமாளியா?"

என்கிட்ட உதவி கேக்கிறானே. இதுவே நான் செய்த பாக்கியம் என்கிற மாதிரி முகத்தில் அப்பியிருக்கிற பெருமையைப் பாரு!

விஷயம் இதுதான்.

"வியாபாரத்தில் பெரிய சிக்கலில் மாட்டியிருக்கிறேன். உடனே பணம் புரட்டி. ஆபீஸில் லோன் போட்டு 30 ஆயிரம் எப்படியாவது உதவினால் மாதா மாதம் கடனை நான் அடைத்து விடுகிறேன்" என்று சிவாவின் நண்பனிடமிருந்து கடிதம் வந்திருந்தது.

அதற்குத்தான் ஆபீஸ் கிளம்பும் அவசரத்திலும் நினைவாகக் கேட்கிறான்.

"ஒன்றா இரண்டா, கனையா 30 ஆயிரம்... நாளைக்குத் திருப்பித் தர முடியலைன்னா அப்புறம்..."

வெறுப்புடன் வார்த்தைகள் விழ அவன் முகத்திலிருந்த மகிழ்ச்சியும் மறைந்தது.

கொஞ்ச நேரம் சூடான வாக்குவாதத்திற்குப் பிறகு, "இப்பத்தான் புதுசா பதவி உயர்வு பெற்று மாற்றலில் வந்ததினால் லோன் கிடைப்பது கஷ்டம்" என்று அவள் சொன்னபடியே எழுதிப் போடுவதாக அரை மனதுடன் சொல்லி விட்டு ஆபீஸ் கிளம்பினான்.

# உள்ளே ஒரு ப்யூட்டி பார்லர்

**சிறுகதைப் போட்டியில் ஆறுதல் பரிசு பெற்ற கதை**

அவள் சென்றதும் அவசரமாக வீட்டு வேலைகளை முடித்தவள் வெளியே கிளம்பத் தயாராய் கண்ணாடி முன் நின்று உடைகளைச் சரிபார்த்துக் கொண்டாள்.

மஞ்சள் நிற பிரிண்டெட் கார்டன் சில்க்கும், மேட்சாக காண்ட்ராஸ்ட் பச்சை பிளவுஸூம் எடுப்பாக இருந்தாலும் முகம் மட்டும் இருளடைந்து ஏதேதோ உணர்ச்சிகளின் கலவையாய் மாறியிருந்தது.

முப்பது வயது தாண்டினால் மாதம் ஒரு தடவையாவது அழகு நிலையம் போவது அவசியம் என்ற நினைப்பு கொண்டவள் அவள். முடிந்தால் இன்றே போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள்.

நண்பர்கள், சகோதரி என்று அவள் வைத்திருக்கும் அதிகப்படி பாசம்தான் பொறாமையாய் மாறி தன் முகத்தில் பிரதிபலிக்கிறது என்பது புரிந்தாலும், தான் செய்தது குடும்ப நன்மைக்காகத்தானே என்று தோன்றவே, நேரத்தை வீணாக்காமல் பர்ஸை எடுத்துக் கொண்டு இறங்கிய வளுக்கு, மேல் கொண்டு சிந்தனைக்கு இடம் வைக்காமல் உடனே டாக்ஸி கிடைத்தது.

"மாட்டுங்கா மார்க்கெட்" என்றாள்.

"என்னம்மா, கோயிலாண்ட போகணுமா இல்ல..." இவளைத் தமிழ் என்று தெரிந்து கொண்ட டிரைவர் தமிழிலேயே கேட்க உற்சாகம் பீறிட்டது.

"தமிழா நீங்களும்?" உடனடியாக இனம்புரியாத ஏதோ ஒரு பாசம் ஒட்டிக் கொள்ள, "நாங்க பம்பாய் வந்து இரண்டு மாதம் தான் ஆகிறது. இந்தி சுத்தமாய் தெரியாது" என்றவள் தொடர்ந்து,

"எங்க ஊரு ராஜபாளையம். அங்க இந்தியெல்லாம் எங்க இருக்கு?" என்றாள்.

"அட நானும் மதுரைக்காரன்தாங்க" டிரைவரும் தொடர்ந்தான்.

"வாரத்தில் ஒருநாள் மாட்டுங்கா போய் சாமானெல்லாம் வாங்கிட்டு வந்திடறேன். அங்கதானே தமிழில் பேச முடியும். இல்லாட்டா இவங்க ஒண்ணு சொல்ல, நான் ஒண்ணு சொல்ல..."

தமிழ் பேச யாருமில்லாமல் இவள் தவிப்பதைச் சொல்ல, பம்பாயைப் பற்றி அவன் சொல்ல மாட்டுங்கா கறிகாய் மார்க்கெட்டில் டாக்ஸி நுழைந்ததே தெரியவில்லை.

"இங்கேயே இறங்கிக்கிறேன்" நூறு ரூபாய் நோட்டை நீட்டினாள்.

"பதினைந்து ரூபாய்தான் ஆச்சு. சில்லறை இல்லியே. எதிர் கடைல வாங்கிட்டு வரேன்", டிரைவர் ரோடைக் கிராஸ் செய்ததும், எதிரே பிள்ளையார் கோயிலில் ஆரத்தி காட்டுவது தெரிய ஒரு நிமிடம் நுழைந்து தீபம் ஒற்றிக் கொண்டு திரும்பினாள்.

நிறுத்திய இடத்தில் டாக்ஸியைக் காணோம். பகிரென்றது.

பதறிப் போய் அங்கும் இங்கும் தேடினாள்.

சிட்டாய்ப் பறந்திருந்தது டாக்ஸி.

"நம்மூர்க்காரன் நல்லவன் என்று நம்பி அவசரமாக கைப் பையைக் கூட எடுக்காமல் இறங்கினேனே, அடி முட்டாள் நான்."

**கோமதிசுந்தரம்**

"பையில், நகைக் கடையில் மாற்றுவதற்காகக் கொண்டு வந்த மோதிரமும், பர்ஸும் வேறு இருக்கிறதே..."

வயிற்றைக் கலக்கியது. நெஞ்சு படபடவென்று அடிக்கத் தொடங்கியது.

'இது பம்பாய், யாரையும் நம்பி எதையும் உளறி விடாதே' என்ற கணவனின் எச்சரிக்கையையும் மீறி, இப்படிப் பேச்சிலேயே ஏமாந்திருக்கிறேனே.'

'யாரிடம் கேட்க?'

பக்கத்திலேயே போலீஸ் சௌக்கி இருந்தது. போக முடியாமல் பயமும் வெட்கமும் சூழ்ந்தது.

டாக்ஸி நம்பர் கூடத் தெரியாமல் என்ன சொல்வது? கண்களில் இருந்த நீர் வழிந்து விடுவேன் என்று பயமுறுத்தியது.

வேறு சமயமாயிருந்தால் உடனே சிவாவிற்குப் போன் செய்து விடுவாள்.

அவனும் அலட்டிக் கொள்கிறவனில்லை. போனால் போகட்டும் விடு என்று விடுவான்.

ஆனால் இன்று அவனிடமும் பேச முடியாமல் நாவடைத்தது.

"பணத்தைத் தொலைச்சாலும் பரவாயில்லை. மனசார யாருக்கும் கொடுக்க மட்டும் கூடாது" என்று ஒரு வார்த்தை குத்திக் காட்டினாலும் போதும் இவளால் தாங்க முடியாது.

தலைசுற்ற காலியாயிருந்த கடையொன்றின் படியில் கொஞ்ச நேரம் உட்கார்ந்தாள். ஒருவேளை அவன் எங்காவது தென்படுகிறானா என்று பார்க்க.

நாவறண்டது. குளிர்பானம் குடிக்கும் ஆசையை அடக்கிக் கொண்டாள்.

சின்ன பர்ஸில் சில்லறையாகப் பத்து ரூபாய்தான் இருந்தது.

டாக்ஸிக்குக் கூடப் பணமில்லை. அரை மணி யுகமாகக் கடந்தது. இனியும் இங்கே இருப்பதில் என்ன பிரயோஜனம்? ரோடைக் கிராஸ் செய்து எதிர்ப்பக்கம் வந்த பஸ்ஸில் ஏறி, மாஹிம் கவர்ன்மென்ட் காலனியில் இறங்கி, வெறும் கையுடன் வீட்டில் நுழைந்தவளுக்கு, அன்றைய தினமே அவளுக்கு எதிராகச் சதிசெய்வது போல் தோன்ற, கணவனிடம் விஷயத்தை எப்படிச் சொல்வது என்று புரியாமல், கட்டிலில் குப்புறச் சாய்ந்து அழத் தொடங்கினாள்.

**கா**லிங்பெல் ஓசை தட்டி எழுப்பியது.

எப்பொழுது கண்ணயர்ந்தோம்? யாராயிருக்கும் இந்நேரம்.

அவசரமாக எழுந்து முன்ஜாக்கிரதையாக கதவைத் திறக்காமல் கண்ணாடி வழியே வெளியே பார்த்தவள் விழிகள் வியப்பால் விரிந்து நின்றது.

டாக்ஸி டிரைவர்.

கதவைத் திறந்தாள்.

அவளைக் கண்டதும் அவன் முகம் மகிழ்ச்சியில் விரிந்தது.

"அப்பாடா, உங்களைத் தேடிக் கண்டு பிடிச்சுட்டேன் மேடம்" - பாரம் இறங்கிய அபார நிம்மதி அவன் முகத்தில் பரவியது.

"சில்லறை மாத்திட்டு வரதுக்குள்ளே ஸ்பெஷல் டிராபிக் போலீஸ் 'நோ பார்க்கிங்னு' வண்டியை எடுக்கச் சொல்லிட்டாங்க."

"ஒரு மாதிரி அவங்ககிட்ட இருந்து மீண்டு வந்தா உங்களைக் காணலை. நூறு ரூபாயோட டாக்ஸில பையும் பர்ஸும் வேற வச்சுட்டு இறங்கியிருக்கீங்களேன்னு தவிச்சுட்டேன்."

"பர்ஸ்ல இந்த மோதிரமும் பில்லும் இருந்தது."

"நல்லவேளை. இதை வெச்சு நகைக் கடையில் ஏறி விஷயத்தைச் சொன்னதும் அவங்க பில் புக்கைப் புரட்டி இந்த அட்ரஸ் தந்தாங்க."

"நீங்க எங்க அலையறீங்களோன்னு கவலைல வந்தேன்..."

பர்ஸ், பணம் எல்லாம் நீட்டினான். அவன் குரலில் புது உற்சாகம் அலையாய் பொங்கி

ஒரு பெண்ணுக்கு தலையில் திடீரென்று வழுக்கை விழுந்து விட்டதாக எழுதியிருந்தார். சில ஆண்களுக்கும் இம்மாதிரி தலையில் வட்ட வட்டமாக முடி உதிரும். ஒரு பக்க மீசை கூட உதிர்ந்து விடும். இதற்கு ஒத்தை சிகப்பு செம்பருத்தி சிறந்த மருந்து. (ஐந்து இதழ் கொண்டது.) அதைத் தினமும் காலையிலும், மாலையிலும் முடி கொட்டிய இடத்தில் 5 நாட்கள் தேய்த்து வர வேண்டும் (பூவையே அந்த இடத்தில் வைத்துத் தேய்க்க வேண்டும்). இப்படி செய்து வந்தால் ஒரு வாரத்திலேயே மீண்டும் முடி முளைக்கத் துவங்கும். என் கணவருக்கு 15 ஆண்டுகளுக்கு முன் இதுபோல் இருந்தது. எனக்கு ஒரு வைத்தியர் இதை கூறினார். அது போல் செய்தவுடன் என் கணவருக்கு முடி முளைக்கத் தொடங்கி இன்று நன்றாக உள்ளது.

- செல்வசுந்தரி



யது.

அவள் முன் அவன் மிக உயர்ந்திருந்தான்.

"ஸாரி டிரைவர். எனக்காக எவ்வளவு சிரமப்பட்டிருக்கீங்க?" தொண்டை அடைத்தது பந்தாய். மீதிப் பணத்தையாவது நீங்களே வச்சுக்குங்க."

அவளை முடிக்க விடவில்லை. "இல்லை மேடம், நினைச்சா என்னாலே ஒரே சவாரியில் பணம் சம்பாதிக்க முடியும். மனுஷத் தனம்னு ஒண்ணு இருக்கில்ல?"

பளீரென்று வெண்பற்கள் மின்னச் சிரித்தான்.

"உங்களுக்குச் சமமா என்னை மதிச்சுப் பேசினீங்க. இப்ப உங்களை ஏமாத்தின மாதிரியில்ல ஆகி இருக்கும்?"

அவளையும் மீறிக் கண்களில் குபுக்கென்று நீர் நிறைந்தது.

பெரிய பிரச்சினை தீர்ந்ததற்கு நன்றி சொல்லும்விதமாக அவளை ஏறிட்டாள்.

சின்னச் சின்ன அம்மை வடுக்கள் அழகாகத் தெரிய காலையில் பார்த்தது போலில்லாமல் மிக வசீகரமாக மாறி இருந்தது, டிரைவரின் முகம்.

லட்ச ரூபாய் லாட்டரி அடித்தவன் மாதிரி அவன் கண்கள் மகிழ்ச்சியில் ஜொலித்துக் கொண்டிருந்தன.

இதே மாதிரி பார்வையை வேறு எங்கே சந்தித்தேன் என யோசித்தவள் முன் சிவாவின் முகம் வந்து நின்றது.

தன்னலமில்லாமல் செய்யும் உதவிக்கு இப்படி ஒரு பலனா?

காலையில் கணவனின் மகிழ்ச்சியின் காரணம் புரிய, வீணாக அவனைப் புண்படுத்தி இருக்க வேண்டாமோ... மனசு நிதானமாக அசைபோட்டது.

மாலையில் அலுப்புடன் வீட்டில் நுழைந்த சிவாவின் முன் காப்பி டிபனை வைத்தவள், "உங்க சிநேகிதனுக்குப் பணம் அனுப்பறேன்னு எழுதிடுங்க. நீங்க சொன்ன மாதிரி யோசித்ததில் பணம் என்ன நம்ம கையிலிருந்தா போகிறது? உதவின மாதிரியுமாச்சு."

அவள் குரலே இதமாக ஒலிக்க, உன் மனசு எப்படி மாறியது என்று கேட்க வாயெடுத்தவன், காரியமானால் சரி என்று வாயை மூடிக் கொண்டான்.

ஆவலுடன், அவன் முகத்தில் மின்னப் போகும் மகிழ்ச்சி அலைகளைக் காண அவனையே அசங்காது பார்த்துக் கொண்டு நின்றாள் ரஞ்சனா.

தாயைப் பரிவுடன் பார்க்கும் சிறுவன் போல தெரிந்தானே தவிர அவள் எதிர்பார்த்த ஒளி வீசவில்லை.

போகட்டும் ஒரு தடவைதான் அப்படி மகிழ முடியும் போலிருக்கிறது. எப்படியோ கணவனுக்கும் நண்பனுக்கும் உதவியாயிற்று என்று மனதில் ஆறுதலாக நினைத்துக் கொண்டு திரும்பியவளின் முகத்தை எதிரிலுள்ள கண்ணாடி பிரதிபலித்தது.

அட... இதென்ன... சிவாவின் முகத்தில் எதிர்பார்த்த பிரகாசம் பல மடங்காகி இப்பொழுது அவள் முகத்தில் ஒட்டிக் கொண்டிருந்தது.

காலையிலிருந்தே இருண்டு கிடந்த தன் முகம் அழகு நிலையம் போகாமலேயே, நீல வைரக் கற்களாய் ஒளி வீசும் கண்களுடன் புதிய அழகோடு மிகக் கவர்ச்சிகரமாய் மாறி இருக்கும் அதிசயத்தைப் பார்த்து அசந்து நின்றாள் அப்படியே.

# அல்ட்ரா கிரைண்ட்+ வீட்ல இருந்தா வேலை எவ்வளவு ஈஸி!





ULTRA
GRIND+

12 month warranty

**இந்தியாவின் முதல் "டேபிள் டாப்" ஆட்டுக்கல்**

என்னைப் போல ஒங்களப் போல பிஸியா இருக்கற புதுயுகப் பெண்களுக்காகவே தயாரிச்சிருக்காங்க இந்த அல்ட்ரா கிரைண்ட் + ஆமாம்! இந்த அல்ட்ரா கிரைண்ட் + வந்ததிலேருந்து இட்லி தோசைக்கு மாவு அரைக்கறது ஈஸி! சட்னிக்கு தேங்காய் துருவறது ஈஸி! சப்பாத்தி மாவு பிசையறது ஈஸி! இப்படி, நம்மளோட வேலையெல்லாம் எவ்வளவு ஈஸியாயிடுச்சு பாத்தீங்களா?

என்னைப் பொருத்தவரைக்கும் இல்லத்தரசிக்கு வசதி மட்டுமில்ல; இல்லத்திற்கே பெருமை தர்றது இந்த அல்ட்ரா கிரைண்ட் + என்ன, நான் சொல்றது சரிதானே!



மாவு பிசை சாதனம்



தேங்காய்த் துருவி

எல்ஜி தயாரிப்பு

எல் ஜி அல்ட்ரா அப்ளையன்சஸ் லிட்
எல் ஜி ஹவுஸ், திருச்சி ரோடு, கோயம்புத்தூர்-641 045.
போன்: 0422-216132. பேக்ஸ்: 0422-212810
மண்டல அலுவலகம்: சிந்தூர் டவர்ஸ்,
95, லஸ் சர்ச் சாலை, சென்னை- 600 004. தொ.பே: 4992101

PATENT PENDING DESIGN REGD. NO. 163445 & 163446.

**புதுயுக வசதி அல்ட்ரா. புதியதோர் அனுபவம் அல்ட்ரா.**

Anugrah 1693/94

## நிலவே கலையாதே!

கேரள மண்ணின் மணத்துடன் இளம் பெண் ஒருத்தியின் மனப் போராட்டங்களைச் சித்திரிக்கிறார் என். சி. மோகன் தாஸ்.

விலை ரூ. 32.00

(திருமகள் நிலையம், 55, வெங்கட நாராயணா ரோடு, தி. நகர்., சென்னை - 600 017.)

## திசை கண்டேன், வான் கண்டேன்

சுஜாதாவின் சுவாரஸ்யமான நாவல். அவருக்கே உரித்தான விஞ்ஞானம் + குறும்பு + காதல் கலந்த கதை.




விலை ரூ. 22.00

(விசா பப்ளிகேஷன்ஸ், 55, வெங்கட் நாராயணா ரோடு, சென்னை - 17.)

## மலையின் அடுத்த பக்கம்

சிவசங்கரியின் உள்ளத்தைத் தொடும் நாவல். 'அந்தப் பொண் ணோட வேதனை, இழப்பு புரியாம இப் படிக் கண்ணை கட்டி விட்ட குதிரையா இருக் கிறவங்கள வரிசையா நிக்க வச்சு சுடணும்...' இது கணவனை இழந்த பெண்ணிற்காக சிவசங்கரியின் வேகமான வரிகள்.

விலை ரூ. 42.00

(திருமகள் நிலையம், 55, வெங்கடநாராயணா ரோடு, தி. நகர், சென்னை - 600 017.)

## ஸ்ரீமத் பாகவத ரஸாம்ருதம்

பெருமைமிக்க பாகவதத்தினைத் தமிழில் தந்திருக்கிறார்கள். வடமொழிக் கவிதை சுவை குறையாமல் இருக்க சில இடங்களில் வடமொழிச் சொற்களையே பயன்படுத்தி இருக்கிறார் ஆசிரியர் எம். கே. வெங்கடராமன்.

விலை ரூ. 30.00

(தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, தி. நகர்., சென்னை - 17.)

## விந்தைகள், விநோதங்கள், விசித்திரங்கள்

குழந்தைகள் ஏன் பெரியவர்களும் தெரிந்து கொள்ள விரும்பும் நிறைய சுவையான செய்திகள். ஆசிரியர் - தேவ கோட்டை பி. நாராயணன்.

விலை ரூ. 15.00

(சுவாமி நிலையம், 5, மு.க.மு. சந்து, தேவகோட்டை - 623 302.)

## வர்க்கபலன் தரும் யோகங்கள்

ஜோதிடத்தில் ஆர்வம் உள்ளவர்க்கான நூல். ஆசிரியர் - எஸ். பி. சுப்பிரமணியன்.

விலை ரூ. 10.00

## நீங்களும் ஜோதிடம் கற்கலாம்

ஆசிரியர் எஸ். பி. சுப்ரமணியன்

விலை ரூ. 20.00

(இரண்டும் சங்கீதவாணி, 91, வி.எம். தெரு, மயிலாப்பூர், சென்னை - 4.)

## நானும் உன்னோடு

பழம்பெரும் எழுத்தாளரான எம்.வி. வெங்கடராம் அவர்களின் ஆறு குறு நாவல்கள். சௌராஷ்டிரர்களின் வாழ்க்கைப் போராட்டங்களைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

விலை ரூ. 38.00

## வேர்களைத் தேடி...

மணமுறிவு பெற்ற ஒரு பெண் வாழ்க்கையை, வேர்களைத் தேடுவதை அற்புதமாகப் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார் வாஸந்தி.

விலை ரூ. 24.00

## நீங்காத நினைவுகள்

மீ.ப. சோமு அவர்களின் மறக்க முடியாத பல சுவையான நிகழ்ச்சிகளின் தொகுப்பு.

விலை ரூ. 16.00

(மூன்றும் - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி.நகர்., சென்னை - 600 017.)

## மனையடி சாஸ்திரம்

சாஸ்திரப்படி வீடு கட்டும் முறைகள். ஆசிரியர் ஜோதிட பேராசிரியர் ஏ. எம். பிள்ளை என்கிற மயிலை பூபதிராஜன்.

விலை ரூ. 15.00

சிபிகள்

சக்திவாய்ந்த எழுத்தினைத் தனதாக்கிக் கொண்டுள்ள மேலாண்மை பொன்னுசாமியின் சிறுகதைத் தொகுப்பு, அவர் வாழும் மண்ணின் மனங்களின் காயங்களைக் கூறுகிறார்.

விலை ரூ. 18.00

(இரண்டும் - குமரிப் பதிப்பகம், 8, நீவா தெற்கு வீதி, நாகப்பட்டினம் - 610 001.

புல்லாங்குழல்

பாவலர் வடிவேலன் அவர்களின் கவிதைத் தொகுப்பு.

விலை ரூ. 25.00

(வள்ளி புத்தக நிலையம், 8ஏ, சுந்தரேஸ்வரர் கோயில் தெரு, இராயப்பேட்டை, சென்னை - 600 014.)

தொட்டில் சுகம்

டைரக்டர் பாக்யராஜ் கொடுத்த கதைக் கருவைக் கொண்டு அனுராதா ரமணன் படைத்த நாவல். பெண்ணிற்குள் இருக்கும் தாய்மை ஏக்கத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

விலை ரூ. 40.00

(திருமகள் நிலையம்)

அனிதாவின் காதல்கள்

சுஜாதாவின நாவல். இன்றைய பெண்ணின் சமூகக் குழப்பத்தைச் கட்டுகிறார்.

விலை ரூ. 42.00

(விசா பப்ளிகேஷன்ஸ்)

மாலதி - ஹரீந்திரன் கவிதைகள்

மாலதியின் கவித்துவமிக்க சமகாலச் சிந்தனை கொண்ட பாடல்கள்.

'வாழ்க்கைப் பாதையிலே
காதலிலே தோல்வி வந்தால்
சாதலோ சாதல் என்று
சரித்திரத்தை முடிக்காதே!'

விலை ரூ. 25.00

(பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரை குளம் மேற்கு வீதி, மயிலாப்பூர், சென்னை - 600 004.)

டென்ஷனைப் போக்க வழிகள்

மனோதத்துவ நிபுணர் டாக்டர் ஆர். எம். சோமசுந்தரின் கட்டுரைகள்.

விலை ரூ. 20.00

(குமரன் பதிப்பகம், 2, முத்துகிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 17)

யார் அந்த நாலு பேர்?

சுவையான விறுவிறுப்பான மர்ம நாவலைத் தந்திருப்பவர் புனிதன்.

விலை ரூ. 24.00

திருப்புமுனை

ஒரு திரைப்படம் பார்ப்பது போன்ற விறுவிறுப்பான நாவல். ஒரு சிறுவனால் கொலைக் குற்றம் சாட்டப்படும் இளைஞனுக்கு அவன் யாரென்றே தெரியாது. மைனம்பட்டி பாஸ்கரின் தெலுங்கு நாவலைத் தமிழில் தருபவர் சாலையூர் சக்திவேல்.

விலை ரூ. 48.00

(இரண்டும் - கங்கை புத்தக நிலையம், 13 தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017.)

விற்பனையாளராக வெற்றி பெறுவது எப்படி?

ஆசிரியர் பி.சி. கணேசன். தோற்றப் பொலிவு, தன்னம்பிக்கை என பல அரிய யோசனைகள்.

விலை ரூ. 13.00

போட்டித் தேர்வில் வெற்றி பெறும் யோகமா?

ஜோதிட விருப்பமுள்ளவர்களுக்கு விளக்கங்கள்

விலை ரூ. 10.00

இல்லந்தோறும் இயற்கை உணவுகள்

இயற்கை உணவு நிபுணர் டாக்டர் எஸ். மதுரம் சேகர் இயற்கை உணவின் சிறப்புக்களைக் கூறுகிறார். சூப், சட்னி என உணவு வகையறாக்கள் தரப்பட்டுள்ளன.

விலை ரூ. 36.00

(மூன்றும் நர்மதா பதிப்பகம், 16/7 ராஜா பாதர் தெரு, பாண்டிபஜார், தி. நகர், சென்னை - 17.)

வெற்றியடைய பயன்படும் காலத்தை வீணாக்காதீர்

டைம் மானேஜ்மெண்ட் எனப்படும் காலத்தின் அருமையை விவரிக்கும் கட்டுரைகள்.

விலை ரூ. 28.00

(அறிவாலயம், 107/7, கௌடியா மடம் சாலை, ராயப்பேட்டை, சென்னை - 600 014.)



# பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806

223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354.

கிளை: 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582



## பிக்சட் டெபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**5 வருடங்கள்**

**21%** ரூ. 50,000/- அதற்கு மேலும்

## PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

| ரொக்கப் பத்திரங்கள் | தொகை | பத்திரங்கள் மதிப்பு | தொகை | பத்திரங்கள் மதிப்பு |
|---|---|---|---|---|
| 36 மாதங்கள் | Rs.2,925/-<br>Rs.5,850/- | Rs.5,000/-<br>Rs.10,000/- | Rs.8,775/-<br>Rs.11,700/- | Rs.15,000/-<br>Rs.20,000/- |

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |
| Rs.25,280 | Rs.24,000 | Rs.24,000 | Rs.2,25,280 |

## கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/-
முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு
முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

## செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

## பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

## மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |
| Rs.7,500 | Rs.8,880 | Rs.10,725 | Rs.15,000 | Rs.19,010 |

**பென்ஷனர் நலத்திட்டம்**
**20 % P.a.**
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**சேமிப்பு திட்டம்**
**10% P.a.**

**தங்க நகை கடன்**
**Rs. 3,000 PER 10 GRAM**
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக டெபாசிட் செய்யும்பொழுதே வழங்கப்படும்.
* தனலோகம் டிபாசிட் திட்டம் 20% குறைந்த அளவு ரூ.20,000 டிபாசிட் காலம் 5 ஆண்டுகள்

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❑ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❑ வெள்ளி விடுமுறை

# கேட்டதும்.... கண்டதும்



உங்கள் "பெண்ணின்" திருமணம் சிறப்பாக நடக்க வேண்டுமா? கவலை வேண்டாம்... உங்கள் பொறுப்பை அவரிடம் விட்டு விடுங்கள்.... இதோ "வைராக்யம் வரதன்" தன் அனுபவத்தைச் சொல்கிறார்.

உங்களை J.D. துரை அவர்கள் நேருக்கு நேர் சந்தித்து காண்ட்ராக்டர் முறையில் சகல வசதிகளையும் செய்து கொடுக்கிறார். ஓர் உன்னத ஸ்தாபனமாக இயங்கும் ஜெ.டி. கேட்டரிங் சர்வீஸ் உங்களுக்காக ஏற்றுக் கொள்ளும் பொறுப்புகள் :

1. கல்யாண மண்டபம், 2. மங்கள வாத்யம், 3. வாஸமிகு மலர் மாலைகள் - பூச்செண்டுடன், 4. கல்யாண சீர் பக்ஷணங்கள் இரு வீட்டாருக்கும், 5. எழில்மிகு அங்குமணி சாமான்கள், 6. வைதீக சாமான்கள், 7. தேவைக்கேற்ப சாத்துக்குடி பை பிரிண்டிங் கவர் உட்பட, 8. தேவைக் கேற்ப தேங்காய் பைகள் (இரு வீட்டாருக்கும்), 9. தஞ்சாவூர் தாட்டலை போட்டு பல்சுவை விருந்து, 10. அலங்கார பத்துமடைப் பாய், 11. பல்சுவை சிற்றுண்டிகள், 12. தரமான சுவையான பில்டர் காப்பி, தேவைக்கேற்ப டீ, பூஸ்ட், 13. மடி சமையலும் ரெடி, 14. திருமண மண்டப வண்ண வண்ண கோலங்கள், 15. ஆரத்தி பச்சைப்பொடி ஏற்பாடுகள், 16. கும்ப கோணம் வெத்தலை, வாய்மணக்கும், வாஸமிகு வண்ணமிகு, கொப்புரை தேங்காய் தூளுடன் வறுத்த சீவல், 17. தேவைக்கேற்ப கார் ஏற்பாடுகள், 18. ஸ்டில் போட்டோ, வீடியோ கவரேஜ், 19. வாழை மரம், குருத்தோலை, மாவிலைத் தோரணங்கள், 20. பளிச்சென்று ப்ரகாசிக்கும் பெட்ரோமாக்ஸ் லைட், 21. மண்டப கிளீனிங் சாமான்கள்.

பல்சுவை விருந்தில் பதார்த்தங்கள் தயாரிப்பதில் கை தேர்ந்த (மாஸ்டர் ஆப் குக்) - காட்டரிங் கண்ட்ராக்டர் ஜெ.டி. துரை அவர்கள், திருமணம் மட்டுமல்ல, வரவேற்பு, தேநீர் விருந்து, மற்றும் இதர குடும்ப விசேஷ வைபவங்கள் அனைத்திற்கும் நீங்கள் அணுக வேண்டிய முகவரி.

## ஜெ.டி. துரை

காண்டீன், மற்றும் கேட்டரிங் கண்டிராக்டர்
(மாஸ்டர் ஆப் குக்)

**J.D. கேட்டரிங் ஸர்வீஸ் J.D. கார்டன்**

**பிளாட் நம்பர் 13 E.B. காலனி 3 வது தெரு,**
**ஆதம்பாக்கம், சென்னை - 600 088.**
**தொலைபேசி இலக்கம் : 2348164**

கிளை : **3A, II Floor** போஸ்டல் காலனி, 4வது தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.

# சொல்ல விரும்புகிறோம்!

• கொலாஜ் ஓவியங்களும், அதற்கான செய்முறைகளும் என்னை மிகவும் கவர்ந்தன. செலவில்லாத, உபயோகமான, அழகுணர்வு நிறைந்த ஒரு பொழுதுபோக்குக் கலையை கற்றுத் தந்திருக்கிறார் வித்யா.
இராமேஸ்வரம், மு. முருகேசன்.

• "வெற்றிப் பாதையில்" முதலாவதாக இடம்பெற்றுள்ள திருமதி கமலா பரசுராமன் தொழில் தொடங்கி முன்னேறத் துடிக்கும் பல இளம்பெண்களுக்கு நல்ல எடுத்துக்காட்டாகவும்; சிறந்த வழிகாட்டியாகவும் திகழ்கிறார். பெண் முன்னேற தடை ஏதும் இல்லை என விளங்க வைத்து விட்டார். திருமதி கமலா அவர்களின் துணிவும், நம்பிக்கையும் கொண்டால் முன்னேறும் நாள் தொலைவில் இல்லை என்பது உறுதி.
காரைக்கால், சுந்தரி இளங்கோ.




• 'மங்கையர் மலரைப் பார்! ஏதோ ஒரு மாற்றம் தெரிகிறது. அவங்க பொன்மொழிகளுக்கு மாறிட்டாங்க'. வெளியிட்டு இருந்த பொன்மொழிகள் அனைத்தும் அருமை. அதன்படி நடந்தால் வீடு மட்டும் அல்ல, நாடும் நன்றாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.
ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

• இம்மாத மங்கையர் மலரில் வைரம் ஒரு ஆடம்பரம்தான் என்ற தலைப்பில் வந்த கட்டுரையைப் படித்தேன். வைரம் ஒரு ஆடம்பரப் பொருள்தான் அது இல்லாமல் திருமணமே நடைபெறாது என்று சில பெற்றோர்கள் கட்டாயப்படுத்துவது துரதிர்ஷ்டவசமானது என்ற பாபாலால் அண்ட் கம்பெனி நிர்வாகி திருமதி. ஷீதல்பட் (அதுவும் ஒரு பெண், அதோடு ஒரு வியாபாரி) கூற்று உண்மையிலேயே ஒரு ஆச்சரியமாக இருந்தாலும் அவரின் உயர்ந்த எண்ணம் பலரின் உள்ளத்தில் ஒரு நல்ல மனமாற்றத்தையும், பல இளம்பெண்களின் வாழ்வுக்கு ஒளியேற்றவும் உதவும் என்பது திண்ணம்.
தாத்தையங்கார்பேட்டை, எஸ். புவனேஸ்வரி.

• "தமிழ்நாட்டில் ஒரு சிரவணபெலகோலாவா? எத்தனை தடவை திருவண்ணாமலை வழியாக சென்றும் இதைப் போன்ற கோயிலைக் கேள்விப்பட்டதில்லையே. இனி அவ் வழியே போனால் இக் கோயிலைப் பார்க்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டேன்.
ஒட்டன்சத்திரம், தேவகி ரவி.

• சித்ராவைப் பற்றி வெளியாகியிருந்த கட்டுரை என்னை மிகவும் பாதித்து விட்டது. தங்களின் சிறு சிறு குறைகளைக் கூட எண்ணி, எண்ணி மனம் சோர்ந்து, பெற்றோரை குறைகூறும் என் போன்றவர்களுக்கு நல்ல சவுக்கடியாக அமைந்து விட்டது.
மேடவாக்கம், எஸ். சுபா.

• நாட்டு நலனில் அக்கறை கொண்டவர்கள் அனைவருமே சிந்திக்க வேண்டிய தருணம் வந்து விட்டது. ஒரு பெண் அழுதாலே சாம்ராஜ்யம் அழிந்த சரித்திரமெல்லாம் நாம் சரித்திரங்களில் படித்திருக்கின்றோம். இன்று இந்தியாவில் பெண்கள் தினம் தினம் இரத்தக் கண்ணீர் வடிப்பது வாடிக்கையாகி விட்டது. இவர்களுக்காகப் போராடும் இந்தப் போராட்டம் சுதந்திரப் போராட்டத்தை விட மகத்தானது. பண்பாட்டில் சிறந்த நாம் உலக அரங்கில் மனித உரிமை பற்றி வாய் கிழியப் பேசுகின்றோம். ஆனால் சொந்த நாட்டிலேயே பெண்களை அசிங்கப்படுத்துகின்றோமே? பெண்கள் மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் இல்லையா? ஏராளமான எதிர்பார்ப்புகளோடும், எவ்வளவோ சாதனை புரிய வேண்டும் என்ற ஆவலிலும் வீட்டை விட்டு வெளியில் வந்து விட்ட பெண்களை இப்படி நிலைகுலைய வைக்கலாமா? எத்தனையோ விஷயங்களில் எவ்வளவோ முன்னேறி விட்ட நாம் இன்னும் 'கற்பு' பற்றி தெளிவில்லாமல் இருப்பதால்தான் இம்மாதிரி விஷயங்களில் சமூக விரோதிகள் பிளாக்மெயில் செய்ய நேரிடுகின்றது. இன்னும் குண்டுச் சட்டிக்குள் குதிரை ஓட்டிக் கொண்டிராமல் பரந்த உலகத் தைப் போல் பரந்த செயல்களைப் போல் நம்முடைய சிந்தனையையும் பரவலாக்குவோம்.
திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

• பச்சரிசி மாவின் பல்வேறு உபயோகங்களை, ஆகஸ்ட் மாத மங்கையர் மலரில் கண்டு பெரிதும் வியப்படைந்தோம். காரணம் இதுகாறும் பச்சரிசியை பண்டிகைக் காலங்களில் மட்டுமே பயன்படுத்தி வந்த எங்கள் குடும்பத்தினரை, பச்சரிசியின் மீது தனி ஈடுபாடு கொள்ளச் செய்துவிட்டது.
திருச்சி - 2, ராஜேஸ்வரி ராஜ்குமார்.

• ஆகஸ்டு மங்கையர் மலர் இதழில் வந்த எஸ். பட்டம்மாவின் 'ஒரு காகமாலையின் தபஸ்' என்ற கதை மிகவும் நன்றாக இருந்தது. 'இந்த வீட்டுக்கு பெண் கொடுத்து பெத்தவா கடனாளியாகப்படாது' என்ற வரிகள் மனதைத் தொட, மறக்க முடியாத வரிகள்.
பாண்டி - 11, வி. சத்யா.

• நோயாளியை மருத்துவமனை சென்று பார்க்கும் போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற கட்டுரையைப் படித்தவுடன் முன்பு ஒருமுறை நண்பனை நோயாளியாக பார்க்கச் சென்ற போது நடந்து கொண்ட விதத்தை நினைத்து வெட்கப்பட்டேன்.
நெல்லிக்குப்பம், தமிழ்ப்பரிதி.

• வடநாட்டில் நடந்த இழிவைத் தங்கள் எழுதுகோலால் எடுத்துக் காட்டி, இதற்கு ஒரு உடனடித் தீர்வினை பெண்களேதான் விரைந்து எடுக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டியுள்ளீர்கள். பெண்களை இவ்வாறெல்லாம் சித்திரிக்கும் சினிமாவை புறக்கணிக்கும் மனோபாவம் வரவேண்டும். பெண்களைத் தோலுரித்துக் காட்டாமல் சகோதரி நிவேதிதா, அன்னை தெரசாவைப் போல்தான் பெண்; தூய உள்ளம் கொண்டவள் போகப் பொருள் அல்ல என்ற எண்ணம் உருவாக வேண்டும்.
திருப்பூர், பவானி சோமசுந்தரம்.

• சில பிரச்னைகள்; சில வார்த்தைகள் கட்டுரையில் ஆசிரியர் மஞ்சுளா ரமேஷ் எண்ணமாய் சாடியிருக்கிறார்! அவர்களின் உள்ளக் குமுறல் "எரிமலையாக" வெடித்திருக்கிறது! எரிமலையின் தீக்குழம்புகளால் பெண்மை காப்பாற்றப் படட்டும்!
சென்னை - 83, மோ. முத்துலட்சுமி.

115 - ஆம் பக்கத் தொடர்ச்சி....

• வன்னிய குல க்ஷத்திரியர் 30, 165, டி.சி.இ. ஜூனியர் என்ஜினியர், அரசு உத்தியோகத்தில் பணிபுரிபவருக்கு அழகிய பட்டதாரி பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். முகவரி : பி. பசுபதி, நெ. 4, பில்லித்தோன்ஷன், 53, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005.

• வடமாள், ஹரித கோத்திரம், ஒரே பையன், பி.காம்., 29, பஞ்சாயத்து யூனியன், டைப்பிஸ்ட் 2500, புதுக்கோட்டையில் சொந்த வீடு உள்ள வரனுக்கு, வேலைக்குச் செல்லும் பெண் தேவை. ஜாதகம் அவசியம். திரு. வேம்பு ஐயர், 273/16 கணேஷ் நகர், 4-ம் வீதி, புதுக்கோட்டை - 622 001.

• நாடார் கிறிஸ்தவர், 35 வயது, P.Job, Degree, 1200/- 170 செ.மீ., இவருக்கு 5 அடி முதல் 5.7", 35க்குள் இரட்சிப்பு, அபிஷேகம் பெற்ற பேராசிரியை, பி.எச்.டி. மேல்நிலைப் பள்ளி ஆசிரியை, இஞ்ஜினியர், தாய்மை முடித்தவர்கள்/முடியாதவர்கள் இந்து, கன்வர்ட் கிறிஸ்தவர்கள், பெந்தே கோஸ்தே பிரிவினர்களும், எந்த சாதியும் விண்ணப்பிக்கலாம். முகவரி : R.Samuel, 5-2-15C, Sattur Road, Sivakasi - 626 123.

* Fair, beautiful, Pious, graduate, post-graduate, 21-25, middle class family girl for Vadamal, Bharatwaj, Ashwini, 27, 171, clean habits, USA employed Software Engineer, M.S. unconsummated marriage annuled. Contact : C.A. Muthuswamy, 4, 44th Street, Nanganallur, Madras - 600 061.

* Vadama Iyer, Sankrithi, Bharani, M.Com., PGDMIR, 28 years, 176 cms, 6000/- p.m. employed in Public Ltd Company seeks fair Govt. employed bride apply Mrs. Seethalaxmi, C-8, Sector C. A.W.H.O. Colony, Secunderabad - 500 009.

* Mowgalya Revathi, 33, B.A., 2000/- wanted employed girl for boy, Contact : T. R. Hariharan, 'Sreeyas', Flat No. 1, Muthu Mohamed Road, Puzhthiwakkam, Madras - 91. Near Kumaran Theatre.

* Bride for Telugu, Brahmin, Vaidik, Velanadu, Gautamasa Gothram boy 31, 5'.7½, well settled, working at Surat, seeks graduate, fair, homely girl age between 24-27. write with horoscope to K. Srinivas, B-53, Cosmas Apartments, P.O. Box No. 18, Navyug College P.O. Surat - 395 009.

* Mudaliar widower 33 years, 165, 10,000/-pm having properties seeks goodlooking homely girl caste no bar. Reply to A.B. Rajasekar, B112 CPWD Qrts, Domlur, Bangalore - 560 071.

* Alliance invited from good-looking graduate girls for Iyer boy, 26, fair, tall, M.Tech., Ex.Engr. in ITI. Brahacharanm, Srivatsam, Mrigasirasham. send horoscope to R. Nagarajan, I-158/A, Sweet Home Aptmt. M.I.G. Colony, Indore - 452 008.

* Wealthy pharmacy graduate bachelor, 47 years, 180 cms, smart, fair, well-built, Vadagalai Iyengar, Vadula, Star Ayilyam. only son running successful family business, having own bungalow and other modern conveniences. Interested in music, yoga, ham radio. Cosmopolitan views but strict vegetarian and prefers limited social life. Marriage delayed since two younger sisters unmarried. Alliance is invited from accomplished girls interested in domestic life, belonging to affluent families Mandyam, Hebbar, Thangalai. age around 36/39 years. Height 158 cms. Employed girls should be willing to take voluntary retirement. Parents or guardians are invited to visit us in Madras for further discussion. No dowry. Simplye marriage. Send details with bio-data and horoscope to Box No. 6915, Alwarpet, Madras - 600 018.

## மணமகன் தேவை

* Alliance invited from well educated and placed Non-Bharadwaja Iyer boys for 28/154/Visakam, graduate Brahacharanam girl in Multinational at Delhi. Subsect no bar. Box No. 21161

* Alliance invited from Non-Haritha Brahacharnam boys Class I Officers/Executives well settled for very fair, good-looking girl M.Sc., B.Ed., PGDCA, 26, 160 employed Delhi. Reply to Box No. 21162

• பத்மசாலியர், வயது 25, +2 கம்ப்யூட்டர் சைன்ஸ், டைலரிங் பயிற்சி பெற்ற குடும்பப் பாங்கான பெண்ணிற்கு அதே இனத்தில் அரசு அல்லது தனியார் துறையில் பணிபுரியும் மண மகன் தேவை. விவரத்திற்கு ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 21163

• வடஆற்காடு, வடமாள் ஐயர், பாரத்வாஜ கோத்திரம், திருவாதிரை நட்சத்திரம், பி.எஸ்ஸி., பி.எட்., 21 வயது, பெண்ணிற்கு தகுந்த வரன் தேவை. மாநில அரசு, வங்கி, எல்.ஐ.சி. போன்ற நிறுவனங்கள் பெரிய கம்பெனிகளில் வேலையிலுள்ளவர்கள் விண்ணப்பிக்கலாம். உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 21164

• வடமாள், ஐயர், கௌண்டின்ய, 20, பி.காம்., டைப்ரைட்டிங், சி.ஏ. படித்துக் கொண்டிருக்கும் நடுத்தர, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த 28 வயதுக்குட்பட்ட CA/ICWA/ACS படித்து அரசு, தனியார் நிறுவனத்தில் பணிபுரியும் மணமகன் தேவை. ஜாதக விவரம் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 21166

* Wanted well employed groom for Vadama, 33 years, 5ft, Kousika, Moolam 2nd, SSLC, good-looking, decent family. Box No. 21167

• சேனையர் சமுதாயத்தைச் சேர்ந்த M.A. (Journalism) படித்து 24 வயது, குடும்பப்பாங்கு அறிந்த பெண்ணுக்கு அதே சமுதாயத்தில் படித்த நற்குணங்கள் கொண்ட அரசு, பொது, தனியார் நிறுவனங்களில் பணிபுரியும் அல்லது நிரந்தர வியாபாரத் தொழிலில் உள்ள 30 வயதிற்குட்பட்ட மணமகன் தேவை. அயல்நாட்டில் உத்தியோகத்தில் இருப்பவர்களும் எழுதலாம். ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண் : 21168

• சௌராஷ்டிரா குலம், எம்.காம்., 35, ரூ.3200- மாநில அரசு, நிரந்தர வேலை, சிகப்பு நிறம் மணமகளுக்கு மணமகன் தேவை. வீட்டார் பற்றிய விவரமும் ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண் : 21169

* Alliance for Telugu Brahmin, Mulakanadu, Kasyapam, Anusham girl, M.Com., 29, 163, Bank employed from well placed qualified same community boys, subsect no bar. Reply with horoscope to Box No. 21171

• மருத்துவர், 23 வயது, பி.காம்., பரணி நட்சத்திரம், அழகான, குடும்பப்பாங்கான பெண்ணிற்கு அதே இனத்தைச் சேர்ந்த மத்திய, மாநில அரசாங்க, தனியார் துறையில் நல்ல உத்தியோகத்திலிருக்கும் மணமகன் தேவை. ஜாதகம் மற்றும்

